# இந்திய வரலாறு

# 10



தமிழ்நாட்டுப்
பாட நூல் நிறுவனம்

# இந்திய வரலாறு

## பத்தாம் வகுப்பு

மனிதத்தன்மையற்ற செயல்<br>
தீண்டாமை : ஒரு பாவச்செயல்<br>
ஒரு பெருங்குற்றம்



தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
சென்னை

முதல் பதிப்பு—1983

**ஆசிரியர் :**

திரு. டி. ஆர். இராதாகிருஷ்ணன்,
முதல்வர்,
அழகப்பா மெட்ரிக்குலேஷன் பள்ளி,
புரசைவாக்கம்,
சென்னை

**மேலாய்வாளர்கள் :**

பேரா. இர. ஆலாலசுந்தரம்,
முதல்வர்,
அரசினர் கலைக் கல்லூரி,
தருமபுரி

திரு. எஸ். இராமமூர்த்தி,
தலைமையாசிரியர்,
பி. எச். இ. எல். மேல் நிலைப் பள்ளி,
திருச்சிராப்பள்ளி

**விலை : ரூ. 3-30**

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி. எஸ். எம். தாளில் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

அச்சிட்டோர் :
பகத் பிரிண்டர்ஸ், சென்னை-600 016

# பொருளடக்கம்

மனிதனிடம் எளிதில் ஒழுக்கத்தைப் புகுத்தவேண்டுமானால் மாணவப் பருவத்தில்தான் இயலும்.

—தந்தை பெரியார்

# 1. சிந்துச் சமவெளி நாகரிகம்

**அறிமுகம்**

"பாரத நாடு பழம் பெரும் நாடே
பாடுவமிஃதை யெமெக்கிலை ஈடே!"

என நம் தேசியக்கவி சுப்பிரமணிய பாரதியார் நம் தாய் நாடான இந்தியாவின் பெருமையையும் தொன்மையையும் பாடுகிறார்.

இவ்வாறு நம் நாட்டிற்குப் பெருமை சேர்த்தவைகளில் இன்றைக்குச் சுமார் 5,000 ஆண்டுகட்கு முன் சிந்துநதிச் சமவெளியில் சிறந்து விளங்கிய மக்களின் நாகரிகமும் ஒன்றாகும்.

சிந்துநதியும் அதன் கிளை நதிகளுமான ஜீலம், சீனாப், ராவி, பியாஸ், சட்லெஜ் ஆகியவை பாய்ந்து வளம் கொழித்த பிரதேசத்தில் இந்நாகரிகம் தோன்றிப் பின்னர் வட இந்தியா, இராஜஸ்தான், கத்தியவார் முதலிய இடங்களுக்குப் பரவியது.

**ஆதாரங்கள்**

இத்தகைய சிறந்த நாகரிகத்தைப் பற்றி நாம் அறிய ஆதாரங்களாய் இருப்பவை, இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சியினர் சில இடங்களில் அகழ்ந்து கண்ட அக்கால நகரங்களின் இடிபாடுகள், சின்னங்கள், முத்திரைகள், மக்கள் உபயோகித்த பாண்டங்கள், உலோகங்கள், கருவிகள், ஆயுதங்கள் முதலியனவாகும். இப்பணியில் முதன்முதல் ஈடுபட்டவர் 1922ஆம் ஆண்டு இந்தியத் தொல்பொருள் துறையின் டைரக்டர் ஜெனரலாய் இருந்த சர். ஜான் மார்ஷல் ஆவார்.

மார்ஷலும், ஆர். டி. பேனர்ஜியும் மொகஞ்சதாரோ (இறந்தவர்களின் நகரம்) என்ற இடத்தில் பூமியை அகழ்ந்தபோது இந்நாகரிகத்தின் சின்னங்களைக் கண்டனர். இது பாகிஸ்தானில் சிந்து மாகாணத்தில் லார்கானா மாவட்டத்தில் சிந்துநதியின் வலக்கரையில் அமைந்துள்ளது. டி. ஆர். சாகினி என்பவர் பஞ்சாப் பிரதேசத்தில் ஆராய்ச்சி செய்தார். அவர் கண்டு பிடித்த புதைந்த நகரம் ஹரப்பா என்ற இடத்தில் அமைந்திருந்தது. இது மேற்குப் பஞ்சாபில் சிந்துவின் உபநதியாகிய ராவி ஆற்றின் வலது கரையில் உள்ளது. இஃதும் பாகிஸ்தானில்தான்

இருக்கிறது. இந்திய யூனியனில் குஜராத் மாநிலத்திலுள்ள ரங்பூர், லோதால் என்னும் இடங்களிலும் இராஜஸ்தானத்திலுள்ள கலிபங்கன் என்னும் இடத்திலும் இந்நாகரிகத்தின் சின்னங்கள் அகழ்வாராய்ச்சியின்போது கண்டுபிடிக்கப்பட்டன.

**காலம்**

இந்நாகரிகம் கற்கருவிகளும் செப்புக்கலங்களும் பயன்படுத்தப்பட்ட காலத்தில், வடமேற்கு இந்தியாவிலும் சிந்து மாகாணத்திலும் வளர்ந்திருந்தது என்று வரலாற்று அறிஞர் கூறுகின்றனர். அக்காலம் கி.மு. 3250-லிருந்து கி.மு. 2750 வரை எனக் கணக்கிடப்பட்டுள்ளது. ஹரப்பா, மொகஞ்சதாரோ என்ற இரு நகரங்களும் சிந்துநதிப் பள்ளத்தாக்கில் சிறந்திருந்த ஒரு பேரரசின் தலைநகர்களாக இருந்திருக்கவேண்டுமென்று கருதப்படுகின்றன.

**நகரமைப்பு**

ஹரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய இவ்விரு நகரங்களில் பின்னதைப்பற்றிய செய்திகளே அகழ்வாராய்ச்சியில் அதிகம் கிடைத்திருக்கின்றன. இவைகளிலிருந்து நாம் பின்வருவன வற்றை அறியலாம் :

இரு இடங்களிலும் உள்ள நகரமைப்பு மிகவும் வியக்கத் தக்கதாயிருந்தது. முக்கியச் சாலைகள் 10 மீட்டர் அகலத்தில் சிறப்பாக, நேராக அமைந்திருந்தன. அவை பெரும்பாலும் வடக்குத் தெற்காகவும், கிழக்கு மேற்காகவும் ஒன்றையொன்று செங்கோணத்தில் வெட்டிக்கொள்ளும் வகையிலும் அமைந்திருந் தன. நகரத்தின் கீழ்ப்பகுதியில் பொதுமக்கள் வாழ்ந்தார்கள். உயரமான மேல் பகுதியில் நகரின் கோட்டை அமைந்திருந்தது. மிகச் சிறந்த பாதாள சாக்கடைத் திட்டமும் குடிநீர் விநியோகத் திட்டமும் இங்கே காணப்பட்டன. இவற்றைக் கொண்டு இந்நகரங்களில் மிகச் சிறந்த நகரப் பரிபாலனம் (ஆட்சிமுறை) இருந்திருக்க வேண்டுமென்று வரலாற்று வல்லுநர்கள் கருது கின்றனர்.

மொகஞ்சதாரோவில் பலவிதமான கட்டடங்கள் காணப் பட்டன. இவைகளில் இரண்டு, மூன்று அறைகளோடுகூடிய சிறிய வீடுகளிலிருந்து பல அறைகளும், இரண்டு, மூன்று மாடிகளும் கொண்ட அரண்மனை போன்ற கட்டடங்கள் ஒரு வகையாம். இவ்வீடுகள் மண்ணாலும் சுட்டச் செங்கற்களாலும் கட்டப்பட்டிருந்தன. பெரிய வீடுகளில் பாவப்பட்ட தரைகளும்

தாழ்வாரங்களும் காணப்பட்டன. பெரும்பாலும் ஒவ்வொரு வீட்டிலும் ஒரு கிணறும், குளியலறையும், கழிவுநீர்க் கால்வாயும் காணப்பட்டன.

மற்றொரு வகைக் கட்டடங்கள் சிறந்த அமைப்போடு பெரியதாகவும், கலைக் கண்ணோடும் கட்டப்பட்டிருந்தன. இவை பொதுக் கட்டடங்கள் ஆகும். இவை அரண்மனைகளாகவோ அன்றித் தானியக் களஞ்சியங்களாகவோ இருந்திருக்கலாம் எனக் கருதப்படுகின்றன.

அடுத்த மிக முக்கியமான மனத்தைக் கவர்கிற அமைப்புப் பெருங்குளமாகும். இக்குளம் 54 மீட்டர் நீளம், 33 மீட்டர் அகலம் கொண்ட ஓர் இடத்தின் மத்தியில் அமைந்திருந்தது. குளத்தின் நீளம் 12 மீட்டர், ஆழம் 2.5 மீட்டர், அகலம் 7 மீட்டர் ஆகும். இக்குளத்தைச் சுற்றியிருக்கிற முற்றங்களில் உடை



படம் 1. மொகஞ்சதாரோ பெருங்குளம்

மாற்றும் அறைகள் அமைந்திருந்தன. இருபுறமும் ஒழுங்கான படிக்கட்டுகளும் காணப்பட்டன. நீராடிய அசுத்த நீர் வெளியேறவும் வகை செய்யப்பட்டிருந்தது. பக்கத்து அறையிலுள்ள கிணற்றிலிருந்து குளத்திற்குத் தூய நீர்வரவு குழாய்கள் அமைக்கப்பட்டிருந்தன.

பெருங்குளத்தைத் தவிர நம் கவனத்தைக் கவரும் மற்றொரு முக்கியக் கட்டடம் 14 சிறிய வீடுகளைக்கொண்ட ஒருகுடியிருப்புப்போன்ற அமைப்பாகும். இது பணியாளர்கள் அல்லது தொழிலாளர்கள் இல்லங்களாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. இவ்வமைப்பு ஹரப்பா நகரில் காணப்பட்டது. கட்டடங்கள் கட்டுவதற்குச் சுட்ட அல்லது பச்சை செங்கற்களே உபயோகப் படுத்தப்பட்டன.

## மக்கள் வாழ்க்கை

### தொழில்கள்

மொகஞ்சதாரோ சின்னங்கள் அக்கால மக்களின் சமூகப் பொருளாதார வாழ்க்கைபற்றிய பல செய்திகளைத் தருகின்றன. இத்நாகரிக மக்கள் நகரங்களில் வசித்தனர். விவசாயம் இவர்களுடைய முக்கியத் தொழில். கோதுமை, பார்லி, பேரீச்சம் பழத்தை உணவுக்காகப் பயிர் செய்தனர். எள்ளும் கடுகும் இவர்கள் பயிரிட்ட எண்ணெய் வித்துகளாகும். பருத்தி பயிர் செய்யப்பட்டு நெசவுத்தொழில் செம்மையாக நடைபெற்றது. இம்மக்களது முக்கியத் தொழில் விவசாயமாகவே இருப்பினும், மட்கலன்கள் செய்தல், ஆடைகள் நெய்தல், மரவேலை, கட்டடம் கட்டுதல், உலோக வேலை, தந்த வேலை, விலையுயர் கற்கள் செதுக்குதல் முதலிய தொழில்களும் சிறப்பாக நடைபெற்றன. எனவே,இவற்றில் சிறந்த குயவர்,நெசவாளர், தச்சர், கொத்தர், கொல்லர் முதலிய தொழிலாளர்களும் இருந்தனர் எனத் தெரிகிறது.

### உணவும் வீட்டு விலங்குகளும்

இவர்களது உணவு கோதுமை, பார்லி, பேரீச்சம்பழம், மற்றும் அவரை போன்ற கொடிக்காய்களும் ஆகும்.

ஆடு, மாடுகள், கோழிகள் முதலியன வீட்டில் வளர்க்கப் பட்டன. எனவே இவற்றின் இறைச்சி, முட்டை, பால் முதலியன அம்மக்களின் உணவாக அமைந்தன. மேலும் உணவிற்காகப் பன்றி, எருமை, பலவகையான மான்கள் முதலிய பிராணிகளும் வேட்டையாடப்பட்டன. நாய்களும், பூனைகளும், யானைகளும், ஒட்டகங்களும் கூட பழக்கப்பட்டு வீடுகளில் வளர்க்கப் பட்டன.

### ஆடை அணிகலன்கள்

இவர்களது உடை பெரும்பாலும் பருத்தியாலும், கம்பளத்தாலும் ஆகியது. இவர்கள் தங்கத்தாலும், வெள்ளியாலும்,

தந்தத்தாலும், செம்பாலும், மதிப்புமிக்க கற்களாலும் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்தனர். ஆடவர், பெண்டிர் ஆகிய இருபாலரும் கழுத்தணியும், வங்கியும், மோதிரமும், வளையல்



படம் 2. சிந்து வெளி மக்களின் அணிகலன்கள்

களும் அணிந்தனர். ஒட்டியாணம், மூக்குத்தி, தோடு, கொலுசு முதலிய அணிகலன்கள் பெண்களால் மட்டுமே அணியப்பட்டன.

### பாத்திரங்களும் பிற கருவிகளும்

வீட்டு உபயோகத்திற்கான கலன்கள் பெரும்பாலும் களி மண்ணால் ஆகியவை. இவை குயவர் சக்கரத்தால் ஆக்கப் பட்டவை. இவற்றைத் தவிரச் செம்பு, வெண்கலம், வெள்ளி, பீங்கான் இவற்றாலான பாத்திரங்களின் உபயோகத்தையும் இம் மக்கள் அறிந்திருந்தனர். கோடாரி, உளி, அரிவாள் முதலிய பிறகருவிகளும் செம்பாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்டு உபயோகப்படுத்தப்பட்டன. தந்தத்தாலான ஊசிகளும் சீப்பு களும் இம்மக்களால் பயன்படுத்தப்பட்டன. இருப்பினும், சிந்துச் சமவெளி நாகரிக மக்களுக்கு இரும்பின் உபயோகம் தெரியாது.

### போராயுதங்கள்

கோடாரி, ஈட்டி, குத்துவாள், கதை, கவண், வில், அம்பு முதலியவையே இவர்கள் போராயுதங்களாகும். வாள், கேடயம், கவசம் போன்ற தற்காப்பு ஆயுதங்களை இக்கால மக்கள் அறியார்.

### கலையும் கைத்தொழிலும்

சிந்துச் சமவெளி நாகரிக மக்கள் கலையிலும் கைத்தொழிலும் மிக்க ஏற்றம் பெற்றிருந்தனர். முத்திரைகள் செய்தல் இவர்களது முக்கியத் தொழில். மொகஞ்சதாரோவில் 500-க்கு மேற்பட்ட இம் முத்திரைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவைகளில் பல மிருகங்களின் உருவங்கள் அழகாகப் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ஒருசிலவற்றில் எழுத்துகளும் காணப்படுகின்றன. ஆனால் அவை சொல்லும் செய்தியின் பொருளைத் திட்டவட்டமாக அறிய முடியவில்லை. சில களிமண்ணாலான



படம் 3.
மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட குழந்தைகளின் விளையாட்டுப் பொம்மைகள்

உருவங்களும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. மொகஞ்சதாரோவில் கிடைத்த எருதுச் சிலையும் குரங்குச் சிலையும் ஹரப்பாவில் கிடைத்த வெண்கலத்தாலான நடனமாதின் சிலையும் இக்கால மக்கள் சிற்பக்கலை, நடனக்கலை ஆகியவற்றில் தேர்ச்சிபெற்றிருந்தனர் என்பதைக் காட்டுகின்றன. குழந்தைகளுக்கான பொம்மைகள் செய்யும் தொழிலும் நன்கு அமைந்திருந்தது என்பதனை மொகஞ்சதாரோவில் கிடைத்த குருவி, முயல், நாய், குழந்தைகள் விளையாடும் இருசக்கர வண்டி முதலிய பொம்மைகள் நிரூபிக்கின்றன.

### சமயம்

சிந்துநதிச் சமவெளி நாகரிக மக்கள் ஒரு பெண் தெய்வத்தை முதன்மையாக வழிபட்டனர். இத்தெய்வம் வயல் வளம் கொழிக்கவும், மனைவளம் சிறக்கவும் செய்யும் சக்தி கொண்டது

எனக் கருதப்பட்டது. இச்சக்தி தெய்வத்தைத் தவிரச் சிவன் அல்லது பசுபதி என்ற ஆண் தெய்வமும் இவர்களால் வணங்கப் பட்டது. மொகஞ்சதாரோ, ஹரப்பா முதலிய இடங்களில் கிடைத்த சில முத்திரைகளில் இக்கடவுள் 'மும்முகத்துடன்' இருபுறமும் கொம்புகளுடைய ஒரு தலை அணியை அணிந் திருப்பது போலவும் ஒரு யோகியின் நிலையில் அமர்ந்திருப்பது போலவும் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இதனைச் சுற்றி யானை, புலி, காட்டெருமை, எருமை முதலிய விலங்குகள் இருப்பது போலவும் இதன் காலடியில் இரு மான்கள் இருப்பது போலவும் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஹரப்பா நாகரிக மக்கள் வணங்கிய இவ்விரண்டு தெய்வங்கள்தாம் பிற்காலத்தில் இந்து சமய மக்கள் வணங்கிவரும் சிவனுக்கும் சக்திக்கும் முன்னோடியாக அமைந்தன என்று சில வரலாற்று அறிஞர் கருதுகின்றனர். இவர்கள் மரங்களையும், கற்களையும், பல மிருகங்களையும் கூட தெய்வமாகத் தொழுதார்கள். மேலும் இவர்களிடையே லிங்க வழிபாடும், நாக வழிபாடும் இருந்தன என்றும் தெரியவருகிறது. இவ்வாறு பிற்கால இந்து சமயத்தின் பல தன்மைகள் இவர்கள் சமயத்தில் இருப்பதால் பிற்கால இந்து சமயம் இதன் தொடர்பே எனச் சில வரலாற்று வல்லுனர்கள் கூறுகின்றனர்.

**வாணிபம்**

சிந்துநதிச் சமவெளி மக்கள் காலத்தில் உள்நாட்டு, வெளி நாட்டு வாணிபம் சிறந்து விளங்கி இருக்கவேண்டுமென்று சில கண்டுபிடிப்புகளிலிருந்து தெரியவருகிறது. ஒரே சீரான எடைக் கற்களையும் அளவுக் கருவிகளையும் இவர்கள் உபயோகித்தது, அக்காலத்தில் வியாபாரம் ஒழுங்காக நடைபெற்றதைக் குறிக் கின்றது. உள்நாட்டு வாணிபத்தைத் தவிர, வெளிநாடுகளோடும் குறிப்பாகச் சுமேரியா, ஈரான், (பாரசீகம்) முதலியவற்றுடன் இவர்கள் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர் எனவும் தெரிய வருகிறது. குஜராத் மாநிலத்திலுள்ள அகமதாபாத் மாவட் டத்தில் அமைந்த லோதால் என்ற இடம் ஒரு முக்கியத் துறைமுக மாக இருந்திருக்க வேண்டுமென்றும் இதன் மூலம் மேற்காசிய நாடுகளுக்குப் பொருள்கள் கடல் வழியாக அனுப்பப்பட்டன எனவும் தெரிகிறது. மேற்காசிய நாடுகளில் ஹரப்பா முத்தி ரைகள் கிடைத்ததிலிருந்து இவ்வெளிநாட்டு வர்த்தகம் உறுதி செய்யப்படுகிறது. பிற நாடுகளிலிருந்து தங்கம், வெள்ளி, ஈயம், பளிங்கு, செவ்வந்திக்கல் போன்ற பல பொருள்களும் இந் நாட்டிற்கு இறக்குமதி செய்யப்பட்டன.

## எழுத்துக் கலை

சிந்துச் சமவெளி மக்கள் ஒருவிதமான சித்திர எழுத்துகளை உபயோகித்தனர் எனச் சில முத்திரைகளிலிருந்து தெரிய வருகிறது. இம்முறைப்படி முதல் வரி வலப்புறத்திலிருந்து இடதுபுறம்வரை சென்று மீண்டும் இடப்புறம் தொடங்கி அடுத்தவரி எழுதப்பட்டது. இவ்விசித்திர எழுத்துகள் குறிக்கும் பொருள் இன்னும் சரியாக அறியப்படவில்லை. இந்திய வரலாற்று அறிஞரான ஹீராஸ் பாதிரியார் சிந்துவெளி மக்களின் எழுத்துக் கலை தமிழைப்போன்றது என்று கருதுகிறார். லாங்டன் என்னும் மற்றொரு வரலாற்றுப் பேரறிஞர் பிராமி எழுத்துக் கலை சிந்துவெளி எழுத்துக் கலையிலிருந்து தோன்றி யிருக்கலாம் எனக் கருதுகிறார். தற்காலத் தென்னிந்திய வரலாற்றுப் பேரறிஞரான ஐராவதம் மகாதேவன் என்பவர் சிந்து எழுத்துக் கலை பழங்காலத்திய திராவிட எழுத்துக் கலையே என்று அறுதியிட்டுக் கூறுகிறார்.

## பிற நாகரிகங்களுடன் ஒப்புநோக்கு

சிந்துநதிச் சமவெளி நாகரிகத்தையும், பிற்காலத்தில் தோன்றிய ஆரிய நாகரிகத்தையும் ஒப்பு நோக்குவோம். இவ்விரு நாகரிக மக்களும் இறைச்சி உண்டனர். தங்கம், வெள்ளி, செம்பு, வெண்கலம் ஆகியவற்றாலான பொருள்களையும் ஆபரணங்களையும் பயன்படுத்தினர். நூல் நூற்று ஆடை நெய்தனர். மேற்சொன்னவை இவ்விரு நாகரிகத்திற்கும் பொது வான அம்சங்களாகும்.

இவ்விரு நாகரிகங்களும் சில தன்மைகளில் வேறுபட்டன. அவற்றைக் காண்போம்:

1. சிந்துவெளி நாகரிகம் நகர நாகரிகம்; ஆரிய நாகரிகம் கிராம நாகரிகம்.

2. சிந்துவெளி மக்கள் விலங்குகளில் குதிரையை அறிந்தா ரில்லை; ஆரியர்களோ குதிரையைப் போரிலும் அன்றாட வாழ்க்கையிலும் பயன்படுத்தினர்.

3. சிந்துவெளி மக்கள் எருதினைப் புனிதமாகக் கருதினர்; ஆயின் ஆரியரோ பசுவினைப் புனிதமாகக் கருதினர்.

4. சிந்துவெளி மக்கள் உலோகங்களில் இரும்பின் பயனை அறிந்திருக்கவில்லை; ஆனால் ஆரியரோ இரும்பை ஆயுதம், பிற கருவிகள் முதலியன செய்வதற்கு உபயோகித்தனர்.

5. சிந்துவெளி மக்கள் மரங்களையும், விலங்குகளையும், சிலைகளையும் வணங்கினர்; ஆரியரோ ஆரம்பத்தில் இயற்கைத் தோற்றங்களையே தெய்வங்களாகக் கருதி வணங்கி வந்தனர்.

6. சிந்துவெளி நாகரிகம் காலத்தால் ஆரிய நாகரிகத்திற்கு முந்தியது.

### எகிப்திய நாகரிகத்தோடு ஒப்புநோக்கு

1. நைல்நதி நாகரிக எகிப்திய மக்கள் ஆடைகள் நெய்ய சணலையே அதிகமாகப் பயன்படுத்தினர். ஆனால், சிந்துநதி நாகரிக மக்களோ பருத்தியையே அதிகமாக ஆடைகள் நெய்ய பயன்படுத்தினர்.

2. எகிப்தியப் பிரபுக்கள் மிகப் பெரிய அரண்மனைகளில் வசித்தனர். பெரிய ஆலயங்களை எழுப்பினர். ஆனால் சிந்து நதி மக்களோ அவ்வளவு பெரிய ஆலயங்களையோ, அரண்மனை களையோ எழுப்பவில்லையெனக் கருதப்படுகிறது.

3. நைல்நதி நாகரிக காலத்தில் சாதாரண மக்கள் குடிசை களில் வாழ்ந்தார்கள். ஆனால் சிந்துவெளி நாகரிக மக்கள் திட்டமிட்டு நன்றாகக் கட்டப்பட்ட வீடுகளில் வாழ்ந்தார்கள். எனவே, சர். ஜான் மார்ஷல் அக்காலத்திய நாகரிகங்கள் அனைத்திலும் சிந்துச் சமவெளி நாகரிகமே சிறந்தது எனக் கருதுகிறார்.

### சிந்துச் சமவெளி நாகரிக மறைவு

1. இச்சீரிய நாகரிகம் நாளடைவில் பின்வரும் காரணங் களால் சீர்குலைந்து மறைந்துவிட்டதாகக் கருதப்படுகிறது. சிந்துநதியில் அடிக்கடி ஏற்பட்ட வெள்ளப்பெருக்கும் அதன் போக்கு மாறுபாடும் இந்நகரங்களை அழித்தன.

2. காடுகள் மரவேலைக்காக அழிக்கப்பட்டதால் மழை குறைந்து வளம் குன்றி இந்நாகரிகம் நாசம் அடைந்தது.

3. ஆரியாகள போன்ற அந்நியர் தாக்குதலாலும் சிந்து வெளி நாகரிக நகரங்கள் அழிவுற்றன என்றும் கருதப்படுகிறது.

இருப்பினும், இந்நாகரிகத்தின் சீரிய பண்புகள் பிற்கால ஆரிய நாகரிகத்திலும் கலந்துவிட்டன. எனவே, இந்நாகரிகம் முற்றிலும் வேரோடு அழிந்துவிட்டதாகக்கருதமுடியாது. பிற்கால ஆரியர்களின் ஆலய வழிபாடு, லிங்க வழிபாடு, சக்தி வழிபாடு,

நாக வழிபாடு முதலியன சிந்து மக்களின் சமய வழிபாட்டின் தொடர்ச்சியேயாம். இவற்றை இன்றைய இந்து சமயத்திலும் காணலாம்.

சிந்துவெளிச் சின்னங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் எழுத்து களின் பொருள் திட்டவட்டமாக அறியப்பட்டால் இம்மக்களின் வரலாறு, சமூக நிலை இவற்றைப்பற்றி மேலும் புதிய செய்திகள் கிடைக்கக்கூடும்.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு இரண்டு அல்லது மூன்று வரிகளில் விடையளிக்கவும்:

1. சிந்துச் சமவெளி நாகரிகத்தைப் பற்றி நாம் அறிய உதவும் சான்றுகள் இந்திய யூனியனிலும் பாகிஸ் தானிலும் எங்கெங்குக் கிடைத்துள்ளன?

2. சிந்துச் சமவெளி நாகரிகத்தின் காலத்தைக் குறிப்பிடுக.

3. ஆரியர்களுக்கும் சிந்துவெளி நாகரிக மக்களுக்கும் இடையே உள்ள இரண்டு சமய வேற்றுமைகளைக் குறிப்பிடவும்.

II. பின்வரும் வினாக்களில் கோடிட்ட இடங்களைச் சரியான விடைகொண்டு பூர்த்தி செய்க:

1. ஆரிய நாகரிகம் —— நாகரிகம்; ஆனால் சிந்துவெளி நாகரிகம் —— நாகரிகம்

2. சிந்துநதிச் சமவெளி நாகரிகத்தின் சின்னங்கள் மேற்கு பஞ்சாப்பில் —— என்ற இடத்திலும் இந்திய யூனியனில் —— மாநிலத்திலுள்ளலோதால் என்னும் இடத்திலும் கிடைத்துள்ளன

3. விலங்குகளில் ஆரியர் —— புனிதமாகவும், சிந்துவெளி மக்கள் —— புனிதமாகவும் கருதி வழிபட்டனர்

**III.** பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் மாற்று விடைகள் நான்கு கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்றே சரியானது. அது குறிக்கும் எழுத்தை வலப்புறப் பிறையடையில் எழுதுக :

1. சிந்துச் சமவெளி நாகரிகத்தைப் பின்வரும் காலம் எனக் குறிக்கலாம்

   (அ) பழைய கற்காலம் ( )
   (ஆ) புதிய கற்காலம்
   (இ) செம்புக் காலம்
   (ஈ) இரும்புக் காலம்

2. சிந்துவெளி மக்கள் மிக முக்கியத்துவம் கொடுத்த தெய்வம்

   (அ) லிங்கம் ( )
   (ஆ) நாகம்
   (இ) அன்னை (பெண் தெய்வம்)
   (ஈ) அரசமரம்

3. சிந்துச் சமவெளி மக்களின் எழுத்துமுறை

   (அ) பிராமிமுறை ( )
   (ஆ) தமிழ் எழுத்துமுறை
   (இ) தேவநாகிரி
   (ஈ) சித்திர எழுத்துமுறை

4. சிந்துவெளி நாகரிக மக்களின் முக்கிய ஏற்றுமதி இறக்குமதித் துறைமுகமாக விளங்கியது

   (அ) ஹரப்பா ( )
   (ஆ) மொகஞ்சதாரோ
   (இ) கலிபங்கன்
   (ஈ) லோதால்

**IV.** பின்வரும் வினாக்களுக்கு 10 வரிகளில் விடை தருக :

1. மொகஞ்சதாரோவின் நகர அமைப்பு எவ்வாறு இருந்தது?

2. சிந்துச் சமவெளி நாகரிக மக்களின் சமய வாழ்க்கையினைப்பற்றிக் குறிப்பிடுக.

3. சிந்துச் சமவெளி மக்களின் பொருளாதார வாழ்க்கை எவ்வாறு இருந்தது?

4. சிந்துச் சமவெளி மக்களின் எழுத்துமுறை, கலை இவற்றைப் பற்றிக் குறிப்பு வரைக.

V. ஒரு பக்கத்தில் விடையளிக்கவும்:

1. சிந்து நாகரிகத்தை ஆரிய நாகரிகத்தோடும், எகிப்து நாகரிகத்தோடும் ஒப்பிடுக.

2. சிந்துநதி நாகரிகம் மிகச் சிறந்ததென்பதை நிறுவுக.

VI. இந்தியாவின் படம் வரைந்து பின்வருவனவற்றைக் குறிக்கவும்:

1. ஹரப்பா 2. மொகஞ்சதாரோ 3. லோதால்
4. கலிபங்கன் 5. சிந்துநதியும் அதன் உபநதிகளும்
6. பஞ்சாப்

## செய்முறைப் பயிற்சி

1. இந்தியாவின் படம் வரைந்து குறிப்பாக அதனில் சிந்துவெளி நாகரிகத் தடையங்கள் கிடைத்த இடங்களைச் சுட்டிக் காட்டுதல்.

2. சிந்துநதி நாகரிகத்தின் சிறப்புகளை விளக்கும் முத்திரைகள், படங்கள், எழுத்துகள் இவற்றைப் பற்றிய படங்களைச் சேகரித்தல்.

3. சிந்துநதி நாகரிகம் இந்தியக் கலாச்சாரத்திற்கு உதவியதைப் பற்றி உரையாடல்.

# 2. ஆரிய - திராவிடப் பண்பாடுகளின் இணைப்பு

## அறிமுகம்

சென்ற பாடத்தில், இந்தியாவில் மிகச் சிறந்திருந்த பண்டை நாகரிகமான சிந்துவெளி நாகரிகத்தைப்பற்றிப் படித்தோம். அதற்குப் பின்னர், வரலாற்றுத் தொடக்கக் காலத்தில், மிகச் சிறந்து விளங்கிய மற்றொரு பண்பாடு ஆரியப் பண்பாடாகும். அவர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன்னமேயே திராவிடர்கள் சிறந்ததொரு நாகரிகத்தைப் பெற்றிருந்தார்கள். இவ்விரு நாகரிகங்களும் எவ்வாறு இணைந்து இந்திய நாகரிகத்திற்குச் சிறப்பை அளித்தன என்பதை இப்பாடத்தில் காண்போம்.

## திராவிட நாகரிகம்

திராவிடர்கள் யார்? அவர்களின் பூர்விகக் குடியிருப்பு எங்கே? என்பதுபற்றி வேறுபட்ட கருத்துகள் உள்ளன. ஒரு கருத்து, திராவிடர்கள் ஆரியர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன்னரே வட இந்தியாவில் இருந்தனர்; ஆரியர்கள் வடக்கே வந்த காரணத்தால் இவர்கள் தென்னிந்தியாவிற்குச் சென்றனர் என்பதாம். மற்றொரு கருத்து, திராவிடர்கள் தமிழகத்தைச் சேர்ந்தவர்கள்; அங்கிருந்து வடஇந்தியா விற்குச் சென்றனர் என்பதாம். பெரும்பாலான அறிஞர்களின் கருத்துத் திராவிடமொழி பேசிய கூட்டத்தார், கிழக்கு மத்தியதரைக் கடற்கரைப் பிரதேசத்திலிருந்து, கடல் கடந்து, இந்தியாவின் தென்பகுதியை வந்தடைந்தனர் என்பதே யாம். இருப்பினும் தற்போது திராவிடர் தமிழகத்தில் இருந்த வரே என்னும் கருத்து வலியுறுத்தப்பெற்று வருகின்றது.

திராவிடப் பண்பாடு, ஆரியப் பண்பாட்டினின்றும் முற்றி லும் வேறுபட்டது எனச் சில அறிஞர்கள் கருதுகின்றனர். எனவே, திராவிடப் பண்பாட்டின் முக்கிய இயல்புகளை முதலில் காண்போம்.

திராவிட நாகரிகம், தனிசிறந்த, உயர்ந்த நாகரிகம். திராவிட மக்களின் முக்கியத் தொழில் வேளாண்மையேயாகும். வேளாண்மைத் தொழிலோடு, நெய்தல், ஆடுமாடுகள் வளர்த்தல்,

மண்பாண்டங்கள் செய்தல், கப்பல் கட்டுதல் முதலிய தொழில் களும் அவர்களால் சிறப்பாக மேற்கொள்ளப்பட்டன. ஆறு களுக்குக் குறுக்கே அணைகளைக் கட்டி நீர்ப்பாசன வசதி செய்யும் முறையை அவர்கள் பின்பற்றினார்கள். 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்பதற்கேற்ப திராவிடர்கள் பாரசீகம், சுமேரியா, எகிப்து, ரோமாபுரி முதலிய நாடு களோடும் வாணிபத் தொடர்பு கொண்டார்கள். தமிழகத் திலிருந்து அரிசி, தேக்கு, சிறந்த பருத்தி ஆடைகள், மயிர்ப்பீலி முதலியன அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

திராவிடர்கள் வீரமிக்கவர்கள்; வில், அம்பு, ஈட்டி, வாள் போன்ற போராயுதங்களை நன்றாகப் பயிற்சி பெற்று உபயோகித்தார்கள். அக்காலத்துத் திராவிடரிடையே சாதிப் பாகுபாடோ பிரிவினையோ இருந்திருக்கவில்லை. வயிற்றுக்குச் சோறிடும் மண்ணையும், நிழல், கனி கொடுக்கும் மரங்களையும் பாம்பினையும் முதலில் இவர்கள் கடவுளாக வழிபட்டனர். லிங்க வழிபாடும் இவர்களிடையே இருந்தது. இவர்கள் இறந்த வர்களைப் புதைத்தார்கள்.

திராவிட சமூகத்தில் அரசியல் தலைவன் மன்னனே. எனவே, மக்கள் கோட்டை கொத்தளங்களால் பாதுகாக்கப்பட்ட நகரங் களிலும் கிராமங்களிலும் வாழ்ந்தார்கள்.

மக்கள் சமுதாயம், நிலங்களின் அடிப்படையில் பிரிக்கப் பட்டிருந்தது. நால்வகை நிலங்களாவன, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாகும். பின்னர் பாலை நிலமும் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

திராவிடர்கள் தங்கம், முத்து, பவளம் முதலியவற்றாலான அணிகலன்களை அணிந்தனர். இசையில் தேர்ச்சி பெற்றிருந் தனர். குழலும், யாழும் இவர்கள் போற்றிய இசைக் கருவிகளாகும்.

திராவிடர்கள் அமைதியை மிகவும் நாடினர். போர் தொழிலில் பெருவிருப்புடையோர் அல்லர்.

## ஆரிய நாகரிகம்

ஆரியர்கள் மத்திய ஆசியாவிலிருந்து கி. மு. 2000-ம் ஆண்டில் இந்தியாவின் வடமேற்கேயுள்ள, கைபர்-போலன் கணவாய்களின் வழியாக, இந்நாட்டில் குடியேறினர் என்பது பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட கருத்தாகும். இவர்கள்

முதலில் ஆப்கானிஸ்தான் பிரதேசத்திலும், பின்பு பஞ்சாப் பிரதேசத்திலும் கி. மு. 2000-த்திலிருந்து கி.மு. 1500 வரை தங்கினர். பின்னர் படிப்படியாகக் கிழக்கு நோக்கிப் பரவி கங்கை, யமுனை நதிச் சமவெளிகளிலும் குடியேறினர். இவர்கள் குடியேறிய பிரதேசம் ஆரியவர்த்தம் என அழைக்கப் பட்டது.

இவ்வாரியர்களைப் பற்றி, நாம் பல செய்திகளை அறிய ஆதாரமாக இருப்பவை அவர்களின் நான்கு வேதங்களான ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்களேயாகும். இவற்றைத் தவிர, பிரமானங்கள், உபநிடதங்கள், ஆரணியகங்கள், இராமா யணம், மகாபாரதம் போன்ற வீர காவியங்கள் மூலமாகவும் ஆரியர்களின் வாழ்க்கைமுறை, அரசியல் முன்னேற்றம், பழக்க வழக்கங்கள் இவற்றைப்பற்றி அறியலாம்.

தமது கால்நடைகளோடு முதலில் இடம்விட்டு இடம் சென்று நாடோடி வாழ்க்கை வாழ்ந்த ஆரியர்கள் பஞ்சாபில் கிராமங் களை அமைத்துத் தங்கலாயினர். பல குடும்பங்கள் சேர்ந்தது ஒரு கிராமமாகும். குடும்பத்தின் தலைவன் தகப்பனேயாவான்.

வேதகால ஆரியர்களின் அரசு முடியரசாகும். இவற்றைத் தவிர ஒருசில குடியரசுகளும் இருந்தன. ஆரிய மன்னன் இராஜன் என அழைக்கப்பெற்றான். அவனுக்கு ஈடு இணை யாரும் இல்லை. அவன் பகைவரை அழிப்பான், மக்களைக் காப்பான். துவக்கத்தில் அரசன் தேர்ந்தெடுக்கப்பட்டான். நாளாவட்டத் தில் இது மாறிற்று. மன்னன் மணிமுடி தந்தைக்குப் பின்னர் மூத்த பிள்ளைக்கு வழிவழியாகச் செல்லும் மரபு ஏற்பட்டது. மட்டற்ற அதிகாரத்தை உடையவனாய் இருந்தாலும், மன்னன் தன் அதிகாரிகளைக் கலக்காமல் ஆட்சிபுரிய முயலான். மன்னனுக்கு நிர்வாகத்தில் உதவிசெய்ய அமைச்சரவை ஒன்றும் இருந்தது. இவ்வமைச்சர்களைத் தவிர, சமிதி, சபா என்ற இரண்டு ஆலோசனைக் குழுக்களும் நாட்டையாள மன்னனுக்கு உதவி புரிந்தன. சமிதி என்ற அவையில் இளவரசர்களும் அதிகாரிகளும் உறுப்பினராக இருந்தனர். மூத்தோரும் பிரபுக் களும் அங்கம் வகித்த சபா, நாட்டின் முக்கியப் பிரச்சினைகளை விவாதித்து நீதி வழங்கியது. மேலும் அரசர்க்கு, நாட்டு நிர்வா கத்தில் உதவிபுரிய புரோகிதர், சேனாபதி, கிராமணி ஆகியோர் நியமிக்கப்பட்டனர். கிராமணி கிராமத்தின் தலைவனாவான்.

ஆரியர்கள் கங்கைச் சமவெளியில் குடியேறியபோது பல பெரிய இராச்சியங்கள் ஏற்பட்டன. அவைகளில் முக்கிய

மானவை கோசலை, காசி, மகதம், விதேகம், குரு, பாஞ்சாலம் முதலியனவாகும். அரசர்கள் தங்கள் வீரத்தையும், பெருமை யையும் விளக்கும் முறையில் ஏக்ராட், சாம்ராட் என்ற சிறப்புப் பெயர்களைச் சூட்டிக்கொண்டனர். மன்னர்கள் தங்கள் போரில் பெற்றிட்ட வெற்றியைக் கொண்டாடவும் தங்கள் தனிப்பெருந் தலைமையைக் குறிக்கவும், அசுவமேத யாகம், வாஜபேய யாகம், ராஜசூயம் முதலியவேள்விகளைச் செய்தனர். இருப்பினும், மக்களைப் புரத்தலே மன்னனின் தலையாய கடமையா யிருந்தது.

தொடக்கத்தில் ஆரியர்களிடையே சாதிப்பாகுபாடு கிடையாது. ஆனால் அவர்கள் கங்கைச் சமவெளியில் குடியேறிய பிறகுதான் நால்வகை சாதிகள் தோன்றின. அவையும் பிறப்பு அடிப்படையிலில்லாமல், தொழில் அடிப்படையிலேயே அமைந்தன என்பதும் கவனத்திற்குரியது. காலம் செல்லச்செல்ல இது பிறப்பு அடிப்படையில் அமைந்து உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி எனப் பாகுபாடுகள் தோன்றின.

தொடக்கத்தில் ஆரியர்கள் இயற்கையின் தோற்றங்களைத் தெய்வங்களாக வழிபட்டனர். விக்கிரகங்களுக்கு அங்கே வேலை யில்லை. ஆனால் திராவிடர்களோடு தொடர்பு ஏற்பட்டபின், அவர்களும், திராவிட தெய்வங்களான சிவன், முருகன் முதலிய கடவுளர்களையும் வழிபட்டார்கள்.

கங்கைச் சமவெளியில் குடியேறியபோது வேளாண்மையும், கைத்தொழிலும், வாணிபமும் ஆரியர்களின் முக்கியத் தொழில் களாயின.

விரைவில் ஆரியர்கள், ஆரியரல்லாதார்மீது தங்கள் ஆட்சி யினை ஏற்படுத்தினர். இதிகாச காலத்திற்குப் பின்னர் ஆரியர்களின் செல்வாக்குத் தென்னிந்தியாவிலும்மேலோங்கியது. இருப்பினும் அவர்கள் காலப்போக்கில் திராவிடர்களுடன் இனம் காணமுடியாதப்படி இரண்டறக் கலந்துவிட்டனர்.

## இரு பண்பாடுகளின் இணைப்பு

### ஆன்மீக இணைப்பு

ஆரிய, திராவிடப் பண்பாடுகளிரண்டும் நாளடைவில் ஒன்றோடொன்று கலந்துவிட்டன. ஒருவரது பழக்க வழக் கங்களை மற்றவர் மேற்கொண்டனர். உதாரணமாக முதலில் இயற்கைத் தெய்வங்களான, அக்கினி, இந்திரன், வருணன்,

வாயு முதலியவற்றை வணங்கிய ஆரியர்கள் பிற்காலத்தில் சிவன் (சங்கரன்) போன்ற தெய்வங்களைத் தொழ ஆரம்பித்தனர். இது திராவிடர் தொடர்பால் நிகழ்ந்தது. திராவிடர்களின் கடவுளான குன்றுதோராடும் முருகன், ஆரிய வழிபாட்டிலும் இடம் பெற்றான். காலப்போக்கில் திராவிடர்களும் ஆரிய முறையில், சடங்குகளோடு கூடிய வழிபாடுகளை மேற்கொண்டனர். ஆரியர்களின் கருத்துகளான ஊழ்வினைப்பயன், மறுபிறப்புக்கொள்கை ஆகியவற்றை திராவிடர்களும் ஏற்றுக்கொண்டனர். இவற்றை ஆரிய-திராவிட ஆன்மீக இணைப்பு எனக் கருதலாம்.

**சமூக இணைப்பு**

ஆரியர்கள் கங்கைச் சமவெளியில் குடியேறிய பின்னர், திராவிடர்களோடு திருமண உறவும் கொண்டனர். ஆரியர்களின் கடுமையான சாதிப்பிரிவு, திராவிடர்களிடையேயும் புகுந்தது. நிலத்தின்பால், முன்பு ஏற்பட்டிருந்த மக்கள் பாகுபாடு, நாளடைவில் தொழிலின் அடிப்படையில் முற்றி, சாதிப் பிரிவினையில் முடிந்தது.

ஆரியர்களின் மொழி சமஸ்கிருதம் என்ற வடமொழியாம். நாளடைவில் இம்மொழியும், தமிழ்மொழியும் நெருங்கிய உறவு பூண்டன. பல வடமொழிச் சொற்கள் தமிழ் வழக்கில் வந்தன. அவ்வாறே வடமொழியிலும் பல தமிழ்ச் சொற்கள் புகுந்தன.

வினைப்பயன், ஊழ் ஆகிய கருத்துகள் இந்தியா முழுவதிலும் வடக்கேயிருந்து தெற்கே வரை எல்லா மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு, சாதி அடிப்படையினை நியாயமாக்கியது. இதன்படி, ஒரு மனிதன் தான்செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப மீண்டும் பிறக்கிறான் என்ற கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது. வினைப்பயன் என்ற கருத்தினை திராவிடரும் ஏற்றுக்கொண்டனர்.

தற்கால இந்தியாவில் இவ்விரண்டு பண்பாடுகளின் இணைப்பினைக் காண்கிறோம். இந்தியப் பண்பாட்டிலே ஆரியம், திராவிடம் என்ற இரண்டு சீரிய பண்பாடுகளின் சிறப்பையும் காண்கிறோம். கலப்புமணங்களின் மூலமும், எவரும் எத்தொழிலும் செய்யலாம் என்ற உரிமை மூலமும், சாதிபேதமற்ற சமதர்ம சமுதாயத்தை உருவாக்க நாம் பல முயற்சிகளை வெற்றியோடு செய்து வருகிறோம். கடுமையான, கொடுமையான சாதிப் பிடிப்புக்கு அப்பால் நின்று நாம் எல்லோரும்

முதலிலும் இந்தியர்கள்; முடிவிலும் இந்தியர்கள்தாம் என்ற ஒருமைப்பாட்டுணர்வை ஏற்படுத்த முயன்று வருகிறோம். மாநிலம், மொழி, சமயம் இவைகளைக் கடந்து "நாம் எல்லோரும் ஓரினம்; நாம் எல்லோரும் ஓர்குலம்; நாம் எல்லோரும் இந்திய மக்கள்" என்ற நிலையை ஏற்படுத்தி வருகிறோம். இந்தியப் பண்பாடு நம் எல்லோரையும் இணைக்கிறது. நம் தேசியக்கவி பாரதியார் கூறுவதுபோல, "பாரத பூமி பழம்பெரும் பூமி, நீரதன் புதல்வர் இந்நினை வகற்றாதீர்."

## பயிற்சி

**I. பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடையளி:**

1. திராவிடர்கள் யார்?
2. ஆரியர்கள் யார்?
3. ஆரியர்களும், திராவிடர்களும் பேசிய மொழிகள் யாவை?
4. ஆரிய நாகரிகத்தைப் பற்றி நாம் அறிய ஆதாரமாக இருப்பவை யாவை?
5. ஆரியர்களின் இரு வீர காவியங்கள் யாவை?
6. ஆரிய – திராவிடப் பண்பாடுகள் நாளடைவில் இணைந்தன என்பதற்கு இரண்டு உதாரணங்கள் கொடு.
7. திராவிடர்கள் வெளிநாடுகளோடு வியாபாரத் தொடர்புகள் கொண்டிருந்தார்கள் என்பதற்கு இரண்டு சான்றுகள் தருக.

**II. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளில் விடையளி:**

1. ஆரிய - திராவிட நாகரிகங்கள் ஒன்றோடொன்று கலந்தன என்பதை (அ) ஆன்மீகத்துறை (ஆ) சமூகத் துறை, (இ) மொழித்துறை ஆகியவற்றின் வாயிலாக உதாரணம் காட்டி விளக்குக.
2. திராவிட நாகரிகத்தின் சிறப்பியல்புகளைக் கூறுக.
3. ஆரிய நாகரிகத்தின் முக்கியத் தன்மைகள் யாவை?
4. தற்கால இந்தியப் பண்பாடு, ஆரிய, திராவிடப் பண்பாடுகளின் ஐக்கியம் என்பதை விளக்குக.

III. கோடிட்ட இடங்களில் சரியான விடைகளைக்கொண்டு நிரப்புக :

1. திராவிடர்கள் வாழ்ந்த நிலங்கள் ———, ———, ———, ———, ——— ஆகும்.
2. திராவிட நாட்டிலிருந்து அயல்நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட மரம் ———.
3. திராவிடநாடு, வாணிபத் தொடர்புகொண்ட ஓர் ஐரோப்பிய நாடு ———.
4. திராவிடக் கடவுளர்கள் ———, ——— ஆகும்.
5. ஆரிய அரசனுக்கு உதவிசெய்த இரு சபைகள் ———, ——— ஆகும்.

IV. நான்கு மாற்று விடைகளுள் சரியானவற்றைத் தேர்ந்தெடுக்கவும் :

1. திராவிடர்கள் வசித்த மலையும் மலைசார்ந்த இடமும் இவ்வாறு அழைக்கப்பட்டது ( )
   (அ) பாலை
   (ஆ) முல்லை
   (இ) குறிஞ்சி
   (ஈ) மருதம்
2. ஆரியர்களிடையே சாதிகள் தோன்றியது அவர்கள் ( )
   (அ) பஞ்சாபில்
   (ஆ) ஆப்கானிஸ்தானத்தில்
   (இ) கங்கைச் சமவெளியில்
   (ஈ) மத்திய ஆசியாவில் குடியேறியபோது
3. ஆரியர்கள் தென்னிந்தியாவிற்கு வந்தபோது வழிபட்ட திராவிட கடவுள் ( )
   (அ) இந்திரன்
   (ஆ) வருணன்
   (இ) விஷ்ணு
   (ஈ) முருகன்

# 3. மௌரியர்களின் அரசாட்சியும் கலையும்

## அறிமுகம்

"வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி"—பொய்யாமொழி

இந்திய வரலாற்றிலேயே முதன் முதலாக ஒரு பேரரசை ஆண்ட பெருமை மௌரிய வமிசத்து மன்னர்களைச் சாரும். அவர்கள் மகத நாட்டையாண்டார்கள். அவ்வமிசத்தின் முதல் அரசரான சந்திரகுப்தர், அவருடைய மைந்தர் பிந்துசாரர், அவருடைய மைந்தர் அசோகர் ஆகியோர்களின் ஆட்சியின்போது மகத நாடு அதன் புகழின் உச்சியில் இருந்தது. இதன் காரணம் இவ்வரசர்களது தோள்வலிமையும், வாள்வலிமையும் மட்டு மன்று; அவர்களது மிகச் சிறந்த நிர்வாகத் திறனமயுமேயாம்.

## ஆதாரங்கள்

மௌரிய ஆட்சியின் நிர்வாகத் திறமையினைப் பற்றி நாம் அறிய ஆதாரமாயிருப்பவை மூன்று வகைப்படும். அவையாவன: சந்திரகுப்தர் அவையை அலங்கரித்த கிரேக்க நாட்டுத் தூதுவர் **மெகஸ்தனிஸ்** என்பவரின் **இண்டிகா** என்ற நூல். இவர் செலுகஸ் நிகேடார் என்ற கிரேக்க மன்னரால் அவரை வெற்றிக் கொண்ட சந்திரகுப்த மன்னர் அவைக்கு அனுப்பப்பட்ட அரசியல் தூதுவர் ஆவார். அவர் பல்லாண்டுகள் மகத நாட்டின் தலைநகரான பாடலிபுத்திரத்தில் வசித்தார். அந்நகரசபை நிர்வாகத்தைப் பற்றியும், மத்திய அரசின் நிர்வாகத்தைப் பற்றியும் மிக்க பயனுள்ள செய்திகளைத் தன்னுடைய நூலில் எழுதியுள்ளார்.

மௌரிய அரசர்களின் ஆட்சிமுறை பற்றி அறிவதற்கு அடுத்த ஆதாரமாக இருப்பது சந்திரகுப்த மௌரியரின் தலைமை அமைச்சரான கௌடில்யர் என்கிற **சாணக்கியர்** அல்லது விஷ்ணு குப்தர் என்றழைக்கப்பட்டவரின் **அர்த்தசாஸ்திரம்** என்ற நூலாகும். இந்நூல் ஓர் அரசியல் அறிவியல் நூல். அரசாங் கத்தின் பல்வேறு அம்சங்களான மன்னன், போர், அரசியல்

சூழ்ச்சி, நாடுகளிடையே சட்டம், பொது குற்றவியல் சட்டங்கள் ஆகியவற்றைப் பற்றி இந்நூல் தெளிவாக எடுத்துரைக்கிறது.




படம் 4. அசோகர் பேரரசு

மௌரிய நிர்வாகத்தைப் பற்றி அறிய ஆதாரமாக இருக்கும் மூன்றாவது சான்று மௌரிய அரசர்களில் மிகச் சிறந்தவரான அசோகர் பாறைகளிலும், கற்றூண்களிலும் பொறித்து வைத்த ஆணைகளாகும்.

# 22

# மௌரிய ஆட்சிமுறை

## நடுவண் அரசு

நாட்டின் நிர்வாகத் தலைவர் அரசரே. அவருக்கு அளவு கடந்த அதிகாரங்கள் இருந்தன. அவர் ஓர் எதேச்சாதிகாரி, அவர் நினைத்தது சட்டமாகும். அவரே நாட்டு இராணுவத்தின் தலைமைத் தளபதியும் ஆவார். எனவே போர்களத்தில் படையினைத் தலைமைதாங்கி நடத்தி சென்றார். நாட்டின் தலைமை நீதிபதியும் அவரே. அரசருக்கு நிர்வாகத்தில் உதவி செய்ய ஓர் அமைச்சரவையும் இருந்தது. அதற்கு **மந்திரி பரிஷத்** என்று பெயர். அமைச்சர்களைத் தவிரப் பொருளாளர், தலைமை வரி வசூலிப்பவர் இவர்களையும் அரசர் நியமித்தார். அரசின் வருவாய் செலவு பற்றிய விவரங்களைப் பொருளாளர் கவனித்தார். தலைமை வரிவசூல் அதிகாரி அரசுக்கு வரவேண்டிய வரிகளைப் பற்றிய ஆவணங்களைப் பேணினார்.

மௌரிய மன்னர்கள் மிகப்பெரிய ஒற்றர் படையும் வைத்திருந்தனர். இப்படைகளின் மூலம் நாட்டின் எல்லா மூலை, முடுக்குகளிலும் நடைபெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றிச் சரியாகத் தெரிந்துக்கொண்டனர். பெண்டிரும்கூட இவ்வொற்றர் படையில் பணிபுரிந்தனர் இவ்வொற்றர் படைமூலம் நடுவணரசு வலிமை மிக்கதாக இருந்தது.

## மாநில அரசு

பரந்து விரிந்த மௌரியப் பேரரசு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாநிலமும் ஒரு **ராஜுகர்** அல்லது **வைசிராயின்** நிர்வாகத்தின் கீழ் இருந்தது. பெரும்பாலும் அவர் அரசு குடும்பத்தைச் சேர்ந்தவராகவே இருப்பார். ஒவ்வொரு மாநிலமும் பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவை **பிரதேசிகர்கள்** நிர்வாகத்தின் கீழ் இருந்தன. ஒவ்வொரு மாவட்டமும் அதன் நகரங்களையும் கிராமங்களையும் உள்ளடக்கியதாக இருந்தது. நகரங்களின் நிர்வாகம் **நகரர்கள்** என்ற அதிகாரிகளின் மேற்பார்வையிலிருந்தது, நான்கு முதல் பத்து வரையிலான கிராமங்களைக் **கோபர்கள்** என்னும் அதிகாரிகள் நிர்வகித்தனர். பத்துக்கு மேற்பட்ட கிராமங்களின் கூட்டத்தை **ஸ்தானிகர்** என்ற அதிகாரி நிர்வகித்தார். ஒவ்வொரு கிராமமும் ஒரு **கிராமணி** என்ற அதிகாரியின் மேற்பார்வையிலிருந்தது. அவர் கிராமப் பஞ்சாயத்தின் மூலம் கிராமத்தை நிர்வகித்தார்.

அசோகர் பௌத்த தர்மத்தைப் பரப்புவதற்காகவும், மக்கள் பௌத்த தர்மத்தைப் பின்பற்றுகிறார்களா என்பதைப் பார்ப்ப

தற்காகவும், தர்மமகாமாத்திரர்கள் என்ற புதிய அதிகாரிகளை நியமித்தார். மேலும் ஐந்தாண்டுக்கொருமுறை கணக்குகளைத் தணிக்கை செய்யவும், தண்டனைகளின் கடுமையைக் குறைக்கவும் சில பயண ஆய்வாளர்களை ஏற்படுத்தினார்.

### இராணுவ நிர்வாகம்

மௌரியப் பேரரசு நன்கு பயிற்றுவிக்கப்பட்ட சிறந்த இராணுவத்தைப் பெற்றிருந்தது. அதில் 600 ஆயிரம் காலாட் படையினரும், 30 ஆயிரம் புரவிப்படையினரும், 9 ஆயிரம் யானைப் படையினரும் அடங்கினர் இவற்றைத் தவிரத் தேர்ப் படை ஒன்றும் இருந்தது. இந்நால்வகைப் படையினர் திறமைமிக்க வராய் சிறந்த ஆயுதங்களை உடையராகவும் இருந்தனர். அரச வருவாயில் ஒரு கணிசமான பகுதி இராணுவத்தைப் பராமரிக்கப் பயன்படுத்தப்பட்டது. 30 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு மன்றம் ஆறு குழுக்களாகப் பிரிந்து, மௌரிய இராணுவத்தின் காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தோப்படை ஆகியவற்றை நிர்வகித்தன. ஐந்தாவது குழு நாவாய் படை யையும், போக்குவரத்தையும் மேற்பார்வையிட்டது. ஆறாவது குழு இராணுவத்திற்கான உணவு, உடை, ஆயுதங்கள் முதலிய வற்றை அளிக்கும் பணியை மேற்கொண்டது.

### பாடலிபுத்திர நகரவை நிர்வாகம்

மாட்சியும் பெருமையும் கொண்ட பாடலிபுத்திர நகரவை நிர்வாகம் மற்றைய நகரவைகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. இந்நகரின் நிர்வாகம் 30 பேர் கொண்ட ஒரு குழுவால் கவனிக்கப்பட்டது. இக்குழு 5 பேர் கொண்ட 6 கிளைக் குழுக்களாகப் பிரிந்து நகராட்சியின் பல்வேறு துறைகளை நிர்வகித்தது. முதல் கிளைக்குழு பெருந்தொழில், கைத் தொழில் முதலியவைகளைக் கவனித்தது. இரண்டாம் குழு, நகரத்துக்கு வந்த அன்னியர்களைக் கவனித்தது. மூன்றாவது குழு பிறப்பு, இறப்புப் பிரிவுகளைக் கவனித்தது. நான்காவது குழு நகரின் வாணிகத்தை முறைப்படுத்தி பொருள்களின் விற்பனை, எடைகள் முதலியவற்றைக் கவனித்தது. ஐந்தாவது குழு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைக் கண்காணித்தது. ஆறாவது குழு விற்பனைப் பொருள்களின்மீது விதிக்கப்பட்ட 10 விழுக்காடு வரியை வசூலித்தது.

### நீதி நிர்வாகம்

மன்னனே நீதி நிர்வாகத்தின் தலைவன் ஆவான். நாட்டுப் புறங்களிலும் நகரங்களிலும் நீதி பரிபாலனம் செய்ய சிறப்பு நீதிக்

குழுக்களும் இருந்தன. அவை முறையே ராஜுகர்களாலும் மகாமாத்திரர்களாலும் தலைமை ஏற்கப்பட்டன. தண்டனைச் சட்டம் மிகக் கடுமையாக இருந்தது. எனவே, நாட்டில் குற்றங்கள் குறைந்திருந்தன. பொய்ச்சாட்சிகள் கூறலும், வரி கொடுக்காதிருத்தலும், தொழிலாளிகளுக்குத் துன்பம் விளைவிப்பதும் கொடிய குற்றங்களாகக் கருதப்பட்டன. இக்குற்றவாளிகள் சவுக்கடி பெற்றார்கள், அல்லது சிறைக்குச் சென்றார்கள். கொலை, தீ வைத்தல், கொள்ளை முதலிய கொடிய குற்றங்களுக்கு மரண தண்டனையும் விதிக்கப்பட்டது.

### நிதி நிர்வாகம்

அரசின் முக்கிய வருவாய் நிலவரியேயாகும், விற்பனை வரியும், சுங்கவரியும், உரிமவரியும் அரசுக்கு வருவாய் அளித்த பிற வரிகளாகும். சுரங்கத்தொழில், உப்பு உற்பத்தித் தொழில், கப்பற் கட்டும் தொழில் முதலியன அரசு உடைமையாயிருந்தன. வியாபாரம், ஆடுமாடுகள் இவற்றின் மீது விதிக்கப்பெற்ற வரிகளும் அரசின் வருவாயாகும். சிறந்த முறையில் திறமையாக வரிவசூலிப்பதே மௌரிய அரசின் பெறும் பொறுப்பாயிருந்தது. அரசாங்க மாளிகைகளைப் பாதுகாத்தல், பஞ்ச நிவாரணம், படை நிர்வாகம், நீர்பாசனத் திட்டங்களை அமைத்தல் ஆகியவை மௌரிய அரசாங்கத்தின் முக்கியச் செலவினங்களாகும்.

### மௌரிய ஆட்சியின் மதிப்பீடு

மௌரிய அரசர்கள் மக்களின் நல்வாழ்வில் தனிக்கவனம் செலுத்தினார்கள். சட்டமும் ஒழுங்கும் சிறப்பாகப் பாதுகாக்கப் பட்டன. நீர்ப்பாசன வசதிக்கு அதிகப்பணம் செலவழிக்கப் பட்டது. இதற்கு எடுத்துக்காட்டாகக் கத்தியவாரில் அமைந்து உள்ள சுதர்சனா ஏரியைக் குறிப்பிடலாம். அரசு அறிஞர் களையும், தத்துவ மேதைகளையும், குருமார்களையும், துறவிகளையும் ஆதரித்தது. நாட்டின் சாலைகள் இருபுறமும் நிழல்தரும் மரங்கள் கொண்டு அகலமாய் அமைந்திருத்தன. பயணிகளுக்குத் தாகம்தீர்க்கும் கிணறுகளோடுகூடிய தங்கும் விடுதிகள்பல சாலைகளின் இடையிடையே அமைந்திருந்தன. நெடுஞ்சாலைகள் தொலைவைக் குறிக்கும் கற்களோடும், கைகாட்டிகளோடும் அமைந்திருந்தன. ஆடு, மாடுகளும் கால் நடைப் பயணிகளும் உபயோகிக்க இரண்டு மீட்டர் அகலமுள்ள பாதைகள் இருந்தன. அவைகள் தற்கால வசதிகளையும் கொண்டிருந்தன. மக்களுக்காகவும், மிருகங்களுக்காகவும் கூட மருத்துவ மனைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. சிவில், இராணுவப் பிரிவினை, பிறப்பு இறப்புக் கணக்கெடுத்தல், பொதுநல

சேவைகள், நகராண்மை கழகங்கள், அரசு கணக்கு நிருவாகம், தணிக்கை முதலியன மௌரிய ஆட்சி முறையின் பிற சிறப்பு அம்சங்களாகும்.

மௌரிய அரசின் குறைகளாக வரலாற்று வல்லுனர்கள் கூறுபவை ஒற்றர்படையும், சிறிய குற்றங்களுக்கு அளிக்கப்பெற்ற கடுந்தண்டனைகளுமாகும்.

## மௌரியர் கட்டடக் கலையும், பிற கலைகளும்

மௌரிய மன்னர்கள் கட்டடக்கலையிலும், சிற்பக்கலையிலும் சிறப்புக் கவனம் செலுத்தினார்கள். சந்திர குப்தர் காலத்தில் கட்டட வேலைக்குப் பெரும்பாலும் மரமே உபயோகப்படுத்தப்பட்டது. கட்டடங்களில் அமைந்துள்ள சிற்ப வேலைப்பாடுகள் மரங்களைச் செதுக்குவதால் ஏற்பட்டவையே, அவை எல்லோராலும் போற்றிப் புகழப்பட்டன. அசோகர் ஆட்சிக் காலத்தில் கட்டடங்களுக்குக் கற்கள் உபயோகிக்கப்பட்டன. புனிதமான இடங்களில் அசோகர் மிகப் பெரிய ஒற்றைக் கற்றூண்களை அமைத்தார். அவை மிகவழவழப்பாகவும் சிற்பங்கள் பொறிக்கப் பெற்ற உச்சி பாகங்கள் அழகுறப் பெற்றும் திகழ்ந்தன. அக்கால கல் தச்சர்களின் திறமையும் கலை நுட்பத்தையும், கைவண்ணத்தையும் காட்டுவதோடு இவை பொறியாளரின் திறமையையும் எடுத்துக்காட்டுகின்றன. சாரநாத் என்ற இடத்தில் அமைந்துள்ள ஒற்றைக் கற்றூண் மௌரியர் கால சிற்பக் கலையின் மேன்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் இலங்குகிறது. அதன் உச்சியிலுள்ள முகப்பில் நான்கு சிங்கங்கள் ஒன்றோடு ஒன்று முதுகு ஒட்டி இருப்பதுபோல் அமைந்



படம் 5.
சாரநாத் தூணின் மேல்பாகம்

திருக்கின்றன. உச்சியின் அடிப்புறத்தில் ஓடும்நிலையில் ஒரு யானை, ஒரு காளை, ஒரு குதிரை, ஒரு சிங்கம் இவை சிறப்பாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இச் சின்னமே சுதந்தர இந்திய அரசாங்கத்தின் சின்னமாக ஏற்றுக்கொள்ளப்பெற்றிருக்கிறது. தர்மச்சக்கரம் தேசிய கொடியின் நடுப்பகுதியில் அமைந்து அதற்கு ஏற்றம் தருகிறது. அசோகர் பல ஸ்தூபிகளை நிறுவினார். கருங்கற்களாலோ, செங்கற்களாலோ கட்டப்பட்ட தூணும் அதைத் தாங்கி நிற்கும் வட்டவடிவமான அடித்தளம் ஒன்றும் கொண்டதே ஸ்தூபி எனப்படும். சில ஸ்தூபிகளைச் சுற்றிலும் சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த சுற்று வேலிகள் இடப்பட்டுள்ளன. இவற்றுள் இரண்டொரு வாயில்களும் அமைக்கப்பட்டு, அவ்வாயில்களில் அழகியசிற்பங்களும் செதுக்கப் பட்டுள்ளன. இவைகளில் மத்தியப் பிரதேசத்தில் போபாலுக்கு அருகிலுள்ள சாஞ்சி என்னுமிடத்தில் உள்ள ஸ்தூபி பலவற்றிலும் சிறந்ததாக விளங்குகிறது. இத்தூபிகள் ஜாதகக் கதைகள் என்ற நூலிலிருந்து புத்தரின் பிறப்பு, துறவு முதலிய வாழ்க்கை நிகழ்ச்சிகள் பொறிக்கப்பெற்று விளங்குகின்றன. சாஞ்சி ஸ்தூபி 37 மீட்டர் குறுக்களவும் 24 மீட்டர் உயரமும் கொண்டு 3 மீட்டர் உயரத்திற்குக் கற்களாலான சுற்றுச்சுவர்கள் அமைக்கப்



படம் 6. சாஞ்சி பெரிய ஸ்தூபி

பட்டுள்ளது. சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட நான்கு தோரண வாயில்கள் உள்ளன. இவ்வித ஸ்தூபிகளில் புத்தரின் நினைவுச் சின்னம் வைக்கப்பட்டுள்ளது.

அசோகரின் பாறை ஆணைகள் அவற்றில் அழகாகச் செதுக்கப்பட்ட எழுத்துகளுக்குப் புகழ்பெற்றவை. கயா நகருக்கு அருகிலுள்ள பராபர் குன்றுகளில் குடையப்பட்ட குகைகள்தான் இந்தியாவில் முதல்முதலாகக் காணப்படும் பாறைக்குடைவுக் குகைகளாகும். இக்குகைகளின் உட்சுவர்கள் கண்ணாடி போல் வழவழபாகவும் பளப்பளப்பாகவும் காணப்படுகின்றன. அவை பிற்கால குகைக்கோயில்களுக்கு அடிகோலின என்பதே அவற்றின் சிறப்பு அம்சமாகும்.

மௌரியர் கலையில் பராசீகக் கலையின் செல்வாக்கையும் காணலாம். மணிபோன்ற உச்சி அமைப்பும், அதிலுள்ள மிருகங்கள் பொறிப்பும், சிறப்பாக மெருகேற்றிய வழவழப்பான ஒற்றைத் தூண்களும் இதற்குச் சான்றுகளாகும்.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் ஐந்து வரிகளில் விடையளி:

1. மௌரிய நிருவாகத்தைப் பற்றி நாம் அறிய உதவும் மூன்று ஆதாரங்கள் யாவை?
2. மௌரிய மன்னர்களின் அதிகாரங்களைக் குறிப்பிடுக.
3. மௌரிய மன்னர்களுக்கு நிர்வாகம் செய்ய உதவிய இரண்டு முக்கிய அதிகாரிகளைக் குறிப்பிடுக.
4. குறிப்பு வரைக: கோபர், ஸ்தானிகர், கிராமணி.
5. மௌரியர் காலத்தில் நீதி நிர்வாகம் எவ்வாறு அமைந்து இருந்தது?
6. மௌரியர் காலத்தில் அரசின் முக்கிய வருவாய் இனங்கள் யாவை?
7. மௌரிய நிர்வாகத்தின் ஏதாவது இரண்டு சிறப்பியல்புகளையும், இரண்டு குறைபாடுகளையும் குறிப்பிடுக.

II. பின்வரும் வினாக்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள மாற்று விடைகளில் சரியானதை வலதுபக்க பிறையடைகளில் எழுதுக :

1. மௌரிய ஆட்சியினைப் பற்றி நாம் அறிவதற்கு உபயோகப்படும் ஆதாரமான இந்திய அரசியல் நூல்

(அ) மகாவமிசம் ( )
(ஆ) இண்டிகா
(இ) அர்த்த சாஸ்திரம்
(ஈ) அசோகரின் கல்வெட்டுகள்

2. முதன்முதலில் பாறைக்குடைவு குகைகள் மௌரிய அரசில் அமைந்த இடம்

(அ) பாடலிபுத்திரம் ( )
(ஆ) பராபர் குன்றுகள்
(இ) சாரநாத்
(ஈ) சாஞ்சி

3. சுதந்தர இந்தியாவின் அரசாங்கச் சின்னமாக விளங்கும் கல்தூண் மேல்பாகம் பின்வரும் இடத்தில் உள்ளது

(அ) பராபர் ( )
(ஆ) சாஞ்சி
(இ) சாரநாத்
(ஈ) உஜ்ஜயினி

III. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகளால் நிரப்புக :

1. மெகஸ்தனிஸ் என்ற கிரேக்க தூதர் எழுதிய, மௌரிய அரசைப் பற்றி அறிய உதவும் நூலின் பெயர் ———.
2. அர்த்தசாஸ்திரம் என்ற அரசியல் நூலை ஆக்கித்த மௌரிய முக்கிய அமைச்சர் ———.
3. மௌரிய மன்னனுக்கு ஆலோசனை வழங்கிய அமைச்சர் குழு ——— என்றழைக்கப்பட்டது.
4. ஒவ்வொரு மௌரிய மாநிலமும் ——— என்ற அதிகாரியின்கீழ் இருந்தது.
5. மௌரிய அரசில் நான்கு முதல் பத்துவரை உள்ள கிராமங்களின் தலைவர் ——— என அழைக்கப்பட்டார்.
6. நீர்பாசன வசதிக்கென மௌரியர் காலத்தில் வெட்டப்பட்ட புகழ்பெற்ற ஏரி ——— என்னும் இடத்தில் உள்ளது.

7. ——— மன்னர்காலத்திலிருந்து மௌரியர் காலக் கட்டடங்கள் கற்களால் கட்டப்பட்டன.

8. சுதந்தர இந்திய அரசாங்கத்தின் சின்னமாக விளங்குவது ——— என்னுமிடத்தில் உள்ள அசோகர் காலத்தின் ——— கற்றூணின் மேல் பாகமே.

9. மௌரியர் கால ஸ்தூபிகளில் சிறந்தது ——— என்னும் இடத்தில் உள்ளது.

10. பாறைக்குடைவு குகைகள் முதன்முதலாக அமைக்கப் பட்ட இடம் ———.

IV. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் 15 வரிகளில் விடை தருக:

1. மௌரிய நடுவண் அரசின் தன்மைகளை விவரி.
2. பாடலிபுத்திர நகரவை நிருவாகத்தைப் பற்றி எழுது.
3. மௌரியர்கால இராணுவ நிர்வாகச் சிறப்பினை விளக்கு.
4. மௌரியர் ஆட்சியில் நீதி பரிபாலன முறையை விளக்குக.
5. மௌரிய ஆட்சியின் சிறப்பியல்புகளை விவரி.
6. மௌரிய சிற்பக்கலையின் சிறப்பியல்புகளை உதாரணத்துடன் விளக்குக.

## செய்முறைப் பயிற்சி

1. அசோகர் காலத்திய ஒற்றைக் கல்தூண்கள், ஸ்தூபிகள் இவற்றின் படங்களைச் சேகரிக்கவும்.
2. இந்தியப் படம் வரைந்து அசோகர் காலத்துக் கற்றூண், பாறை ஆணைகள் ஆகியவை இருந்த இடங்களைக் குறிப்பிடவும்.
3. நூலகத்திலிருந்து அர்த்தசாஸ்திரம், இண்டிகா இவற்றைப் பற்றிய செய்திகளைச் சேகரிக்கவும்.
4. இந்தியப் படம் வரைந்து அசோகர் கால மௌரிய அரசின் எல்லைகளைக் குறிப்பிடுக. பாடலிபுத்திரம், சாஞ்சி, தட்சசீலம், சாரநாத், கயா முதலியவற்றைக் குறிப்பிடுக.

# 4. கனிஷ்கரும் மகாயான பௌத்த சமயமும்

**அறிமுகம்**

இந்திய மக்களால் பின்பற்றப்படுகிற சமயங்களுள் பௌத்த சமயமும் ஒன்று. சாக்கியமுனி என்று சிறப்புப் பெயர் பெற்ற **புத்தர்** இச்சமயத்தைத் தோற்றுவித்தார். எவ்வுயிர்க்கும் துன்பம் இழைக்காமையும், அகிம்சையுமே இச்சமயத்தின் முக்கியக் கொள்கைகளாம். பல இந்திய மன்னர்கள் இச்சமயத்திற்கு ஆதரவு அளித்து இதனை இந்த நாட்டிலும், வெளிநாடுகளிலும் பரப்ப உதவினார்கள். புத்தரால் போதிக்கப்பட்டு மௌரிய அசோக மன்னரால் பரப்பப்பட்ட இம்மதம் **ஹீனயானம்** அல்லது **சிறுவழி** அல்லது **சிறுவாகனம்** என அழைக்கப்பட்டது. பின்னர் குஷாண வமிசத்துச் சிறந்த மன்னர் கனிஷ்கர் காலத்தில் இச்சமயம் சில கொள்கைகள் மாற்றம்பெற்று, **மகாயானம்** அல்லது **பெருவழி** அல்லது **பெருவாகனம்** என அழைக்கப்பட்டது.

## குஷாணர்கள்

குஷாணர்கள் என்போர், மத்திய ஆசியாவிலிருந்த **யுவேச்சி** என்ற இனத்தில் ஒரு பிரிவினர். இந்தியாவின் வடமேற்கே அமைந்துள்ள கணவாய்களின் மூலம் அவர்கள் இந்தியாவிற்கு வந்தார்கள். இந்தியாவில் வடமேற்கு எல்லையில் குஷாண அரசை நிறுவிய முதல் பேரரசர் **முதலாம் காட்பீஸஸ்** ஆவார். அவருக்குப்பின் அரசரான இரண்டாம் காட்பீஸஸ் சிந்துச் சமவெளிப் பிரதேசத்தை வென்று குஷாண அரசினைப் பெருக்கினார்.

**கனிஷ்கர் (78–120 கி.பி.)**

குஷாண வமிசத்து மன்னர்களுள் மிகவும் புகழ்வாய்ந்தவர் கனிஷ்கர் ஆவார். அவர் ஒரு சிறந்த போர் வீரர். காஷ்மீரத்தை வென்று, அங்கே தன் நினைவாகக் **கனிஷ்கபுரம்** என்ற நகரை நிர்மாணித்தார். பின்னர் சீனா நாட்டுடன் செய்த போர்களின் வாயிலாகக் கோடான், காஷ்கர், யார்கண்ட் முதலிய இடங்களைத் தன் அரசுடன் சேர்த்தார். கனிஷ்கரின் பேரரசில் **ஆப்கானிஸ்தானம், காஷ்மீர், சிந்துவின் வட்பாகம், மாளவம்,**

மத்திய ஆசியா முதலிய பகுதிகள் அடங்கியிருந்தன. குஷாண அரசின் தலைநகர் தற்போது பெஷாவர் என்று அழைக்கப்படுகிற அன்றைய புருஷபுரம் ஆகும்.




படம் 7. கனிஷ்கர் பேரரசு

கனிஷ்கர் சிறந்த வீரராக மட்டுமல்லாமல், கலை, இலக்கியம் இவற்றை ஆதரிக்கும் சிறந்த அரசராகவும் திகழ்ந்தார். அசுவகோஷர், வசுமித்திரர், நாகார்ஜுனர் போன்ற தலை

சிறந்த பௌத்த பேரறிஞர்கள் அவர் அவையை அலங்கரித்தனர். கீழை நாட்டின் அரிஸ்டாடில் என்று புகழப்பட்ட அசுவகோஷர், கனிஷ்கர் காஷ்மீரில் கூட்டிய நான்காவது பௌத்தசமய மகாநாட்டுக்குத் தலைமை தாங்கினார். பௌத்தமதத்தின் கொள்கைகள் இவ்வவையில் நாகார்ஜுனரால் இறுதிவடிவம் பெற்றுத் தொகுக்கப்பட்டன. கனிஷ்கரது அவையில் சரகர், சுஸ்ருதர் என்ற இரண்டு மருத்துவ விற்பன்னர்களும் இருந்தனர். சரகர் ஒரு சிறந்த மருத்துவ நூலை எழுதினார். சுஸ்ருதர் அறுவைசிகிச்சை பற்றிய ஒரு மருத்துவ நூலை அளித்தார்.

கனிஷ்கர் ஒரு பௌத்தசமயவாதி. அவர் வெளியிட்ட நாணயங்களில் புத்தர் உருவத்தோடுகூட பிறசமயக் கடவுளர்களின் உருவங்களும் பொறிக்கப்பட்டிருந்தன. இஃது அவருடைய சமயப் பொறையை எடுத்துக்காட்டுகிறது.

குஷாணப்பேரரசு, பாரசீக, சீனப் பேரரசுகளின் எல்லையை ஒட்டி அமைந்திருந்தமையால் நிலமார்க்கமாக அவ்வயல்நாடுகளுடன் வாணிகம் சுறுசுறுப்பாக நடைபெற்றது. மேற்கேயுள்ள உரோம சாம்ராஜ்யத்துடனும் கடல்வழி வாணிகம் சிறப்பாக நடைபெற்றது. குஷாணப் பேரரசிலிருந்து வாசனைத் திரவியங்கள், முத்துக்கள், பட்டு முதலியவை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. தங்க நாணயங்கள் வாணிகத்திற்குப் பயன்படுத்தப்பட்டன. சமூகத்தில் வணிகர்கள் முக்கியப் பங்கு பெற்றனர். செல்வாக்கு மிகுந்த அவர்கள் தங்களுக்கென வாணிகச் சங்கங்களையும், தொழிற்சங்கங்களையும் அமைத்துக் கொண்டு, தங்களது முன்னேற்றத்தையும் தொழில் நன்மைகளையும் காத்தனர்.

**மகாயான பௌத்த சமயம்**

கனிஷ்கரின் சிறப்புக்கு முக்கியக் காரணமாகயிருந்தது அவர் மகாயான பௌத்த சமயத்தை ஆதரித்துப் பரப்பியதேயாம். ஹீனயானம், பௌத்த சமயத்தை நிறுவிய மதிப்புக்குரிய பெரியார் எனப் புத்தரை மதித்தது. குணநலமிக்க நன்னடைத்தையின் மூலம் சுய முயற்சியால் நிர்வாணம் அல்லது முக்தி அடைய முடியும் எனக் கூறியது. முக்திபெற ஆண்டவரோ, அல்லது அவரைக் காட்டும் இடைமனிதரோ தேவையில்லை என அது கருதியது. ஆனால் கனிஷ்கர் காலத்து மகாயான பௌத்த சமயம் ஹீனயான சமயத்தினின்றும் ஒருசில அம்சங்களில் மாறுபட்டது. புத்தர் மரியாதைக்கும் மதிப்பிற்கும் உரிய மனிதராகயில்லாமல் ஒரு தெய்வமாகவே தொழப்பட்டார். அவருக்குப் படிமங்கள்

அமைத்து, சடங்குகள் மூலம் வழிபாடுகள் செய்யும் முறையும் ஏற்பட்டது. மலர்கள், வாசனைத் திரவியங்கள், விளக்குகள் முதலியவைகொண்டு அவர் தெய்வமாக வணங்கப்பட்டார். விக்ரக வழிபாடும் தொடங்கியது. பிறகு, ஆயிரக்கணக்கான அற வாழ்க்கையின் மூலம் போதிசத்துவர் என்ற நிலையை அடைந்து ஒவ்வொருவரும் புத்தராகலாம் என்ற கொள்கை ஏற்பட்டது. இவ்வாறாகப் புத்தரும் போதிசத்துவர்களும் முக்தியடையும் மார்க்கத்தை மக்களுக்குக் காட்டி உதவி புரிந்தனர். புத்தருக்கும் போதிசத்துவர்களுக்கும் பல கோயில்கள் கட்டப்பட்டன.

## பௌத்தப் பேரவை

கி. பி. 102 ஆம் ஆண்டில் கனிஷ்கர் மகாயான பௌத்த சமயத்தின் கொள்கைகளை நிர்ணயித்துத் தொகுப்பதற்காக, காஷ்மீரத்தில் ஒரு பௌத்த பேரவையைக் கூட்டினார். இவ் அவைக்குப் பௌத்த சமய நல்லறிஞர் அசுவகோஷர் தலைமை தாங்கினார். நான்காவது பௌத்த சமய பேரவைக் கூட்டமான இதில் நாகார்ஜுனர் புதிய பௌத்த சமயக் கருத்துக்களை உருவாக்கினார். அதன் விளக்கமான 'மஹாவிபாஷா' செப்புத் தகடுகளில் பொறிக்கப்பட்டு, அவைகளின் மேல் ஒரு ஸ்தூபியும் எழுப்பப்பட்டது.

மகாயான பௌத்த சமயத்தினர் கனிஷ்கரை அவர் பௌத்த சமயத்திற்குச் செய்த தொண்டிற்காக இரண்டாம் அசோகர் எனப் புகழ்ந்தனர். மௌரியப்பேரரசின் வீழ்ச்சிக்குப்பின்னர் கனிஷ்கர் ஆட்சி காலத்தில் காந்தாரப் பிரதேசத்தில் பல பௌத்த ஸ்தூபிகளும் விகாரங்களும் கட்டப்பட்டன. பௌத்த சமயத்தைப் [illegible]ப்பத் துறவிகள் அயல்நாடுகளுக்கும் அனுப்பப்பட்டனர். இதனால் பௌத்த சமயம் மத்திய ஆசியாவிலும், சீனாவிலும் பரவியது.

## இலக்கியமும் பிறசமயங்களும்

இலக்கியத் துறையிலும் கனிஷ்கர் காலம் சிறந்து விளங்கியது. அசுவகோஷர், நாகார்ஜுனர் போன்ற கல்விமான்கள் அவர் அவையை அணி செய்தனர். சைவ சமயமும், கார்த்திகேய வழிபாடும், வாசுதேவ கிருஷ்ண வழிபாடும் சிறப்புற வளர்ந்தன. குஷாணர்கள் காலத்தில்தான் காச்யப மாதங்கர் என்பவர் சீனாவில் பௌத்த சமயத்தை அறிமுகம் செய்தார்.

**காந்தாரச் சிற்பக்கலை**

கி.பி. 50–200க்கு இடைப்பட்ட குஷாணர் ஆட்சி காலத்தில் புதியவகை சிற்பக்கலை தோன்றி சிறப்புற வளரலாயிற்று. இஃது காந்தாரக்கலை எனப் பெயர்பெற்றது. சிற்பங்கள் பௌத்த சமய பொருள்களைப் பற்றியே அமைந்தன. புத்தரின் வாழ்க்கையை ஒட்டிய பலவாறான நிகழ்ச்சிகள் இவைகளில் சித்தரிக்கப் பெற்றன.

காந்தாரச் சிற்பக்கலையின் பொருள்கள் இந்தியத் தன்மையின. ஆனால் அமைக்கப்பட்ட கலைத்தொழில் நுட்பம் கிரேக்க வகையைச் சார்ந்திருந்தது. இந்தியச் சிற்பிகள் கிரேக்க முறைப்படி அகன்ற கோடுகளுடன் கூடிய பல மடிப்புக்களாலான ஆடை அணிகளை உடலோடு ஒட்டி அமைத்தனர். தெய்வங்கள், துறவிகள் தலைகளைச்சுற்றி ஓர் ஒளிவட்டமும் செதுக்கினர். புத்தரின் சிலைகள் கிரேக்க கடவுளர்களான அப்பாலோ, டையனோசியஸ் போன்றவரின் உருவ அமைப்பில் அமைக்கப் பட்டன. கிரீஸ் நாட்டுக் கொரின்தியன் நகரிலுள்ள தூண்களின் மேற்புறம்போன்று காந்தாரக்கலைஞர், கற்றூண்களை மணிவடிவில் அமைத்தனர். காந்தாரக் கலைச் சிற்பங்களில் காணப்படும் சில இலை வடிவங்களும், திராட்சை இலையும், மீன்-மனித உருவங்களும் கிரேக்க சிற்பமுறையின் பாற்பட்டவையே.

சாஞ்சி, பர்ஹுத் முதலிய இடங்களில் தொடக்கத்தில் காணப்பட்ட பௌத்த கட்டடங்களில் புத்தருக்கு உருவச் சிலைகள் அமைக்கப்படவில்லை. அவரைக் குறிக்க சின்னங்களே பயன்படுத்தப்பட்டன.

காந்தாரச் சிற்பக்கலை முறை தோன்றிய பின்னர்தான் புத்தருக்கு முதல் முறையாக முழு உருவச் சிலைகள் அமைக்கப் பட்டன. காந்தாரச் சிற்பிக்கு இந்திய உள்ளமும் கிரேக்கத் தொழிற் நுட்பக் கரங்களும் அமைந்திருந்தன.

**கனிஷ்கரைப் பற்றிய மதிப்பீடு**

கனிஷ்கரின் ஆட்சி பழங்கால இந்தியாவின் மிக முக்கிய வரலாற்றுச் சிறப்புமிக்க காலமாகும். அரசியல் முறையில், இதற்கு முன்னர் கண்டிராதபடி, இந்தியா மத்திய ஆசியாவோடு தொடர்பு கொண்டது. இந்தியாவின் கிழக்கே அமைந்த மகத நாட்டிலிருந்து, வடமேற்கே அமைந்த புருஷபுரத்திற்கு அரசியல் முக்கியத்துவம் மாற்றப்பட்டது. கலாச்சாரக்

கண்ணோட்டத்தில் இந்தியக் கலாச்சாரத்தில் அந்நியர்கள் ஒன்றியதை இது ஏற்படுத்தியது. சமயத்துறையில் மகாயான பௌத்த சமயத்தின் தோற்றத்தையும், அது மத்திய, தூரக் கிழக்கு நாடுகளில் பரவியதையும் இது கண்டது.

### பிற்காலக் குஷாண மன்னர்கள்

கனிஷ்கருக்குப் பின்னர் அவர் மைந்தர் ஹுவிஷ்கர் அரசரானார். குஷாண வமிசத்து மிக முக்கியக் கடைசி மன்னர் வாசுதேவர் ஆவார். அவரது காலத்தில் குஷாணப் பேரரசு கனிஷ்கர் பேரரசைப் போல் பெரிதாக அமையவில்லை. அவரது ஆட்சி பஞ்சாப், உத்திரப்பிரதேசம் முதலிய பகுதிகளில்தான் அமைந்திருந்தது. அவருடைய பெயரே, எவ்வாறு இவ்வந்நிய அரசர்கள், படிப்படியாக இந்திய மயமாக மாறிவந்தார்கள் என்பதைக் குறிக்கிறது. வாசுதேவர் ஒரு சிவபக்தர். அவருக்குப் பிறகு குஷாணப் பேரரசு வலிமைகுன்றியது.

கனிஷ்கருக்குப் பின்வந்த மன்னர்கள் ஒரு நூற்றைம்பது ஆண்டுகள் ஆண்டனர். பின்பு படிப்படியாகக் குஷாண அரசு சிதறி, குலைந்து, கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் மறைந்தேவிட்டது.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஒவ்வொன்றிற்கும் ஐந்து வரிகளில் விடை அளிக்கவும்:

1. குஷாணர்கள் யார்?
2. குஷாணப் பேரரசின் பரப்பினைக் குறிப்பிடுக.
3. குஷாண பேரரசின் தலைநகர் யாது?
4. சீனர்களிடமிருந்து கனிஷ்கர்வென்ற பிரதேசங்கள் யாவை?
5. கனிஷ்கர் பின்பற்றிய பௌத்த சமயத்தின் பெயர் யாது?
6. அசோகர் பின்பற்றிய பௌத்த சமயத்திற்கும், கனிஷ்கர் பின்பற்றிய பௌத்த சமயத்திற்கும் உள்ள இரண்டு வேறுபாடுகளைக் கூறுக.

7. காந்தாரச் சிற்பக்கலைக்கும், அதற்கு முன்னர் இருந்த சிற்பக்கலைக்கும் உள்ள வேறுபாடுகளில் இரண்டினைக் கூறுக.

**II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகளைக் கொண்டு பூர்த்தி செய்க:**

1. கனிஷ்கரால் கூட்டப்பெற்ற நான்காவது பௌத்த சமயப் பேரவை நடந்த இடம் ———.

2. கனிஷ்கர் அவையை அணி செய்த இரண்டு மருத்துவ மேதைகள் ———, ——— ஆவர்.

3. காந்தாரச் சிற்பக்கலை இயற்கையில் ——— தன்மையுடையது; ஆனால் அமைப்பு முறையும் தொழில் நுட்பமும் ——— தன்மை உடையது.

**III. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளில் விடை அளிக்கவும்:**

1. மகாயான பௌத்தசமயத்தின் சிறப்பியல்புகள் யாவை? அது எவ்வாறு ஹீனயான பௌத்தசமயத்தினின்றும் கொள்கையில் மாறுபட்டது?

2. காந்தாரக்கலை என்றால் என்ன? அதன் தன்மையை விவரி?

3. இந்திய வரலாற்றில் கனிஷ்கரின் ஆட்சிக்காலம் ஒரு முக்கியச் சகாப்தமாக விளங்கியது என்பதை சான்றுகளோடு விளக்குக.

**IV. நான்கு மாற்று விடைகளுள் சரியானதைத் தேர்ந்தெடுக்கவும்:**

1. கனிஷ்கர் கூட்டிய நான்காவது பௌத்தப் பேரவையின் தலைவராக இருந்தவர்

(அ) அசுவகோஷர் ( )

(ஆ) நாகர்ச்சுனர்

(இ) சரகர்

(ஈ) கனிஷ்கரே

2. புத்தரைச் சின்னங்களில் மட்டும் வழிபடுவது

(அ) ஹீனயானமுறை ( )

(ஆ) மகாயான முறை

(இ) இந்துமுறை

(ஈ) காந்தாரச் சிற்பமுறை

## செய்முறைப் பயிற்சி

ஆசியாவின் படம் வரைந்து அதில் கனிஷ்கர் பேரரசின் பரப்பினைக் குறிக்கவும். அதில் பின்வரும் இடங்களைக் குறிக்கவும்.

1. புருஷபுரம் 2. கோடான் 3. யார்கண்ட்
4. காஷ்கர் 5. காஷ்மீர் 6. காந்தாரம்

# 5. பண்டைத் தமிழரசுகள்

### அறிமுகம்

பண்டைக்காலத்தில், தமிழகத்தில் சிறந்து விளங்கிய மூன்று அரசுகளின் வரலாற்றை இப்பாடத்தில் நாம் காண்போம்.

பண்டைத் தமிழரசுகள் முறையே சேர, சோழ, பாண்டிய அரசுகளாகும் இம்மூவரசுகளும் சேர்ந்தது பண்டைத் தமிழகம் என அழைக்கப்பெற்றது. இவ்வரசுகளில் வாழ்ந்த மக்கள் தமிழர்கள் ஆவர். பண்டைத் தமிழகம் வடக்கே திருவேங்கட மலையிலிருந்து, தெற்கே கன்யாகுமரிமுனை வரையிலும், கிழக்கே சோழ மண்டலக் கடற்கரையிலிருந்து, மேற்கே அரபிக் கடல் வரையிலும் பரவியிருந்தது.

### சான்றுகள்

இருபெரும் வீரகாவியங்களான இராமாயணமும், மகா பாரதமும், தமிழகத்தைப்பற்றிய செய்திகளைக் கொண்டுள்ளன. மௌரியர் காலத்து அசோகரது கல்வெட்டுகள், அக்கால தமிழக வரலாற்றினை அறிய உதவுகின்றன. அயல்நாட்டுப் புவியியலறிஞர் **பிளினி, ஸ்ட்ராபோ, டாலமி** முதலியவர்கள் இந்நாடு, இந்நாட்டின் வாணிகம், துறைமுகங்கள் முதலிய வற்றைப் பற்றித் தங்கள் நூல்களில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

**அரிக்காமேடு** என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட ரோம நாட்டு நாணயங்கள் பழங்காலத் தமிழரின் கடல் வாணிகத் திற்குச் சான்று பகருகின்றன. மேலும் சங்க இலக்கியங்களி லிருந்தும், தமிழக மக்களின் வாழ்க்கையைப் பற்றிய பல செய்தி களை நாம் அறிந்து கொள்ளலாம்.

### மூவரசுகள்

தமிழகத்தின் வரலாறு, முக்கியமாக மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டிய அரசுகளின் வரலாறேயாகும். இம்முடியுடை மூவேந்தர்களைத் தவிர வேறு சிற்றரசர்களும், வேளிரும் இவ் வரலாற்றில் பேசப்படுவர். பெரும்பாலும் பண்டைத் தமிழக வரலாறு இம் முடியுடை மூவேந்தர்களிடையே ஏற்பட்ட போர் நிகழ்ச்சிகளின் வரலாறாகவே அமைந்துள்ளது.

இம்மூவர்க்கும் பொதுவான சில சிறப்புத் தன்மைகள் இருந்தன. தங்கள் அவையில் கல்வியிற் சிறந்த ஆன்றோர்களை

படம் 8. பண்டைத் தமிழரசுகள்

யும், கவிஞர்களையும் ஆதரிப்பதில் இவர்கள் பெருமை கொண்டார்கள். மக்களின் நலம்நாடி நீதிவழுவாது ஆண்டார்கள்.

இம்மன்னர்களுக்கு நிர்வாகத்தில் ஆலோசனை அளிக்க ஐம்பெறுங்குழு, எண்பேராயம் என்ற குழுக்கள் இருந்தன. இம்மூவேந்தர்க்கும், தனித்தனிச் சின்னங்களும், கொடியும் அமைந்திருந்தன. சேர அரசர் கொடியில் வில் அம்புச் சின்னமும், சோழர் கொடியில் புலிச் சின்னமும், பாண்டியர்க் கொடியில் மீன் சின்னமும் பொறிக்கப் பெற்றிருந்தன.

## சேரர்கள்

தற்கால கேரளநாடு, பண்டைகாலத்தில் சேரநாடு என அழைக்கப்பட்டது. இம்மலை நாட்டில் உள்ள பல ஆறுகளும், ஓடைகளும் பாசனவசதியை அளித்தன. மக்கள் பேசிய மொழி தமிழேயாம். சேரநாட்டின் முக்கியத் துறைமுகங்கள் தொண்டி யும் முசிரியும் ஆகும். அந்நாட்டின் தலைநகர் வஞ்சி.

சேர அரசர்களில் முதல் முக்கிய அரசர் நெடுஞ்சேரலாதன் ஆவார். இவர் மாபெரும் போர் வீரர். இமயவரம்பன் என்னும் சிறப்புப் பெயரைப் பூண்டார். இருப்பினும் இவரது அரசு, இமயம் வரை பரவியிருந்தது என்பதை உண்மையாகக் கொள்ளமுடியாது. எக்காரணம்பற்றி இவர் இச்சிறப்புப் பெயர் பூண்டார் என்பது தெரியவில்லை. இவருக்குச் சேரன் செங்குட்டுவன், இளங்கோவடிகள் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர்.

சேரன் செங்குட்டுவன், கரிகாற்சோழனின் சம காலத்தவன். இவருடைய போர்புகழை இவர் அவைப் புலவர் பரணர் விரிவாகப் பாடியுள்ளார். இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம், செங்குட்டுவன் இமயம்வரை சென்ற செய்தியைத் தருகின்றது. சென்றதின் நோக்கம், கோவலனின் வாழ்க்கைத் துணைநலம் கண்ணகிக்குச் சிலையெடுக்க சிறந்த கல்லைக்கொணரவேயாம். இக்கல்லைக் கொண்டு, கண்ணகிக்குச் சிலை எழுப்பி, ஆலயம் அமைத்து, பக்தியோடும், புகழோடும், எழுச்சியோடும், ஒரு பெருவிழா கொண்டாடப்பட்டது. செங்குட்டுவனுக்குப் பின்னர், சேரநாட்டைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் குறைவாகவே கிடைத்துள்ளன.

## சோழர்கள்

தற்காலத் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளியின் சில பகுதிகள், புதுக்கோட்டை, தென்னார்க்காடு முதலிய மாவட்டங்கள் அடங்கிய பகுதியே பண்டைச் சோழ நாடாகும். தமிழிலக்

கியத்தில் பொன்னி என்று சிறப்பிக்கப்பெறும் 'காவிரி' நதி இந்நாட்டை வளமாக்கியது. சோழ அரசின் தலைநகர் உறையூர். முக்கியத் துறைமுகம் புகார் அல்லது பூம்புகார் என்ற காவிரிப் பூம்பட்டினமாம்.

சங்ககாலச் சோழர்களில் மிகச்சிறந்தவர் கரிகாற்சோழர். அவர் ஓர் இராணுவமேதை கோயில்வெண்ணி என்ற இடத்தில் நடந்த போரில், சேர, பாண்டிய, மற்றும் பல சிற்றரசர்களின் இணைந்த படையினை அவர் முறியடித்து வெற்றிவாகை சூடினார் இப்போர்க்களம் தஞ்சையிலிருந்து 25 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது. மேலும் வாகைப்பரந்தலை எனும் போர்க்களத்தில் கரிகாலர் ஒன்பது வேளிரை வெற்றிகொண்டார். சிங்களத்தீவின்மீது படையெடுத்து, அதன் மன்னனைத் தோற்கடித்து, போர்கைதிகளை அடிமைகளாகத் தமிழகத்திற்குக் கொண்டு வந்தார்.

வீரரான கரிகாலர் சிறந்த ஆட்சியாளருமாவார். அனைவர்க்கும் நடுநிலை நின்று நீதி வழங்கினார். இவர் தன் நாட்டிற்குச் செய்த நீர்ப்பாசன வசதிகள் இன்றும் நம்மால் நினைந்து போற்றப்படுகின்றன. 165 கி மீ. நீளத்திற்குக் காவிரிக்குக் கரையெடுத்த பெருமை இவரைச் சாரும். அதோடு இக்காலப் பொறியியலாரும் போற்றும் வண்ணம், காவிரியாற்றில் கல்லணை அமைத்தும் இவரேதான். இவ்வணை அக்காலத் தொழிலாளர்களின் திறமையைப் பறைசாற்றி நிற்கின்றது. நீர்வளம் மிகுந்ததால், நிலவளம் கொழித்து நாட்டில் பயிர்வளம் செழித்தது. எனவே, கரிகாலர் 'கரிகாற் பெருவளத்தான்' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார். கவிஞர்களையும், கல்விமான்களையும் மகிழ்ச்சியுடன் ஆதரித்தார். பட்டினப்பாலை பாடிய உருத்திரங்கண்ணனார் எனும் புலவர் கரிகாலர் அவைக்கு அணி செய்தார்.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் கரிகாலனுக்குப் பிறகு, சோழ அரசு சரிய ஆரம்பித்தது. நெடுமுடிக்கிள்ளி என்ற சோழ அரசன் காலத்தில் ஒரு பேரிழப்பு ஏற்பட்டது. புகார் நகரைக் கடல்கொண்டது.

## பாண்டியர்கள்

பண்டைக்கால பாண்டிய நாடு, தற்கால மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் முதலிய மாவட்டங்களையும், புதுக்கோட்டை மாவட்டத்தில் ஒரு பகுதியையும் உள்ளடக்கி

இருந்தது. வைகை நதியும், தாமிரவருணி நதியும் பாயும் இந்நாடு மீன் வளத்திற்குப் புகழ்பெற்றது. கொற்கை இந்நாட்டின் முக்கியத் துறைமுகமாகும். தமிழ்ச் சங்கங்களின் இருப்பிடமான மதுரை, பாண்டிய நாட்டின் தலைநகராகத் திகழ்ந்தது. பாண்டிய, மன்னர்கள் தமிழிலக்கியத்தின் புரவலர்கள் எனப் போற்றப் பட்டார்கள்.

பாண்டிய மன்னர்களில் சிலப்பதிகாரம் கூறும் முதலாம் நெடுஞ்செழியன் நீதிவழங்குதற்குப் பெயர் பெற்றான். ஆராயாமல், அநியாயமாகக் கண்ணகியின் கணவன் கோவலனைக் கொன்றதற்காக, மனம் உடைந்து உடன் இறந்தான்.

பாண்டிய மன்னர்களுள் மிகச் சிறந்தவர், இரண்டாம் நெடுஞ்செழியன் ஆவார் இவரது இளமைப் பருவத்தே சேர, சோழ நாட்டு மன்னரும், ஐந்து குறுநிலத் தலைவர்களும் இணைந்து பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்தனர். தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாரூருக்கு 13 கி.மீ. தூரத்தில் அமைந்த தலையாலங்கானம் என்ற இடத்தில் நடந்த இப்போரில் நெடுஞ்செழியன் தம் பகைவர்களுக்குப் பேரடி கொடுத்தான்; மறக்கமுடியாத தோல்வி அவர்களுக்கு ஏற்பட்டது. ஆனைக்கண்சேய் என்ற சேர அரசன் கைது செய்யப்பட்டு, சிறையில் அடைக்கப்பட்டான். மதுரைக்காஞ்சி என்ற தமிழ்ப் பாடல் இவனைத் ‘தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன்’ என்று புகழ்ந்துரைக்கின்றது. இம்மன்னன் தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்தான். நக்கீரரும், மாங்குடி மருதனாரும் இவரது அவை புலவர்களாம்.

இரண்டாம் நெடுஞ்செழியனுக்குப் பின்னர், பாண்டிய அரசு தேய்ந்தது. தமிழகம், களப்பிரர்கள் ஆட்சியில் சிக்கியது. அவர்கள் ஆட்சி நீடித்த கி பி. 6–வது நூற்றாண்டு வரையில் தமிழகத்தில் அராஜகமும், குழப்பமும் மலிந்திருந்தன.

**தமிழிலக்கியம்**

கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்னமேயே, பழந்தமிழர் மிகச் சிறந்த நாகரிகத்தோடு திகழ்ந்தனர். அக்காலத்தில் இயற்றப் பட்ட எட்டுத்தொகை, பத்துப்பாட்டுப் போன்ற நூல்கள் தமிழர்களின் சமூகம், அரசியல், பண்பாடு, சமயம் முதலிய வற்றைப் பற்றி நமக்கு அறிவிக்கின்றன.

தமிழ்வேந்தர்கள், தமிழிலக்கியத்தை வளர்க்க அறிஞர் களையும், புலவர்களையும், அள்ளிக்கொடுத்துச் சிறப்புச் செய்து

ஆதரித்தார்கள். தமிழிலக்கியம் வளம்கொழித்துச் சிறக்க முதல், இடை, கடை என்ற தமிழ்ச் சங்கங்கள் பெரிதும் உதவின.

முதற்சங்கத்தின் முக்கியப் புலவர் அகத்தியர். அவர் இயற்றிய முதல் தமிழ் இலக்கண நூல் அகத்தியம் எனப்படும். அவரைப் பின்பற்றி, அவரது சீடர் தொல்காப்பியர், தொல்காப்பியம் என்னும் மற்றொரு தமிழிலக்கண நூலை ஆக்கினார். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதலியன கடைச்சங்க காலத்தில் இயற்றப்பட்ட நூல்களாம்.

சங்க காலத்திற்குப் பின்னர் தோன்றிய இலக்கிய வளம் செறிந்த ஐம்பெரும் காப்பியங்கள், தமிழிலக்கியத்திற்கு, வளமும், பெருமையும் சேர்த்தன. அவை முறையே சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்பனவாம். இந்த இலக்கிய ஆதாரங்களிலிருந்துதான் பண்டைத் தமிழகத்தின் அரசியல், சமூக, கலாச்சார நிலைகளை நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

### குறளின் பெருமை

தமிழ் இலக்கியங்களுள் தலைசிறந்து நிற்பது திருக்குறள் என்னும் நூலாம். இப்பெருமைமிக்க நூலை இயற்றியவர் திருவள்ளுவர் ஆவார். இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் எனும் மூன்று பிரிவுகளைக் கொண்டது. ஒவ்வொரு தலைப்பிலும், பத்து ஈரடிப்பாடல்கள் கொண்ட 130 அதிகாரங்கள் திருக்குறளில் அமைந்துள்ளன. குறட்பாக்களின் மொத்த எண்ணிக்கை 1330. இது கடைச்சங்க காலத்து, பதினெண்கீழ்க்கணக்கு நூல் வகையில் அடங்கும் சிறப்புமிக்க இந்நூல் ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு, கிரேக்கம், இலத்தீனம், மற்றும் பாரசீக, சிங்கள, இரஷ்ய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. குறள் சொல்லும் அறமும், உண்மையும், எக்காலத்திற்கும், எம்மக்கட்கும், எந்நாட்டிற்கும் பொருந்தும் பெருமையுடையன எனவே வள்ளுவர், தமிழ் நாட்டிற்கு மட்டுமில்லாமல், மனித குலத்திற்கே உரிய உலகப் புகழ்மிக்க புலவராகிறார். நம்நாட்டிலும் எல்லாப் பிராந்திய மொழிகளிலும், திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. மன்னன், அமைச்சர்கள், இல்லறத்தோர், வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலுள்ள மக்கள் அனைவரும் ஆற்றவேண்டிய கடமைகளை இந்நூல் விளக்கமாகக் கூறுகிறது. போர், அரசியல் சூழ்ச்சி, ஆட்சியின் பாங்கு முதலியவற்றைப்பற்றியும் திருக்குறள் பேசுகின்றது.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஐந்து வரிகளுக்கு மேற்படாமல் விடையளிக்கவும் :

1. பண்டைத் தமிழரசுகளைப் பற்றி அறிய நமக்கு ஆதாரமாக இருப்பவை யாவை ?
2. பண்டைத் தமிழ் இராச்சியங்களையும், அவற்றின் தலை நகர், முக்கியத் துறைமுகம் இவற்றையும் குறிப்பிடு.
3. தமிழ் மன்னர்களுக்குச் சிறப்புற ஆட்சி செய்ய அமைந்த ஆலோசனை சபைகள் யாவை?
4. சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் கொடிச் சின்னங்கள் யாவை ?
5. சேர மன்னர்களில் தலை சிறந்தவர் யார் ? அவர் ஏன் நம் நெஞ்சில் என்றும் நிற்கிறார் ?
6. சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் யார் ?

II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகொண்டு பூர்த்தி செய்யவும் :

1. செங்குட்டுவனின் போர் வீரத்தைப் புகழ்ந்து பாடிய புலவர் ———.
2. கரிகாலன், சேர, பாண்டிய மற்றும் பல சிற்றரசர்களின் கூட்டணிப்படையைத் தோற்கடித்த போர்க்களம் ———.
3. கல்லணை ——— ஆற்றின்மீது ——— மன்னரால் கட்டப்பட்டது.
4. தலையாலங்கானத்துப் போர்க்களத்தில் நெடுஞ் செழியனால் சிறைபடுத்தப்பட்ட சேர மன்னன் ———.

III. கொடுக்கப்பட்டுள்ள மாற்று விடைகளுள் சரியானவிடை அமைந்த எழுத்தினை வலப்பக்க பிறை அடைகளில் எழுது :

1. சேர அரசின் தலைநகர்

(அ) தொண்டி ( )
(ஆ) முசிறி
(இ) வஞ்சி
(ஈ) புகார்

2. இமயவரம்பன் எனப் புகழ்பெற்ற சேரமன்னன்

(அ) சேரன் செங்குட்டுவன் ( )
(ஆ) நெடுஞ்சேரலாதன்
(இ) இளங்கோ
(ஈ) பரணர்

3. வாகைப் பரந்தலைப் போரை வென்றவர்

(அ) நெடுஞ்சேரலாதன் ( )
(ஆ) கரிகாலன்
(இ) நெடுஞ்செழியன்
(ஈ) பரணர்

4. முதல் சங்ககாலத்தின் முக்கியப் புலவர்

(அ) தொல்காப்பியர் ( )
(ஆ) நக்கீரர்
(இ) பரணர்
(ஈ) அகத்தியர்

IV. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளில் விடையளி:

1. சங்ககாலச் சோழர்களில் ஏன் கரிகாலன் சிறந்தவராகக் கருதப்படுகிறார்?

2. இரண்டாம் நெடுஞ்செழியனின் பெருமைகள் யாவை?

3. குறளின் அருமை பெருமைகளை விளக்குக.

4. சங்ககாலத்து இலக்கியங்களைப் பற்றி ஒரு குறிப்பு வரைக.

## செய்முறைப் பயிற்சி

தென்னிந்தியாவின் படம் வரைந்து, அதில் பண்டைத் தமிழகத்தையும், மூவேந்தர் நாடுகளையும் தலைநகரங்களையும் குறிப்பிடுக. அதேபடத்தில்

1. வெண்ணி, 2. தலையாலங்கானம், 3. தொண்டி,
4. முசிறி, 5. கொற்கை, 6. புகார்,
ஆகியவற்றையும் குறிப்பிடுக.

# 6. குப்தர் காலப் பெருமைகள்

## (கி. பி. 300-600)

### அறிமுகம்

மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்கு 500 ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் மகத நாட்டில் மிகச் சிறந்த வலிமைவாய்ந்த பேரரசு தோன்றியது இதனை அமைத்தவர்கள் குப்த வமிசத்தினர் ஆவர் இவ்வமிசத்தின் முதல் இரண்டு மன்னர்கள் முறையே ஸ்ரீ குப்தரும், கடோத்கஜ குப்தரும் ஆவார்கள். அவர்கள் சுதந் தரமுள்ள சிற்றரசர்கள். இவ்வமிசத்தின் மூன்றாம் அரசர் முதலாம் சந்திரகுப்தர் 'மகாராஜாதிராஜா' (மன்னர் மன்னன்) என்னும் சிறப்புப் புகழ் பெயரைச் சூட்டிக்கொண்டார். இதன் மூலம் இவர் தனக்கு முந்திய இரு அரசர்களைவிட உயர்ந்த மதிப்பைப் பெற்றார் என்று அறியலாம்.

### முதலாம் சந்திரகுப்தர் (கி.பி. 320-330)

இவர் கி.பி. 320 இல் அரியணை ஏறினார். இந்நிகழ்ச்சியைக் கொண்டாடும் பொருட்டுக் குப்த ஆண்டு அல்லது குப்த சகாப்தம் என்ற ஒன்றைத் துவக்கினார். தன் அதிகாரத்தையும், செல்வாக் கையும் பலப்படுத்திகொள்ள வைசாலி நாட்டு லிச்சாவி வமிசத்து இளவரசி குமாரதேவியை இவர் மணம் புரிந்தார். இத்திருமண உறவு குப்தர்களுக்குப் பெருமையையும் முக்கியத்து வத்தையும் அளித்தது என்பதை இம்மன்னர் தான் வெளியிட்ட நாணயங்களில் குமாரதேவியின் உருவத்தைப் பொறித்ததி லிருந்து அறியலாம். புராணங்களின்படி இவருடைய அரசில் சாகேதம் (அயோத்தியா), பிரயாகை (அலகாபாத்), மகதம் (தென்பீகார்) முதலியன அடங்கும். இவர் பேரரசின் தலைநகர் பாடலிபுத்திரமாகும்.

### சமுத்திரகுப்தர் (கி. பி. 330-380)

முதலாம் சந்திரகுப்தரின் மைந்தரான சமுத்திரகுப்தர் கி.பி. 330இல் அரசரானார். குப்த மன்னர்களுள் மிகச் சிறந் தவர் இவரே. உண்மையில் பண்டைக்கால இந்திய மன்னர்களில் மிகப் புகழ்வாய்ந்தவரும் பல திறமைகள் உடையவரும் இவரே. இவரது தந்தை தனக்குப் பின் இவரையே அரசராகத் தேர்ந் தெடுத்தார்.

**அவரது வெற்றிகள் :** சமுத்திரகுப்தர் பெரும்போர்வீரர். பல திசைகளிலும் உள்ள அரசர்களை வெற்றிகொள்ளத் துவங்கினார். பல வடஇந்திய அரசர்களை வென்று அவர்களது அரசுகளைத் தன் பேரரசோடு சேர்த்தார் விரைவில் அவர் கிழக்குப் பஞ்சாபை யும் டெல்லியையும் வென்றார். மத்திய இந்தியாவில் அமைந்த மலை நாடுகளின் மன்னர்களையும் தன் அடிமைப்படுத்தினார். தென்கிழக்கு வங்காளம், காமரூபம், நேபாளம் முதலிய நாடு களும் அவரது மேலாண்மையை ஒத்துக்கொண்டன. எல்லைப் புறத்திலுள்ள இராஜஸ்தான், பஞ்சாப், மத்திய இந்தியா முதலியவற்றில் அமைந்த சில பழங்குடி அரசுகள் அவருக்குத் தாமாகவே அடிபணிந்தன. சமுத்திரகுப்தரால் நேரடியாக ஆளப்பட்ட பேரரசின் வடஎல்லை—இமயமலை, தென் எல்லை—விந்திய மலை, மேற்கு எல்லை—சம்பல் நதி, கிழக்கு எல்லை—வங்காளா விரிகுடாவாகும்.

**தக்காணப் படையெடுப்புகள் :** சமுத்திரகுப்தர் தன் படை வலிமையைத் தக்காண நாடுகளும் உணரச் செய்தார் ஒரிசா, ஆந்திர நாட்டு மன்னர்களையும், காஞ்சி மன்னன் விஷ்ணுகோபர் உட்பட பன்னிருவரையும் இவர் போரில் புறங்கண்டார். இருப்பினும் அவர்களது அரசுகளைத் தன் பேரரசோடு இணைக்க வில்லை. தன்னுடைய மேலாண்மையை அவர்கள் ஒப்புக் கொண்டதோடு திருப்தியடைந்து விட்டார். சீன நூல்களிலிருந்து சிங்கள மன்னன் மேகவர்மன் சமுத்திரகுப்தர் அவைக்குச் சிறந்த பரிசுகளோடு ஒரு தூதுக்குழுவை அனுப்பியதாகவும் ஒரு பௌத்த மடம் கட்ட அனுமதி பெற்றான் என்றும் தெரிகிறது. தன் மேலாண்மையைப் புலப்படுத்தும் வகையில் சமுத்திரகுப்தர் அஸ்வமேதயாகம் செய்தார். **இந்திய நெப்போலியன்** என்று வரலாற்று ஆசிரியர்களால் சிறப்பிக்கப்படுகிறார்.

வாளெடுத்துப் போர்புரியும் சமுத்திரகுப்தருக்கு இனிய இசைப் பாடும் திறமையும் இருந்தது. தானாகவே பாடல்களை இயற்றும் வல்லமை பெற்றுக் கவிராஜன் என்ற சிறப்புப் பெயரை யும் பெற்றார். அவரது இசைச் சுவையும், திறமையும் அவரது நாணயங்களில் அவர் வீணை வாசிப்பது போல் தன் உருவத்தைப் பொறித்திருப்பதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

சமுத்திரகுப்தரது அவைக் கவிஞர் ஹரிசேனர், அவரைப் பற்றி எழுதிய புகழ் பாடல்கள் அலகாபாத்தில் உள்ள அசோகர் கால கல் தூணில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அதிலிருந்து சமுத்திர குப்தருடைய வீரதீர சாதனைகளையும் குணநல மேன்மைகளையும் நாம் அறியமுடிகிறது.

**சந்திரகுப்த விக்கிரமாதித்தியர் (கி.பி. 380-413)**

சமுத்திர குப்தருக்குப்பின் அவரது மைந்தன் ராமகுப்தன் அரியணை ஏறினான். சாக நாட்டு மன்னனுக்குத் தன் மனைவியை




படம் 9. குப்தப் பேரரசு

அடகு வைத்தபடியால், அவனது தம்பி சந்திரகுப்தரால் கொல்லப்பட்டான். அவனுக்குப்பின் இரண்டாம் சந்திரகுப்தர்

குப்தப் பேரரசின் மன்னரானார். இவரும் ஒரு பெரும் போர் வீரர். பல வெற்றிகளின் மூலம் தன் பேரரசைப் பெருக்கினார். சாக மன்னன் மூன்றாம் ருத்திரசிம்மனைக் கொன்று மாளவத்தையும், கூர்ஜரத்தையும் இவர் குப்தப் பேரரசோடு சேர்த்தார். சாகர்களை வென்றதால் சாகாரி என்ற புகழ் பெயரைச் சூட்டிக் கொண்டார். போராற்றல் மிகுந்திருந் தமையால் இவருக்கு விக்கிரமாதித்தியன் (வலிமையில் ஆதவன்) என்ற புகழ்ப்பெயரும் ஏற்பட்டது.

இரண்டாம் சந்திரகுப்தர் தன் பேரரசை திருமண உறவின் மூலமும் வலிதாக்கினார். குபேரநாகா என்னும் நாக இளவரசியை மணந்து மேற்கு மத்திய மாகாணத்திலிருந்த நாகத் தலைவர்களின் ஆதரவைப் பெற்றார். மேலும் தன் மகள் பிரபாவதியைத் தக்காணத்தி லுள்ள வாகாடக மன்னன் இரண்டாம் ருத்திர சேன னுக்கு மணம் செய்வித்தார்.



படம் 10.
இரண்டாம் சந்திரகுப்தர்-நாணயம்

இரண்டாம் சந்திரகுப்தர் கிழக்கு வங்கத்தில் பகைமைக் கூட்டணித் தலைவர்களைத் தோற்கடித்தார். அவரது படைகள் குஷாண வமிசத் தினர் ஆண்டுவந்த பீயஸ் நதிப் பள்ளதாக்கு வரை முன்னேறிச் சென்றன.

இவர் உஜ்ஜயினி நகரைத் தன் பரந்த பேரரசின் இரண்டாம் தலைநகராக்கினார். இவரது பேரரசு மேற்கே குஜராத்திலிருந்து கிழக்கே வங்காளம் வரையிலும், வடக்கே இமயத்தின் அடிவாரத் திலிருந்து தெற்கே நர்மதா, தபதி நதிகள் வரையிலும் பரவி யிருந்தது.

இரண்டாம் சந்திரகுப்தர் கற்றோரையும், அறிவியல் மேதை களையும் ஆதரித்த பெரும் புரவலர். நவரத்தினங்கள் (ஒன்பது மணிகள்) என்ற புகழ்மிக்க அறிஞர்கள் அவரது அவைக்கு அணி செய்தார்கள். அவர்களுள் சிறந்த வடமொழிக் கவிஞரும், நாடக ஆசிரியருமான காளிதாசர் மிகப் புகழ்வாய்ந்தவர் ஆவார்.

இரண்டாம் சந்திரகுப்தருக்குப் பிறகு குப்தப் பேரரசு நலிவடைந்தது. மத்திய ஆசியாவைச் சார்ந்த ஹூணர்கள் என்ற முரட்டுக் கூட்டத்தினர் வடமேற்கு எல்லைப் புறத்தைத் தாக்கினார்கள். இரண்டாம் சந்திரகுப்தரின் மைந்தர் குமார குப்தர் ஓரளவுக்கு அவர்களது படையெடுப்பைத் தடுத்து நிறுத்திய போதிலும், அவருக்குப் பின்வந்த ஸ்கந்த குப்தர் காலத்தில் ஹூணர்கள் தோராமாணன், மிகிரகுலன் என்ற தங்கள் தலைவர்களின் கீழ் வெற்றி பெற்றனர்.

## பாகியானின் குறிப்புகள் (கி.பி. 399-413)

சீனப் பயணி **பாகியான்** என்பவர் இரண்டாம் சந்திரகுப்தர் காலத்தில் இந்தியாவிற்கு வந்தார். குப்தப் பேரரசில் ஆறு ஆண்டுகள் தங்கினார். அவர் வருகையின் நோக்கம், பௌத்த சமயப் புனித நூல்களைத் திரட்டுவதும், பௌத்த சமய புனித இடங்களைத் தரிசிப்பதும் ஆகும். குப்தப் பேரரசு மக்களைப் பற்றி அவர் பல பயனுள்ள செய்திகளைத் தருகிறார். நமக்கு எழுத்து மூலம் செய்திகள் அளிக்கும் முதல் சீனப் பயணி அவரே. அவரது குறிப்புகளின்படி, 'குப்த பேரரசில் மக்கள் நிறைந்த அளவில் மிக மகிழ்ச்சியாய் இருந்தனர். அவர்கள் தங்கள் உடைமைப் பொருள்களைப் பதிவு செய்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. அறங்காவலர்கள் ஆணைகள் இவற்றி னாலும் துன்புறுத்தப்படவில்லை. மன்னன் மரணதண்டனை அல்லது மற்ற கொடிய தண்டனைகளின்றி அரசாண்டான். பல பிரிவுகளைச் சார்ந்த மக்கள் தருமச் சத்திரங்கள் அமைத்தனர். அவைகளில் பயணிகளுக்கு அறைகளும், சாய்வு நாற்காலிகளும், படுக்கைகளும், உணவும், பானங்களும் அளிக்கப்பட்டன. மகத நாடு செல்வமும், வளமையும் மிக்க நகரங்களை உடைத் தாயிருந்தது. மக்களின் ஈகையும், நேர்மையும் புகழ்பெற்றி ருந்தன. பாடலிபுத்திரத்தில் இரண்டு பெரிய பௌத்த மடால யங்கள் இருந்தன. குப்த மன்னன் வைணவ மதத்தைச் சார்ந்த இந்துவாயிருந்த போதும் நாட்டில் பௌத்த மதமும் தழைத்தது. மன்னனும் மக்களும் சமயப் பொறை உடையவராயிருந்தனர்'.

## குப்தர்கால பெருமைகள் (கி.பி. 300-600)

இந்திய வரலாற்றில் குப்தர்கள் காலத்தில் அரசியல் ஐக்கியமும், வளமும் மிகுந்திருந்தன. நீண்டநாள் வாழ்ந்த வலிமைமிக்க மன்னர்கள் நாட்டைத் திறமையாக ஆண்டார்கள். எனவே, குப்தர்கள் காலத்தில் இந்தியாவில் கலைகளும், இலக்கியமும், அறிவியலும் வெகுவாக மலர்ந்தன.

**இந்து சமய மறுமலர்ச்சி**

குப்த மன்னர்கள் இந்து சமயத்தை ஆதரித்தார்கள். இரண்டாம் சந்திரகுப்தர் ஒரு சிறந்த விஷ்ணு பக்தர்; ஒரு பரம பாகவதர். குப்தர்களின் காலம் இந்து சமய மறுமலர்ச்சிக் காலம் எனக் கருதப்படுகிறது. குப்தர்கள் இந்து சமயத்தின் இரு பெரும் பிரிவுகளான சைவ மதத்தையும், வைணவ மதத்தையும் பின்பற்றினார்கள். பக்தி மார்க்கத்தில் மக்களிடம் அன்பு செலுத்துவதற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இதன் காரணமாகப் பல நன்மை பயக்கும் அறச் செயல்கள் சிறந்து விளங்கின. உயரமான தூண்கள், அழகான வாயில்கள், வியப்பூட்டும் சிலைகள், மிகச்சிறந்த ஆலயங்கள் முதலியன விஷ்ணு, கார்த்திகேயன், ஆதவன், தீர்த்தங்கரர்கள், புத்தர் முதலியவர்களுக்கு எழுப்பப்பட்டன. மக்கள் அறம் செய்தலையும், நேர்மையையும் வாழ்க்கையில் கடைபிடித்தார்கள்.

குப்தர்கள் காலத்தில்தான் இந்து புராணங்கள் உருப் பெற்றுப் பதினெட்டாகத் தொகுக்கப்பட்டன.

**வடமொழி இலக்கிய வளர்ச்சி**

குப்த மன்னர்கள் ஆட்சியில் வடமொழியாகிய சமஸ்கிருதம் புகழின் உச்சியில் இருந்தது. அக்கால மிகச்சிறந்த கவிஞரான காளிதாசர் விக்கிரமாதித்தன் அவையை அலங்கரித்தார். அழியாத புகழ்பெற்ற காவியங்களான ருதுசம்ஹாரம், மேகதூதம் முதலியவற்றையும், பெரும் காவியங்களான குமார சம்பவத்தையும், ரகுவம்சத்தையும், மிகச்சிறந்த நாடகங்களான மாளவிகாக்னிமித்திரம், விக்கிரம ஊர்வசியம், சாகுந்தலம் முதலியவற்றையும் படைத்தார். அமரசிம்மர் என்பவர் வடமொழி இலக்கண அகராதியான அமரகோசத்தை அளித்தார். விசாகதத்தர் என்பவர் முத்திரா ராட்சஸத்தையும், பாரவி என்பவர் கிராதார்ஜுனீயத்தையும், சூத்திரகர் மிருச்சகடிகத்தையும் ஆக்கிப் புகழ் பெற்றார்கள். புகழ்மிக்க பஞ்சதந்திரக் கதைகள் குப்தர்கள் காலத்தில்தான் எழுதப்பட்டன.

கணித மேதை ஆரியப்பட்டர், ஆரியபட்டீயம் என்ற நூலை எழுதினார். வராகமிகிரர் என்ற வானநூல் விற்பன்னர் பிரகத் சம்ஹிதா என்ற வானநூலை இயற்றினார். மணவியல் அருங்கலையை விளக்கும் காமசூத்திரம் என்னும் நூலை வாத்சாயனர் இயற்றினார். மருத்துவத்துறையில் புகழ்மிக்க தன்வந்திரி இவர்கள் காலத்தில் வாழ்ந்தார்.

**நாலந்தா பல்கலைக் கழகம்**

இது குப்த மன்னர்களில் ஒருவரான குமாரகுப்தரால் தோற்று விக்கப்பட்டது. உலகின் பல்வேறு பாகங்களிலிருந்து மிகச் சிறந்த கல்விமான்கள் இங்கே கூடினர். எனவே மாணாக்கர் கூட்டம் பல நாடுகளிலிருந்தும் இதை நோக்கித் திரளாகப் படை யெடுத்தது. வல்லபியும் இக்காலத்தில் சிறந்து விளங்கிய பல்கலைக் கழகமாகும்.

**குப்தர்கள் காலக் கலை**

குப்தர்கள் காலத்தில் கட்டடக்கலையும், பிற கலைகளும் மேன்மையுற்றன. இக்காலச் சிற்பக்கலைக்குச் சிறந்த உதாரணம் தியோகர் என்ற இடத்தில் அமைந்துள்ள தசாவதாரக் கோயி லாகும். நாலந்தாவிலுள்ள புத்தரின் செம்புச் சிலை இக்காலத்துக் கலைச் சிறப்புக்கு மற்றொரு சான்றாகும்.

குப்தர்களின் காலத்திலிருந்து நாம் இந்தியக் கலாச்சாரத்தில் மிகச் சிறந்த அம்சங்களைக் காணலாம். குப்தர்களின் சிற்பக்கலை இந்தியக் கலைக்குச் சிறந்த முன் மாதிரியாக இருந்ததோடல்லாமல், தென் கிழக்கு ஆசியாவில் குடியேறிய இந்தியர்களுக்கும் ஒரு முன் னோடியாகத் திகழ்ந்தது. மலேயா தீபகற்பம், சுமத்திரா, ஜாவா, வியட்நாம், கம்போடியா முதலிய நாடுகளின் சிற்பக் கலைகள் குப்தக் கலையின் அழிக்க முடியாத முத்திரையைப் பெற்றுள்ளன.



படம் 11. டெல்லியிலுள்ள துருப்பிடியா இரும்புத்தூண்

உலோகத்தால் உருவங்களைச் செய்யும் கலையும் வியத்தகு முறையில் வளர்ச்சியடைந்தது. சந்திரர் தூண் என்றழைக்கப் படுகின்ற டெல்லியிலுள்ள இரும்புத்தூண் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். சுமார் 1500 ஆண்டுகளுக்கு மேலாகக் காற்று, மழை இவைகளை வென்று இன்றும் இவ்விரும்புத் தூண் பளபளப்பாகச் சிறப்பாகத் துருவின்றி நிற்கிறது.

ஓவியக் கலையும் குப்தர்கள் காலத்தில் புகழின் உச்சியை அடைந்தது. அஜந்தாக் குகைகளின் சுவர்களிலும், கூரையிலும் எழுதப்பட்டிருக்கின்ற அழகிய சுவர்க்கோல ஓவியங்கள் இன்றும் உலக மக்களின் மனமார்ந்த பாராட்டுதலை பெற்றுத் திகழ்கின்றன. இவை புத்தருடைய வாழ்க்கை, பௌத்த சமயத்தின் புனிதச் சின்னங்கள், பொருள்கள் இவற்றைப் பற்றியவையாம். இவைகளில் **இறக்கும் இளவரசி, தாயும் சேயும்** என்ற ஓவியங்கள் எல்லோருடைய பாரட்டுதல்களையும் பெற்றுள்ளன. குப்தர் கால உயர்ந்த ரக சுவர்க்கோல ஓவியங்கள் 'பாக்' என்னும் இடத்திலும் காணப்படுகின்றன.

குப்தர்கள் காலத்துக் கலைச் சிறப்பினைக் குப்த மன்னர்கள் வெளியிட்ட பலவிதமான தங்க நாணயங்களிலிருந்தும் அறிந்து கொள்ளலாம். எனவே, இவை இந்தியக் கலையின் மிகச் சிறந்த சான்றுகள் எனக் கருதப்படுவது மிகப் பொருத்தமே. இலக்குமியின் உருவம் பொறிக்கப்பெற்ற சந்திரகுப்தரின் நாணயங்களும், மயில் மீதமர்ந்த கார்த்திகேயன் உருவம் பொறிக்கப் பெற்ற குமாரகுப்தரின் உருவமும், குப்தர் காலத்திய அருமையான அழகிய நாணயங்களுக்கு ஏற்ற எடுத்துக்காட்டுகளாகும். குப்தர்களின் காலத்தில் இந்தியப் பண்பாடு மிக்குயர்ந்த சிறந்த நிலையில் இருந்தது. எனவே, அதனை இந்திய வரலாற்றின் **சிறப்புமிக்கக் காலம்** எனக் கருதுவது மிகப்பொருத்தமே.

## பயிற்சி

**I. பின்வரும் வினாக்களுக்கு மூன்று அல்லது நான்கு வரிகளில் விடையளி :**

1. குப்த மன்னர்களில் சாகாரி என்றழைக்கப்பட்டவர் யார்? அவர் ஏன் அவ்வாறு அழைக்கப்பட்டார்?

2. குப்தர்கள் ஆட்சி காலத்தில் இலக்கியச் சிறப்பிற்குக் காளிதாசர் ஆற்றிய தொண்டுகள் யாவை?

3. குப்தர் காலத்திய ஓவியச் சிறப்பிற்கும், உலோக உருவக்கலைச் சிறப்பிற்கும் இரண்டு உதாரணங்கள் கொடு.

**II. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் 15 வரிகளில் விடை கொடுக்கவும் :**

1. குப்தர் காலத்தின் பெருமைகளை விளக்குக.

அல்லது

குப்தர் ஆட்சிக்காலம் ஏன் இந்திய வரலாற்றில் சிறப்புமிக்கக் காலம் எனப்படுகிறது ?

2. குப்தர் கால மக்களைப் பற்றி சீனப் பயணி பாகியான் கூறுவதென்ன?

3. சமுத்திரகுப்தர் அல்லது சந்திரகுப்த விக்கிரமாதித்தரின் சாதனைகளை விவரி.

4. குப்தர் ஆட்சிக்காலம் இந்து சமய மறுமலர்ச்சிக் காலம் எனப்படுவதேன்?

III. பின்வரும் வாக்கியங்களிலுள்ள கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகொண்டு பூர்த்தி செய்:

1. குப்தர் காலத்துச் சிறந்த சுவரோவியங்கள் ——— என்ற இடத்தில் காணப்படுகின்றன.

2. காளிதாசரின் உலகப் புகழ்பெற்ற நாடகம் ———.

3. குப்தர் காலத்தில் மிகச் சிறந்த வானநூல் அறிஞர் ———.

IV. கொடுக்கப்பட்ட மாற்றுவிடை நான்கில் சரியானதின் முன்னெழுத்தினை வலப்புற பிறை அடைகளில் குறிப்பிடுக:

1. ஹூணர்கள் இந்தியாவின்மீது முதல் முதலில் படையெடுத்தது இவ்வரசர் ஆட்சியில்

(அ) இரண்டாம் சந்திரகுப்தர் ( )
(ஆ) முதலாம் சந்திரகுப்தர்
(இ) குமாரகுப்தர்
(ஈ) ஸ்கந்த குப்தர்

2. இரண்டாவது சந்திரகுப்தரின் இரண்டாம் தலைநகர்

(அ) புரோச் ( )
(ஆ) கல்யாண்
(இ) பாடலிபுத்திரம்
(ஈ) உஜ்ஜயினி

3. மிருச்சகடிகம் என்ற நாடகத்தை எழுதியவர்

(அ) காளிதாசர் ( )
(ஆ) விசாகதத்தர்
(இ) வராகமிகிரர்
(ஈ) சூத்திரகர்

# 7. ஹர்ஷவர்த்தனர்
## (கி.பி. 606-647)

### அறிமுகம்

குப்தப் பேரரசு வீழ்ச்சியடைந்து இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர் மீண்டும் ஒற்றுமை சக்திகள் புதிய கன்னோசி நகரில் அரசியல் முக்கியத்துவம் பெற்று ஏற்றம் பெற்றன. பத்தாம் நூற்றாண்டின் முதற்காற்பகுதிவரை அதிர்ஷ்ட நகர் என்ற பொருள் வாய்ந்த கன்னோசி நகரம் விந்திய மலைக்கு வடக்கே இருந்த பிரதேசங்களில் அரசியல் முக்கியத்துவம் பெற்றது.

### ஆதாரங்கள்

ஹர்ஷரின் ஆட்சியைப் பற்றிய செய்திகள் யுவான்சுவாங் என்ற சீனப் பயணியின் சியூக்கி என்ற பயண நூலிலிருந்தும், பாணர் என்ற ஹர்ஷரின் அவைப்புலவர் எழுதிய ஹர்ஷ சரித்திரம் என்ற நூலிலிருந்தும், அக்காலக் கல்வெட்டுகளி லிருந்தும் கிடைக்கின்றன.

### தானேஸ்வரத்தின் எழுச்சி

குப்தப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் தானேஸ்வரத்தை ஆண்ட வர்த்தன மன்னர்கள் சிறப்புப் பெற்று விளங்கலா னார்கள். அவர்கள் புஷ்யபூதி வமிசத்தினர். இவ்வமிசத்தின் முதல் அரசர் பிரபாகர வர்த்தனர் ஆவார். இவர் கி. பி. 580 லிருந்து கி. பி. 605 வரை ஆண்டார். அவர் ஹூணர்களையும், சிந்து, குஜராத், மாளவம் முதலிய நாடுகளை ஆண்ட இனத்தவர் களையும் தோற்கடித்துத் தனக்கென ஒரு பேரரசை அமைத்துக் கொண்டார். அவருக்கு இராஜ்யவர்த்தனர், ஹர்ஷவர்த்தனர் என்ற இரு புதல்வர்களும் இராஜ்யஸ்ரீ என்ற புதல்வியும் இருந்தனர். அவர் கன்னோசி நாட்டை ஆண்ட மௌகாரி வமிசத்துக்கிரகவர்மனுக்குத் தன் மகளை மணம் செய்வித்துத் தன் நிலையைப் பலப்படுத்திக்கொண்டார். அவரது மரணத்துக்குப் பின், அவர் மைந்தன் இராஜ்யவர்த்தனர் அரியணை ஏறினார். அப்போது மாளவத்தை ஆண்ட தேவகுப்தன் என்ற அரசன் கிரக வர்மனைக் கொன்று இராஜ்யஸ்ரீயைச் சிறைபிடித்தான். எனவே இராஜ்யவர்த்தனர் அவன்மீது படையெடுத்துச் சென்று, அவனை வென்று திரும்புகையில், வலிமைமிக்க சசாங்கன் என்ற வங்காள மன்னரால் சூழ்ச்சிசெய்து கொல்லப்பட்டான்.

## ஹர்ஷ வர்த்தனர்

ஹர்ஷ வர்த்தனர் தன் அண்ணனுக்குப்பின்னர் கி.பி. 606இல் அரசரானார். அப்பொழுது அவருக்கு வயது 16. அவருடைய முதல் வேலை சிறையிலிருந்து தப்பிஓடி விந்தியமலைக் காடுகளில் அலைந்து திரிந்து, தன்னைத் தீயிட்டு மாய்த்துக்கொள்ள முயன்ற தன் தங்கை இராஜ்யஸ்ரீயைக் காப்பாற்றியதேயாகும். கணவனை இழந்த அவள் வேண்டுகோளின்படி ஹர்ஷர் தன் நாடான தானேஸ்வரத்தோடு கன்னோசி நாட்டையும் இணைத்து இரண்டுக்கும் பொது அரசரானார்.

## ஹர்ஷர் பெற்ற வெற்றிகள்

ஹர்ஷர் தம் ஆட்சியின் முதல் ஆறு ஆண்டுகளைப் பஞ்சாப்பின் பெரும்பாலான பகுதிகளையும், உத்திரப்பிரதேசம், பீகார், மாளவம் முதலிய பிரதேசங்களையும் வெற்றிகொள்வதில் கழித்தார். பின்னர் அவர் விந்திய மலைகளைக் கடந்து தக்காணத்தின் மீது படையெடுத்தார். கி.பி. 620இல் நர்மதையாற்றங்கரையில் மேலைச் சாளுக்கிய மன்னர் இரண்டாம் புலிகேசியோடு நடந்த போரில் தோல்வியடைந்தார் (அவர் தக்காண வெற்றி கனவாயிற்று). ஹர்ஷர் தன் பேரரசின் தெற்கு எல்லையாக நர்மதையாற்றை ஒப்புக்கொண்டார். பின்னர் மாளவ மன்னன் தேவகுப்தனைத் தோற்கடித்து அவன் சகோதரன் மாதவகுப்தனை மன்னனாக்கினார். அடுத்து, வல்லபி மன்னன் இரண்டாம் துருவசேனனை வென்று தன் மேலாண்மையை ஒப்புக்கொள்ளும்படி செய்தார். மேலும், தன் மகளை அவனுக்கு மணம் முடித்தார். தொடர்ந்து வங்கத்தின் மீது படையெடுத்துத் தன் பகைவனான சசாங்கனைப் பழிக்குப் பழி வாங்கும் விதத்தில் வென்று, வங்க நாட்டின் ஒரு பகுதியைத் தன் அரசோடு சேர்த்துக்கொண்டார். ஹர்ஷரின் கடைசிப்போர் ஒரிஸ்ஸாவிலுள்ள கஞ்சம் மாவட்டத்தில் 634இல் நடைபெற்றது. இப்போர்களின் விளைவாக ஹர்ஷப் பேரரசு மேற்கே சௌராஷ்டிரத்திலுள்ள வல்லபியிலிருந்து கிழக்கே காமரூபத்தின் எல்லை வரை பரவியிருந்தது. அப்பேரரசின் தென் எல்லை நர்மதை நதியாகும். கி.பி. 641இல் ஹர்ஷர் தைசுங் என்ற சீனப் பேரரசர் அவைக்கு ஒரு தூதுக்குழுவை அனுப்பினார்.

## ஹர்ஷரின் நிர்வாகம்

நிர்வாக வசதிக்காக ஹர்ஷர் தனது பேரரசை பல மாகாணங்களாகப் பிரித்தார். நிர்வாகம் திறம்பட நடக்க அடிக்கடி பெரும் முயற்சிகள் எடுத்துக்கொண்டார். 'இடைவிடாமல்

கடுமையாக உழைத்த அவருக்கு ஒருநாள் மிகக் குறைவான காலமாகப்பட்டது' என யுவான்சுவாங் குறிப்பிடுகிறார்.




படம் 12. ஹர்ஷப் பேரரசு

நிர்வாகத்தினை தானே தனிப்பட்ட முறையிலும் மேற்பார்வையிட்டார். நாட்டில் பல பாகங்களுக்கும் ஆய்வுப் பயணங்கள் மேற்கொண்டு மக்களின் குறைகளை நேரில் கேட்டறிந்தார்.

அவருக்கு நிர்வாகத்தில் உதவி செய்ய ஓர் அமைச்சரவையும் இருந்தது. அவர் பாக, ஹிரணிய, பலி என்ற மூன்றுவித வரிகளை வசூல் செய்தார். பாக என்பது நிலவரியாம். இது தானியமாகப் பெறப்பட்டது. இது மொத்த விளைச்சலில் ஆறில் ஒரு பங்காகும். ஹிரணிய என்பது வணிகர்களாலும் உழவர்களாலும் செலுத்தப்பட்டது. வரிச்சுமை அதிகமில்லை. எனவே வேளாண்மையும், வாணிகமும் செழித்து வளர்ந்தன.

குற்றச்சட்டங்கள் குப்தர் காலத்தைவிட மிகக்கடுமையாக இருந்தன. ஆயுள் தண்டனையும், உறுப்புகள் துண்டித்தலும் வழக்கமாயிருந்தன. தண்டனைகள் கடுமையாக இருந்த போதிலும்கூட நெடுஞ்சாலைகளில் திருடர்கள் பயம் இருந்தது. ஹர்ஷரின் படை மிகப் பெரியது. அதில் யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகிய நால்வகைப் படைகளும் இருந்தன. மேலும் ஹர்ஷர் பயணிகள் தங்க ஓய்வு விடுதிகளும் மனிதருக்கும், விலங்குகளுக்கும் மருத்துவமனைகளும் பிற அறநிலையங்களும் நிறுவினார்.

## பேரறிஞர் ஹர்ஷர்

ஹர்ஷர் காலத்தில் நாலந்தா பல்கலைக்கழகம் புகழின் உச்சியில் மிளிர்ந்தது. ஹர்ஷரே ஒரு சிறந்த எழுத்தாளர். வடமொழியில் அவர் நாகானந்தம், ரத்னாவளி, பிரியதர்சிகா என்ற மூன்று நாடகங்களை எழுதினார். ஹர்ஷசரிதம், காதம்பரி என்ற இலக்கியங்களைப் படைத்த பாணர் ஹர்ஷர் அவையை அழகு படுத்தினார். தண்டி என்பவர் தசகுமாரசரிதம் என்னும் நூலை இயற்றினார். சுபந்து என்ற கல்விமான் வாசவதத்தா என்ற நூலை இயற்றினார். இதிலிருந்து ஹர்ஷர் அறிஞர்களையும், இலக்கியத்தையும் போற்றினார் என்பது புலனாகிறது.

## ஹர்ஷரின் சமயம்

தொடக்கத்தில் ஹர்ஷர் சிவனையும், சூரியனையும் வணங்கினார். ஆனால் பிற்காலத்தில் மகாயான பௌத்த சமயத்தைத் தழுவி, அதனை ஆதரித்தார். இதன் விளைவாக அவர் அரசில் மிருகவதை தடை செய்யப்பட்டது. கி. பி. 643இல் ஹர்ஷர் கன்னோசி நகரில் ஒரு பெரிய பௌத்த சமயப் பேரவையைக் கூட்டினார். இது சமயப் பிரச்சனைகளை விவாதித்து முடிவெடுத்தது. இதற்கு மாகாயான, ஹீனயான, இந்து சமயங்களைச்சார்ந்த பல மன்னர்களும் குருமார்களும் வருகை தந்தார்கள். இப்பேரவைக்குச் சீனப் பயணியும், சட்ட விற்பன்னருமான யுவான்சுவாங் தலைமை தாங்கும் பேறு

பெற்றார். ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை ஹர்ஷர் பிரயாகை நகரில் சமய விழா நடத்தினார். அவ்வமயம் தாம் சேர்த்து வைத்த எல்லாச் செல்வத்தையும் பொருள்களையும் கொடையாக, சமய வேறுபாடுயின்றி அனைவருக்கும் அள்ளி வழங்கினார். ஒருமுறை தம்மிடமிருந்த எல்லா ஆபரணங்களையும், உடைகளையும் கூட தானமாகக் கொடுத்துவிட்டார். ஹர்ஷர் சமயச் சகிப்புத்தன்மை வாய்ந்தவர். அவர் புத்தரை மட்டுமல்லாது சூரியனையும், சிவனையும் வழிபட்டு, ஒவ்வொருநாள் ஒவ்வொரு கடவுளராக ஊர்வலம் வரச்செய்தார். ஹர்ஷரின் சர்வ சமய சமநோக்குப் பாராட்டுக்குரியது.

### யுவான்சுவாங்கின் குறிப்புகள்

ஏழாம் நூற்றாண்டின் முதல் பாதியின் வரலாற்றைப்பற்றி அறிந்துகொள்ள உதவிய சீனப் பயணி யுவான்சுவாங் அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப் பட்டிருக்கிறோம். அவர் கி.பி. 630இல் சமயநூல்களைத் திரட்டவும், பௌத்தப் புனித இடங்களைத் தரிசிக்கவும் இந்தியாவுக்கு வந்தார். அடுத்த 14 ஆண்டுகள் இந்தியாவின் பல பாகங்களுக்கும் பயணம் செய்தார். அவர் நாடு, மக்கள், மன்னர்கள், இவர்களைப் பற்றி தான் கண்டவற்றையும், கேட்டவற்றையும் சியூக்கி என்ற நூல் வாயிலாகக் கூறியுள்ளார். யுவான்சுவாங் கருத்துப்படி ஹர்ஷர் அரசு பொதுவாக நன்றாக அமைந்திருந்தது. வரிகள் கடுமையாக இல்லை. ஆளுனர்களும் அமைச்சர்களும் ஊதியமாக நிலங்களைப் பெற்றார்கள்; பணம் கொடுக்கப்படவில்லை. ஆனால், இராணுவ அதிகாரிகள் மட்டும் ஊதியத்தைப் பணமாகப் பெற்றனர். மொத்த விளைவில் ஆறில் ஒரு பங்கு நிலவரியாகச் செலுத்தப்பட்டது. வாணிகத்தின் மூலமும் அரசுக்கு வருவாய் வந்தது. இதைத்தவிரப் படகுத் துறையிலும் சிறு வரிகள் வசூலிக்கப்பட்டன. பெரும்படை இருந்தும், தண்டனைச் சட்டம் கடுமையாக இருந்தும்கூட, நாட்டில் பாதுகாப்பு இல்லை.



படம் 13.
சீன யாத்ரிகர் யுவான்சுவாங்

**சமூகநிலை**

ஹர்ஷப்பேரரசில் மக்கள் நேர்மையானவர்களாகவும், உண்மையுள்ளவர்களாகவும் இருந்தனர். சொன்ன சொல்லை அவர்கள் காப்பாற்றினார்கள். கசாப்புக்கடைக்காரர்கள், தெருக்கூட்டுவோர்கள், மீனவர்கள் போன்றோர்கள் கோட்டைச் சுவர்களுக்கு வெளியே வசித்தனர். மக்களின் உணவும், உடையும் எளிமையாய் இருந்தன. ஆசார சீலர்கள் வெங்காயம், பூண்டு முதலியவற்றை தவிர்த்தனர். கடற்பயணம் தடைசெய்யப்பட வில்லை. பண்புள்ள மக்களின் மொழியாக வடமொழி பயன் படுத்தப்பட்டது.

**பொருளாதார நிலைமை**

ஹர்ஷர் அரசில் அழகிய கட்டடங்கள் அமைந்த பல நகரங்கள் இருந்தன. அந்தணர் கைத்தொழிலிலும், வேளாண்மை யிலும் பங்கு கொள்ளவில்லை. அவர்கள் ஆன்மீகப் பணியே அதிகம் செய்து வந்தனர். வைசியர்கள் வாணிகத்தைக் கவனித் தனர். பெரும்பான்மையான மக்கள் வேளாண்மை செய்து வாழ்ந் தார்கள். நாட்டில் வெள்ளியும் தங்கமும் நிறைய இருந்தன.

**கல்வி**

குழந்தைகள் எழுத்துப் பயில ஆரம்பித்து, பின்னர் முதற் புத்தகத்தைப் படிக்கும் வரை சென்றார்கள். அவர்களுக்கு 7ஆம் அகவையில் பயனுள்ள கல்வியான விஞ்ஞானம், இலக்கணம், தத்துவம் முதலிய பாடங்கள் கற்றுக்கொடுக்கப்பட்டன. மாணாக்கர்கள் ஆசிரியர் கற்பிப்பதைக் கவனமாகக் கேட்டு மனப் பாடம் செய்துகொண்டார்கள். கல்வி நிலை முடிந்தபின் ஆசிரியர் களுக்கு மாணாக்கர்கள் குரு காணிக்கை கொடுத்தார்கள்.

யுவான்சுவாங் ஹர்ஷர் காலத்தில் சிறந்து விளங்கிய நாலந்தா பல்கலைக் கழகத்தைச் சிறப்பாக வருணிக்கிறார். நாலந்தா மிகப்பெரிய பௌத்தசமய அறிவாலயம். 100 கிராமங்களிலிருந்து பெறப்பட்ட வருவாய் அதனை நடத்த உபயோகிக்கப்பட்டது. இங்கு 10,000 மாணாக்கர்களும், 1,500 ஆசிரியர்களும் இருந்தனர். சீனா, மங்கோலியா, கொரியா, மத்திய ஆசியா முதலிய பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் இங்கு தங்கி கல்வி கற்றனர். இவர்கள் அனைவருக்கும் இருப்பிடம், உணவு, கல்வி அனைத்தும் இலவசமாகக் கொடுக்கப்பட்டன என்பது பாராட்டுக் குரியது. சிறப்பாகப் பௌத்த சமயக் கல்விக்காக ஏற்படுத்தப் பெற்ற போதிலும், பிற சமயக் கல்வியும் இங்கே போதிக்கப்

பட்டது. இரவு பகலாகக் கற்றவர்கள் விவாதங்கள் நடத்தினார்கள். வேத, பௌத்த சமயங்களும், தத்துவ சாத்திரமும், சட்டவியலும், அறிவியிலும், மருத்துவமும், நுன்கலைகளும்



படம் 14. நாலந்தா பல்கலைக்கழகச் சின்னங்கள்

மாணாக்கர்களுக்குக் கற்பிக்கப்பெற்றன. அப்பொழுது இப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராகச் சீலபத்திரர் என்ற எல்லோராலும் பாராட்டப்பெற்ற கல்வியாளர் பணியாற்றினார்.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஐந்து வரிகளுக்கு மேற்படாமல் விடை தருக :

1. ஹர்ஷர் ஆட்சியைப்பற்றி அறிய உதவும் ஆதாரங்கள் யாவை ?

2. பிரபாகரவர்த்தனர் எவ்வாறு தானேஸ்வர அரசை நிறுவினார் ?

3. ஹர்ஷர் எவ்வாறு கன்னோசி, தானேஸ்வர அரசுகளுக்கு மன்னரானார் ?

4. ஹர்ஷர் செய்த தக்காணப் போரின் முடிவு யாது?

5. ஹர்ஷர் பேரரசின் எல்லைகளைக் குறிப்பிடுக.

6. ஹர்ஷர் கால குற்றச்சட்டங்கள் எவ்வாறு அமைந்திருந்தன?

7. ஹர்ஷர் சமயப் பொறையுடையவர் என்பதற்கு இரண்டு சான்றுகள் தருக.

8. ஹர்ஷர் சிறந்த கல்வியாளர் என்பதற்குச் சான்றுகள் தருக.

9. யுவான்சுவாங் என்ற சீனப் பயணி மக்களின் சமூக நிலையைப்பற்றிக் கூறுவது யாது?

II. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளுக்கு மிகாமல் விடை தருக:

1. ஹர்ஷர் மிகச் சிறந்த வெற்றி வீரர் என்பதை எடுத்துக் காட்டுடன் நிறுவுக.

2. ஹர்ஷருடைய நிர்வாகத்தின் முக்கிய தன்மைகளைக் குறிப்பிடுக.

3. ஹர்ஷர் பௌத்த சமயத்திற்குச் செய்த தொண்டுகள் யாவை?

4. யுவான்சுவாங் ஹர்ஷர் கால கல்வியைப் பற்றி குறிப்பிடுவதென்ன?

5. யுவான்சுவாங் ஹர்ஷர் அரசாங்கத்தைப் பற்றி குறிப்பிடுவதென்ன?

III. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகொண்டு நிரப்புக:

1. கி. பி. 620இல் நர்மதை ஆற்றங்கரைப்போரில் ஹர்ஷரைத் தோற்கடித்த மன்னன் ——— வமிசத்து ——— ஆவார்.

2. ஹர்ஷர் காலத்து நிலவரி மொத்த விளைச்சலில் ——— ——— ஆகும்.

3. பாணர் எழுதிய முக்கிய நூல்கள் ———, ———.

4. ஹர்ஷர் எழுதிய நாடகங்கள் ———, ———, ———.

5. ஹர்ஷர் காலத்தில் இந்தியாவுக்கு வந்த சீனப் பயணி ———, அவர் எழுதிய நூல் ———.

6. ஹர்ஷர் கூட்டிய பௌத்தப் பேரவை ——— நகரில் கூடியது.

IV. கொடுக்கப்பட்ட நான்கு மாற்று விடைகளில் பொருத்தமான தின் முன்னெழுத்தினை வலப்புற பிறை அடைகளில் எழுது :

1. இந்திய வரலாற்றில் யுவான்சுவாங்கின் நினைவு நமக்கு நீண்டகாலம் இருக்கும் ஏனெனில் அவர்

(அ) நாலந்தாவில் கல்வி பயின்றார் ( )

(ஆ) ஹர்ஷர் ஆட்சியைப் பற்றி குறிப்பு எழுதியுள்ளார்

(இ) பௌத்த சமயத்தைப் பெரிதும் பரப்பினார்

(ஈ) வடமொழியில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்தார்

2. ஹர்ஷப் பேரரசின் தலைநகர்

(அ) கன்னோசி ( )

(ஆ) பிரயாகை

(இ) தானேஸ்வரம்

(ஈ) நாலந்தா

3. புஷ்யபூதி வமிசத்தைத் துவக்கிய மன்னர்

(அ) இராஜ்யவர்த்தனர் ( )

(ஆ) பிரபாகரவர்த்தனர்

(இ) ஹர்ஷவர்த்தனர்

(ஈ) தேவகுப்தன்

## செய்முறைப் பயிற்சி

இந்தியத் தேசப்படத்தில் ஹர்ஷப்பேரரசைக் குறித்து, அதில் பின்வரும் இடங்களையும் குறிக்கவும்.

1. தானேஸ்வரம் 2. கன்னோசி 3. நாலந்தா
4. மாளவம் 5. அலகாபாத் 6. நர்மதை ஆறு.

# 8. பல்லவர்கள்

**அறிமுகம்**

பல்லவர்கள் தோற்றத்தைப் பற்றி இதுவரை அறுதியிட்டு உறுதியாக ஏற்கக்கூடிய செய்திகள் இல்லை. இருப்பினும் இந்தியாவின் தென்பகுதியில் சாதவாகனர்கள் மற்றும் களப்பிரர் களின் ஆட்சி முடிந்த பின்னர் பல்லவர் பெருமை தோன்ற லாயிற்று. இவர்கள் தொண்டை மண்டலத்தைச் சிறப்புற ஆண்டார்கள். இவர்களது அரசு ஆந்திரப் பிரதேசத்திலுள்ள நெல்லூரிலிருந்து தெற்கே காவிரி ஆறுவரை பரவியிருந்தது. இவர்களது தலைநகரம் காஞ்சிபுரம் ஆகும்.

பல்லவ வமிசம் சுமார் கி.பி. 250ஆம் ஆண்டில் பப்பராஜா என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. இவருடைய முன்னோரும் முதலில் சாதவாகனர்களுக்கு அடங்கியிருந்தனர். சாதவாகனர் களின் வீழ்ச்சிக்குப் பின்னர் சுதந்தரப் பல்லவ அரசை மன்னர் பப்பராஜா நிறுவினார்.

**சிவஸ்கந்தவர்மன் (கி.பி. 310-335)**

இவர் தொடக்க காலப் பல்லவ மன்னர்களில் மிகச் சிறந்தவர். இவருடைய அரசு கிருஷ்ணா, பெண்ணாறு நதிகளுக்கிடையே அமைந்திருந்தது. இவர் அசுவமேதயாகம் செய்ததும், 'தர்ம மகாராஜா' என்ற சிறப்புப்பட்டம் சூடியதும் இவர் பெருமையை விளக்குகின்றன. விஷ்ணுகோபர் மற்றொரு புகழ்பெற்ற பல்லவ அரசர் ஆவார். இருப்பினும் இவர் சமுத்திரகுப்தரால் தோற்கடிக்கப்பட்ட பன்னிரெண்டு மன்னர்களுள் ஒருவர் ஆவார். (கி.பி. 345) களப்பிரர்களுடைய ஆட்சி அப்போது தமிழ்நாட்டில் ஏற்பட்டது. ஓரிரு நூற்றாண்டுகளுக்குப் பழைமையும் புகழும் மிக்கத் தமிழ் அரசர்களுடைய ஆட்சியும் பல்லவர்களுடைய ஆட்சியும் மறைந்தன. சிம்மவிஷ்ணு (கி. பி. 575-600) என்ற பல்லவ அரசர்தான் பிற்கால அல்லது பெரும் பல்லவ அரசர்களில் முதல்வர் ஆவார். இவர் களப்பிரர்களையும், சோழர்களையும், பாண்டியர்களையும் போரில் புறங்கண்டார். ஆகையால், அவனிசிம்மன் என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றார். இவரது அரசு காவிரி, கிருஷ்ணா ஆறுகளுக்கிடையில் அமைந்தது. இவரது அவையை அலங்கரித்த புலவர் கிருதார்ஜுனியம் என்ற நூலை எழுதிய பாரவி ஆவார். கல்வியிலும், கவிதையிலும் சிறந்தோரை இவர் ஆதரித்தற்கு இதுவே சான்றாகும்.

**முதலாம் மகேந்திரவர்மன் (கி. பி. 600-630)**

இவர் சிம்மவிஷ்ணுவின் புதல்வர். தந்தைக்குப்பின் பல்லவ அரியணை ஏறினார். அவரது ஆட்சி சாளுக்கியர்களோடு செய்த




படம் 15. பல்லவப் பேரரசு

போர்களால் அல்லல்பட்டது. மேற்குச் சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியால் அவர் தோற்கடிக்கப்பட்டு, வேங்கி

நாட்டை இழந்தார். இருப்பினும் காஞ்சிமேல் படையெடுத்து வந்த புலிகேசியை மகேந்திரவர்மன் புள்ளலூர் என்ற இடத்தில் தோற்கடித்துப் பின்வாங்கச்செய்தார். அவரது போராற்றல் இதனால் வெளிப்படுகிறது.

மகேந்திரவர்மர் முதலில் சமணமதத்தைச் சார்ந்திருந்தார். பின்னர் அப்பர் என்றழைக்கப்பட்ட திருநாவுக்கரசரால் சைவ சமயத்திற்கு மாற்றப்பட்டார்.

ஓவியக்கலையில் சிறப்புப்பெற்றிருந்ததால் இவர் **சித்திரக் காரப்புலி** என்ற சிறப்புப் பெயரையும் அடைந்தார். பல்வேறு திறமைகள் மிக்க இவருக்கு 'விசித்திரச் சித்தர்' என்ற புகழ்ப் பெயர் பொருத்தமானதேயாகும். இவர் மிகச் சிறந்த இசை மேதை என்பதை புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள **குடுமியான் மலை**- கல்வெட்டுக்களிலிருந்து அறியலாம். இவர் மிகச்சிறந்த இலக்கிய எழுத்தாளர். இவர் எழுதிய **மத்தவிலாசப் பிரஹசனம்** என்ற வடமொழிப் பரிகாசச் செய்யுள் நூல் இதற்குச் சான்று பகரும். இது சைவ, புத்த சந்நியாசிகளின் குறைகளைச் சுட்டிக் காட்டும் பரிகாசப் பாடலாகும்.

மகேந்திரவர்மர் காலத்தில் கட்டடக்கலையும் சிறப்பாகத் திகழ்ந்தது. அவர் விஷ்ணுவுக்கும், சிவனுக்கும் கற்பாறைகளைக் குடைந்து வல்லம், மகேந்திரவாடி, தளவானூர் முதலிய இடங் களில் குகைக் கோயில்களைக் கட்டியுள்ளார். இதன் காரணமாக இவருக்குச் **சைத்தியகாரி** (பாறைக் கோயில் அமைத்தவர்) என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது. நீர்ப்பாசன வசதிக்காக மகேந்திர வாடி, தளவானூர், மாமண்டூர் ஆகிய இடங்களில் குளங்களை வெட்டினார். இவர் காலத்தில் புதுக்கோட்டைக்கு அண்மையி லுள்ள சித்தன்னவாசலில் சிறந்த குகை ஓவியங்கள் வரையப் பட்டன.

**முதலாம் நரசிம்மவர்மன் (கி.பி. 630-668)**

மகேந்திரவர்மனுக்குப்பின் பல்லவ அரியணையேறிய அவர் மைந்தர் நரசிம்ம பல்லவர், பல்லவ மன்னர்கள் அனைவரிலும் தலைசிறந்த பேரும், புகழும் பெற்றவர். மற்போரில் சிறந்து விளங்கிய இவர் மாமல்லர் என்ற சிறப்புப் பெயரையும் சூடினார். தன் தந்தையைப் போரில் முதலில் வெற்றிகண்ட, மேலைச் சாளுக்கிய மன்னர் இரண்டாம் புலிகேசியைப் பழிக்குப் பழி வாங்கினார். அவரது தலைநகரான வாதாபியின்மீது படை யெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்றி அழித்தார். எனவே வாதாபி கொண்டான் என்ற விருதுப் பெயரும் இவருக்கு வழங்கப் பட்டது. இவரது ஆட்சியில் பல்லவர் வலிமையும் புகழும் உச்சு

கட்டத்தை எட்டின. இவர் சோழர்களையும், சேரர்களையும், பாண்டியர்களையும் போரில் வென்றார். சிங்களத் தீவிற்கு ஒரு நாவாய்ப்படையை அனுப்பி, மானவர்மன் என்பவனுக்கு அரசுரிமை கிடைக்கச் செய்தார். சிங்கள நூலான 'மகாவமிசம்' இச்செய்தியை வருணிக்கிறது.

போராற்றல் மிக்க நரசிம்மவர்மன் கட்டடக் கலையிலும் ஆர்வம் காட்டினார். கிழக்குக் கடற்கரையில் மாமல்லபுரம் என்ற மகாபலிபுரத்தை எழிலுற அமைத்து, அதனைத் தன் பேரரசின் துறைமுகத் தலைநகராக்கினார். அங்கே புகழ்மிக்க ஏழுரதங்கள் என்ற ஆலயங்களை ஒற்றைக் கல்லைக் குடைந்து எழுப்பினார். இவரது காலத்தில்தான் சீனப் பயணியான யுவான்



படம் 16. மாமல்லபுர இரதங்கள்

சுவாங் காஞ்சி நகருக்கு (கி. பி. 640) வருகைதந்தார். அவர் காஞ்சிமாநகரைப் புகழ்த்து எழுதியுள்ளார். அவர் குறிப்பின்படி 'காஞ்சி ஆறு மைல்கள் (9.68. கி.மீ) சுற்றளவுள்ளது. அங்கே நூறு பௌத்த மடங்களும், எண்பது பிற மடங்களும் காணப் பட்டன. அந்நகர் கல்விக்குப் புகழ் பெற்றதாய் சிறந்திருந்தது. செல்வச் செழிப்பும், பயிர்வளமும் கொண்டதாய் திகழ்ந்தது.'

## இரண்டாம் நரசிம்மவர்மன் (கி.பி. 695-722)

முதலாம் நரசிம்மவர்மன் மறைவுக்குப்பின் பல்லவப் பேரரசை ஆண்ட புகழ்மிக்க மன்னர் இரண்டாம் நரசிம்மவர்மர்

ஆவார். 'அரசர்களுள் அரிமா' என்னும் பொருள் கொண்ட ராஜசிம்மன் என்ற சிறப்புப் பெயர் இவரை அடைந்தது. காஞ்சியிலுள்ள கைலாயநாதர் ஆலயமும், மாமல்லபுரத்திலுள்ள கடற்கரைக் கோயிலும் இம்மன்னர் கட்டுவித்தவையே. இவர் காலத்தில் சீனநாட்டிற்கு ஒரு தூதுக் குழுவும் அனுப்பப்பட்டது. அமைதியும், நீர் நிலவளப் பெருக்கும் இவராட்சியின் சிறப்புக்களாகும். ஆலய அமைப்பு முறையில் இவர் காலத்தில் வியத்தகு முன்னேற்றம் காணப்பட்டது. டண்டி (Dandi) என்ற மிகச்சிறந்த வடமொழிப் புலவர் ராஜசிம்மன் அவைக்குத் தன் திறமையால் அணிசெய்தார்.

### பல்லவராட்சியின் வீழ்ச்சி

இராஜசிம்மனுக்குப்பின் அரசரான இரண்டாம் பரமேஸ்வர வர்மனுக்குப் பிள்ளையில்லாததால் பல்லவ கிளைக் குடும்பத்தைச் சேர்ந்த இரண்டாம் நந்திவர்மன் அரசரானார். அவருடைய அறுபது ஆண்டு ஆட்சியின்போது (கி. பி. 733—795) பல்லவ அரசு தெற்கேயிருந்து பாண்டியர்களாலும், வடக்கேயிருந்து சாளுக்கியர்களாலும், இராட்டிரகூடர்களாலும் தாக்கப்பட்டது. சுமார் கி.பி. 740 இல் இரண்டாம் விக்ரமாதித்தர் என்ற சாளுக்கிய மன்னர் காஞ்சியைக் கைப்பற்றி அதைத் தன்வசம் வைத்துக்கொண்டார். அடுத்த இரண்டு பல்லவ அரசர்கள் ஆட்சியில், இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கோவிந்தன் என்பவர் காஞ்சியைக் கைக்கொண்டார். இதற்கிடையில் பாண்டியர்கள் வடஆற்காடு மாவட்டத்திலுள்ள தெள்ளாறு என்ற நகரைக் கைப்பற்றினர். பின்னர் ஓர் அரை நூற்றாண்டுக்காலம், பல்லவ வம்சத்தினர் தங்கள் வீரத்தாலும், இராஜதந்திரத்தாலும் மீண்டும் தங்கள் ஆதிக்க நிலை அழியாமல் காத்துக் கொண்டனர். எனினும், இருபுறத்தாக்குதல்கள் பல்லவப் பேரரசை வலிமைக் குன்றச்செய்து, நாளடைவில் அவர்களது ஆட்சிக்கு உட்பட்ட சோழச் சிற்றரசர்களையும் சுதந்தரமடையச் செய்தன.

பல்லவர்களில் கடைசி அரசர் அபராஜிதர் ஆவார். கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சோழ மன்னன் ஆதித்தன் அவரை வென்று பல்லவர் வலிமையையும், பெருமையும் இழக்கச் செய்தான்.

### பல்லவர் காலத்து எழிற்கலைகள்

பல்லவர் ஆட்சிக் காலம் ஆலய கட்டட அமைப்புமுறை வளர்ச்சியில் மிக முக்கியமானதொன்றாகும். பாறைக் குகைக்

கோயில்களும், பின்பு கட்டட அமைப்புகளோடு கூடிய கோயில்களும் அவர்கள் காலத்தில்தான் உருவாயின. பெரிய கற்பாறைகளைக் குடைந்து ஆலயங்கள் அமைக்கும் முறை முதலாம் மகேந்திரவர்மரால் தொடங்கப்பட்டது. இதனைப்பற்றி முன்னரே கூறியுள்ளோம். இவை பல்லாவரம், மகேந்திரவாடி, தளவானூர், நாமக்கல், திருச்சிராப்பள்ளி, வல்லம் முதலிய இடங்களில் காணப்படுகின்றன. செங்கற்கள், மரங்கள், உலோகங்கள், காரை முதலியவை உபயோகிக்கப்படாமல்



படம் 17. அர்ச்சுனன் தவம். யானை சிற்பங்கள்

கட்டப்பட்ட ஆலயங்கள் என்று இவைகளை மகேந்திரவர்மரே வருணிக்கிறார். இவ்வகையான பாறைக்குடைக் கோயில்களுக்குப் பின்னர் 'ஏழுரதங்கள்' என்ற ஒரே கல்லாலான ஆலயங்கள் அமைக்கும் முறையும் உருவாகியது. இவற்றை அமைத்தவர் முதலாம் நரசிம்மவர்மர் ஆவார். பின்னர் கருங்கற்களைக் கொண்டு கட்டப்படும் ஆலயங்கள் அமைந்தன. மாமல்லபுரக் கடற்கரைக் கோயிலும், காஞ்சி கைலாயநாதர் ஆலயமும் இவற்றுக்கு உதாரணங்களாகும். நரசிம்மவர்மர் காலத்து மாமல்லபுர ஏழுரதக் கோயில்களும், அங்கே செதுக்கப்பட்ட சிற்பங்களும் அனைத்துலகப் பெருமை பெற்றுத் திகழ்கின்றன. குறிப்பாக ஒரே கல்லில் செதுக்கப்பட்ட படைப்புச் சிற்பங்களான யானையும், அர்ச்சுனன் தவம் எனப்

படும் பகீரதன் கங்கையைக் கொணரும் காட்சியும் பல்லவர் காலத்துச் சிற்பக் கலையின் சிறப்புக்குப் புகழ்மிக்க எடுத்துக் காட்டுகளாகும். பல்லவர் துவக்கிய ஆலயக் கட்டட நுணுக்க முறையை மிகச்சிறந்த உன்னத நிலைக்குப் பாண்டியர்களும். சோழர்களும் இட்டுச் சென்றார்கள்.

மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயிலும், காஞ்சியில் அமைந்துள்ள கைலாயநாதர் ஆலயமும், இரண்டாம் நரசிம்ம வர்மனால் கட்டப்பெற்றவை. இவற்றை இராஜசிம்மன் முறை எனக்கூறுவர். அபராஜிதவர்மன் காலத்தில் மண்டபங்களைக் கொண்ட கோயில்கள் அமைக்கப்பட்டன. இவற்றிற்கு உதாரணம் வீரட்டானேசுவரர் ஆலயம். இவ்வாறு மகேந்திரவர்மர் வகை, மாமல்லர் வகை, இராஜசிம்மர் வகை, அபராஜிதர் வகை ஆகிய நான்கு வகையில் வரலாற்று அறிஞர் பல்லவர் கால சிற்பக் கலையை அடக்குவர்.

பல்லவர் காலத்தில் ஓவியக்கலையும் இசைக் கலையும் சிறப்புற அமைந்திருந்தன. புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள சித்தன்னவாசல் பல்லவர்கால ஓவியங்களின் சிறப்பை விளக்குகின்றன. இவைகள் அஜந்தா ஓவிய அமைப்பைக் கொண்டதாய் உள்ளன. குடுமியான் மலைக் கல்வெட்டுக்களிலிருந்து பல்லவர்கால இசையின் மேன்மையை நாம் அறியலாம்.



படம் 18.
சித்தன்னவாசல் ஓவியங்கள்

தென்னிந்தியக் கட்டடக் கலைக்கு ஓர் உயர்ந்த தரத்தை ஏற்படுத்திக் கொடுத்தவை பல்லவர்காலத்துக் கட்டடங்கள். தூரக் கிழக்கு நாடுகளில் ஏற்பட்ட குடியேற்ற நாடுகளிலும் இக்கட்டடக் கலை செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. பல்லவ அல்லது திராவிட வகை 'சிகரங்கள்' ஜாவா, கம்போடியா, வியட்நாம் முதலிய நாட்டு ஆலயங்களிலும் நாம் காணலாம்.

**சமயமும் இலக்கியமும்**

பல்லவர் ஆட்சியில் வடமொழியும், தமிழ்மொழியும் சிறப்பாக வளர்ந்தன. காஞ்சி, வேதநூல் கல்விக்குச் சிறந்த

மையமாயிருந்தது. அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்ற மூன்று சைவக்குரவர்களும், திருமங்கையாழ்வாரும் பல்லவர் காலத்தவரே. தேவாரமும், நாலாயிர திவ்வியப்பிரபந்தமும் இக்காலத்தில் இயற்றப்பட்டன. தண்டி என்ற சிறந்த புலவர் 'காவியதரிசனம்' என்ற நூலைப் படைத்ததும், இவர்கள் காலத்தேதான். பௌத்த சமயப் புலவராகிய திந்நாகரும், நாலந்தாப் பல்கலைக் கழகத்தின் தலைவராயிருந்த தர்ம பாலரும் காஞ்சியைச் சேர்ந்தவர்களே.

பல்லவர்கள் ஆட்சியில் சைவமும், வைணவமும் தழைத்தன. வேத சமயமும் போற்றப்பட்டது.

## பயிற்சி

**I. பின்வரும் வினாக்களுக்கு ஒவ்வொன்றிற்கும் ஐந்து வரிகளுக்கு மேற்படாமல் விடையளிக்கவும்:**

1. பல்லவர் எப்போது புது வலிமை பெற்றனர்?
2. 'தர்மமகாராஜா' என்ற சிறப்புப் பட்டத்தைப் பெற்ற பல்லவ மன்னர் யார்? ஏன்?
3. பாரவி என்பவர் யார்?
4. 'அவனிசிம்மன்' என்ற புகழ்ப்பெயரைப் பெற்றப் பல்லவ மன்னன் யார்?
5. மகேந்திரவர்மனுக்குச் 'சைத்தியகாரி' எனப் பெயர் வருவானேன்?
6. மகேந்திரவர்மன் இரண்டாம் புலிகேசியோடு செய்த போரின் விளைவு யாது?
7. தன் தந்தைக்கு ஏற்பட்ட அவமானத்தைத் துடைத்த பல்லவ மன்னர் யார்? அப்போரின் விளைவு யாது?
8. நரசிம்மவர்மன் சிங்களத்தின்மீது படையெடுத்ததின் விளைவு யாது?
9. நரசிம்மவர்மன் ஆட்சியின்போது அவர் அவைக்கு வருகை தந்தச் சீனப் பயணி யார்? அவர் காஞ்சியைப் பற்றி என்ன கூறுகிறார்?
10. இராஜசிம்ம பல்லவன் ஏன் வரலாற்றில் சிறப்பிடம் பெறுகிறான்?

11. பல்லவர் காலத்துக் கலையும், கட்டடக் கலையும் மிகச் சிறந்து விளங்கின என்பதற்கு இரண்டு சான்றுகள் தருக.

12. பல்லவர் கட்டடக் கலை எவ்வாறு பிற நாடுகளின் கட்டடக் கலையைப் பாதித்தது?

13. பல்லவராட்சியின்போது இருந்த இலக்கிய மேதைகளைக் குறிப்பிடுக.

**II. பின்வரும் வாக்கியங்களைத் தகுந்த சொல் கொண்டு பூர்த்தி செய்யவும்:**

1. சமுத்திர குப்தனால் தோற்கடிக்கப்பட்ட பல்லவ மன்னன் ————.

2. மகேந்திரவர்மனைச் சைவசமயத்திற்கு மாற்றிய பெரியார் ————.

3. பல்லவ மன்னர்களின் தலை சிறந்தவர் ————.

4. பல்லவர்களின் கடற்கரைத் துறைமுகம்———— அதனைக் கட்டிவைத்தவர் ————.

5. மாமல்லபுரக் கடற்கரைக் கோயிலைக் கட்டிவைத்த மன்னர் ————.

6. பல்லவ மன்னர்களின் கடைசி மன்னன் ————.

7. பல்லவர் காலத்தில் கருங்கற்கள்கொண்டு கட்டிவைக்கப் பட்ட ஆலயங்களுக்கு உதாரணங்கள் ————, ———— ஆகும்.

**III. கொடுக்கப்பட்டுள்ள நான்கு மாற்று விடைகளில் பொருத்தமானதைத் தேர்ந்தெடுத்து அதன் முன் எழுத்தினை வலப்புற பிறை அடைகளில் இடவும்:**

1. பல்லவ அரசை நிறுவினவர்

(அ) நரசிம்மவர்மன் ( )
(ஆ) மகேந்திரவர்மன்
(இ) விஷ்ணுகோபன்
(ஈ) பப்பராஜா

2. மத்தவிலாசப் பிரஹசனத்தை ஆக்கியவர்

(அ) இராஜசிம்மர் ( )
(ஆ) நரசிம்மவர்மன்
(இ) மகேந்திரவர்மன்
(ஈ) தண்டி

3. சிங்களத்தின் மன்னரான மானவர்மனுக்கு முடிமீட்டுத் தந்ததாக மகாவம்சம் குறிப்பிடும் பல்லவ அரசர்

(அ) நரசிம்மவர்மன் ( )

(ஆ) சிவஸ்கந்தவர்மன்

(இ) விஷ்ணுகோபன்

(ஈ) மகேந்திரவர்மன்

IV. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் 15 வரிகளில் விடையளிக்கவும் :

1. பெரும் பல்லவர்களில் தலைசிறந்தவன் என்று நரசிம்மவர்மனை ஏன் கருதுகிறோம்?

2. பல்லவர் காலத்துக் கலை, கட்டடக் கலை இவற்றைப் பற்றி ஒரு கட்டுரை வரைக.

3. பல்லவராட்சி எவ்வாறு முடிவுக்கு வந்தது?

## செய்முறைப் பயிற்சி

தென் இந்தியாவின் படம் வரைந்து அதில் பல்லவப் பேரரசின் பரப்பினைக் குறிப்பிடுக. பின்வரும் இடங்களையும் குறிக்க :

1. காஞ்சி 2. மாமல்லபுரம் 3. வாதாபி
4. சித்தன்னவாசல் 5. மகேந்திரவாடி 6. தெள்ளாறு

மாணாக்கர் செயற்பாடுகள் :

1. பல்லவர் காலச் சிற்பக்கலை படங்களைச் சேகரிக்கவும்.

2. வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த காஞ்சி, மாமல்லபுரம் முதலிய இடங்களுக்குக் கல்வி—இன்பச் சுற்றுலா செல்லவும்.

# 9. சோழப் பேரரசர்களும், பிற்காலப் பாண்டியர்களும்

## சோழப் பேரரசர்கள்

### அறிமுகம்

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் பல்லவர் ஆதிக்கம் வீழ்ச்சி யுறத்தொடங்கியபோது, சோழப் பேரரசர்களின் செல்வாக்கு ஆரம்பமாயிற்று. சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக, துங்க பத்திரை ஆற்றின் தெற்கேயுள்ள பிரதேசங்களெல்லாம் ஒரே நாடாக இணைக்கப்பட்டு ஆளப்பட்டன. துங்கபத்திரை நதிக்கு அப்பால் இருந்த இராட்டிரகூடர்களோடும், அவர்களுக்குப் பின் வந்த கல்யாணிச் சாளுக்கியர்களோடும் நடைபெற்ற போர்களே கி.பி. 850ஆம் ஆண்டிற்கும் கி.பி. 1200ஆம் ஆண்டிற்கும் இடையிலான வரலாற்றின் முக்கிய அம்சமாகும். சோழ மன்னர்களுக்கு அவர்களது பகைவருடன் போராட கிழக்குச் சாளுக்கியர்கள் மிகவும் உதவினார்கள். இதனால் பிற்காலத்தில் இவர்களிடையே திருமண உறவுகள் ஏற்பட்டு, பின்னர் கி.பி. 1070ஆம் ஆண்டில் சோழ, கீழைச் சாளுக்கிய அரசுகள் இணைந்து முதல் குலோத்துங்கன் என்ற ஒரே மன்னரால் ஆளப் படும் பெருநிலை வந்தது.

### விஜயாலயன் (கி. பி. 850-871)

சுமார் கி.பி. 850ஆம் ஆண்டில், பல்லவர்களின் கீழ்ச் சிற்றரச ராக இருந்த விஜயாலயன் என்பவர் முத்தரையர்களைப் போரில் தோற்கடித்து, தஞ்சாவூரைக் கைப்பற்றினார். இவர்தான் பிற்கால சோழப் பேரரசர் வம்சத்தை நிறுவிய மன்னராவார் அவருக்குப்பின் வந்த அவரது மைந்தர் ஆதித்ய சோழர் கி. பி. 871இல் சோழ அரியணை ஏறினார். அப்போது பல்லவ சிம்மாசனத்திற்கு நிருபதுங்கர் என்பவரும், அபராஜிதர் என்பவரும் போட்டியிட்டனர். திருப்புறம்பியம் என்ற இடத்தில் நடந்த பாண்டிய-பல்லவப் போரில் ஆதித்தர் அபராஜிதர் பக்கம் நின்றார். இதற்காகப் பல்லவ அரசரிடம் இருந்து சில பகுதிகளைப் பெற்றார். இத்தோடு மன நிறைவு அடையாமல், தனக்கு மேலான அதிகாரம் படைத்த, அபராஜிதரையே வெல்ல நினைத்துத் திட்டமிட்டார். அதன் விளைவாக அவர் தொண்டைமண்டலத்தின்மீது படையெடுத்துச் சென்று அதனை

வென்றார். அபராஜித பல்லவரைப் போரில் கொன்றார். இதன் காரணமாகப் பல்லவ அரசு முழுமையும் சோழர் ஆட்சியின் கீழ் வந்தது. சோழப் பேரரசின் எல்லை இராட்டிரகூட அரசின் எல்லையை எட்டியது. பின்னர் ஆதித்தியர், பாண்டிய மன்னர் பராந்தக வீரநாராயணனிடமிருந்து (860-905) கொங்கு நாட்டையும் வென்றார். கி. பி. 907இல் அவர் இறந்த பின்னர் அவரது புதல்வர் பராந்தகர் சோழர் அரியணையில் அமர்ந்தார்.

## பராந்தக சோழர் (கி. பி. 907-955)

முதலாம் ஆதித்தியருக்குப்பின் மன்னரான பராந்தகர் சுமார் 48 ஆண்டுகள் சோழப் பேரரசை ஆண்டார். அரியணை ஏறிய உடனேயே இவர் செய்த முதல் போர் பாண்டியர்களுடன் நடந்தது. கி.பி. 910இல் நடந்த இப்போரில் வெற்றிபெற்ற பராந்தகர் பொருத்தமாகத் தமக்கு மதுரைகொண்டான் (மதுரையைக் கைப்பற்றியதற்காக) என்ற சிறப்புப் பெயரைச் சூட்டிக் கொண்டார். போரில் தோல்வியடைந்த பாண்டிய மன்னன் இரண்டாம் இராஜசிம்மன், சிங்கள மன்னன் ஐந்தாம் காசப்பனனின் உதவியை நாடினார். சிங்கள, பாண்டிய கூட்டுப் படையினைப் பராந்தகர் போரில் தோற்கடித்தார். அடுத்து அவர் இராட்டிரகூட மன்னர் இரண்டாம் கிருஷ்ணனுடன் போரிட வேண்டிவந்தது. சோழ அரசுரிமைக்குத் தன் பேரன் கன்னரத் தேவன் சார்பாக இராட்டிரகூட மன்னன் சோழ நாட்டின்மீது படையெடுத்து வந்தான். வட ஆற்காட்டில் தற்போது திருவல்லம் என அழைக்கப்பெறும் வல்லம் என்ற ஊரில் போர் நடைபெற்றது. பராந்தகன் வெற்றி பெற்றான். இராட்டிரகூட மன்னன் இரண்டாம் கிருஷ்ணனும், அவனுக்கு உதவி செய்த பாணர்களும் வைதும்பர்களும் தோற்கடிக்கப்பட்டனர். பராந்தகர் ஒரு சிவபக்தர். எனவே, அவர் சிதம்பரத்திலுள்ள நடராஜர் ஆலயத்திற்குப் பொற்கூரை வேய்ந்து கடவுள் திருப்பணி செய்தார்.

## பேரரசன் இராஜராஜன் (கி. பி. 985-1014)

சோழப் பேரரசின் உண்மையான பெருமையும் சிறப்பும் 'அருள்மொழிவர்மன்' என்ற முதலாம் இராஜராஜன் காலத்தில் தான் ஏற்பட்டன. அவர் கி. பி. 985இல் பட்டத்துக்கு வந்தார். அவரது ஆட்சியில் சோழ நாட்டின் வளமும், படை பலமும் மிகச் சிறந்து விளங்கின.

**வெற்றிகள்:** இராஜராஜனின் வெற்றிகள் மிகப்பல. அவர் மதுரை, கேரளா, சிங்களம் முதலியவற்றை ஆண்ட மன்னர்களோடு போர் செய்து வெற்றி பெற்றார். பாண்டியர்களைப்

போரில் வென்று பின்னர் சேர மன்னனைக் 'காந்தளூர்ச் சாலை', 'விழினம்' என்ற இடங்களில் நடந்த போர்களில் முறியடித்து வெற்றிவாகை சூடினார். சிங்களத்தின் மீது செய்த நாவாய்ப் போரில், இராஜராஜன் அந்நாட்டின் வட பாகத்தைக் கைப் பற்றினார். சிங்கள மன்னன் ஐந்தாம் மகிந்தன் போரில் தோல்வியுற்றான். மேலும் தற்கால கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த கங்கபாடி, நுளம்பபாடி, தடிகைபாடி முதலிய இடங் களையும் அவன் வென்றான். இதன் காரணமாக இராஜராஜன் கல்யாணிச் சாளுக்கிய மன்னர் இரண்டாம் தைலப்பனுடன் போரிட நேரிட்டது. இருப்பினும் அவருடைய முக்கியப் பகைவன் இரண்டாம் தைலப்பனுக்குப்பின் வந்த சத்யாஸ்ரயனே ஆவான். கி. பி. 1007இல் தன் புதல்வன் இராஜேந்திர சோழனை மேற்குச் சாளுக்கிய நாட்டின் மீது படையெடுக்கும்படி ஆணை யிட்டார். பெரும்படையுடன் சென்ற இராஜேந்திரன் மாபெரும் வெற்றிபெற்று, வனவாசி, ரெய்ச்சூர் மாவட்டத்தின் பெரும் பகுதி, பகைவனின் தலைநகரான மான்ய கேடகம் முதலிய வற்றைக் கைப்பற்றினார். சத்யரஸ்ரயன் வேங்கிக்குப் பின் வாங்கவேண்டிய நிலை ஏற்பட்டது. தன் ஆட்சியின் இறுதி யாண்டுகளில் இராஜராஜன் தன் கடற்படை கொண்டு மாலத் தீவுகளை வென்றான்.

முதலாம் இராஜராஜன் கீழைச்சாளுக்கிய மன்னர்களோடு நட்புறவு பூண்டான். தன் மகள் குந்தவையை வேங்கி நாட்டு மன்னன் விமலாதித்தியனுக்குத் திருமணம் செய்வித்தான். இராஜராஜன் பேரரசில் வடக்கே துங்கபத்திரையை எல்லை யாகக் கொண்ட தென்னிந்தியா முழுவதும், மாலத்தீவுகளும், சிங்களத்தின் ஒரு பகுதியும் அடங்கியிருந்தன.

**சமயம்:** முதலாம் இராஜராஜர் ஆர்வமுள்ள சிவபக்தர். சைவசமயத்தைப் போற்றினார். அவரது சமயப்பற்றையும் சிவபக்தியையும் பறைசாற்றி நிற்கிறது அவர் தஞ்சாவூரில் கி. பி. 1010இல் எழுப்பிய இராஜராஜேசுவரர் அல்லது பிருகதீசுவரர் ஆலயம். அஃது ஆலயக் கட்டடக்கலையில் உலகில் ஓர் அதிசய மாகத் திகழ்கிறது. இதன் காரணம் மகத்தான கற்பனையும், சிறப்பான வேலைப்பாடும் இணைந்து செம்மையாக இஃது அமைக்கப் பெற்றுள்ளதுதான்.

கடல் கடந்து அமைந்த ஸ்ரீவிஜயப் பேரரசின் மன்னர் விஜய துங்கவர்மனுக்கு நாகப்பட்டிணத்தில் ஒரு புத்த விகாரம் அமைக்க இராஜராஜன் ஊக்கமும், அனுமதியும் அளித்தார். இது **சூடாமணி விகாரம்** என அழைக்கப்பெறுகிறது. தஞ்சைப்

பெருவுடையார் (பிரகதீசுவரர்) ஆலயத்திலுள்ள பௌத்தசமயச் சிற்பங்கள் இராஜராஜனின் சமயப் பொறைக்குச் சிறந்த சான்றாகத் திகழ்கின்றன.

முதல் இராஜராஜனின் மற்றொரு மகத்தான சாதனை, அப்பர், சுந்தரர், சம்பந்தர் என்ற முப்பெரும் சிவனடியார்களின் பக்திப்பாடல்களைத் தொகுத்துத் **தேவாரம்** என்ற பெயரில் வெளியிட்டதாம். இப்பணியில் இவ்வரசருக்கு உதவியவர் நம்பி யாண்டார் நம்பி என்ற பெரியாராவார். எனவே, இம்மன்னருக்குத் **திருமுறைகண்ட சோழன்** என்ற புகழ்ப்பெயர் ஏற்பட்டது. இவற்றைத் தவிர **மும்முடிச்சோழன்** என்றும், **சிவபாதசேகரன்** என்றும் இராஜராஜசோழன் புகழ்ப் பெயர்கள் எய்தினான்.

## முதலாம் இராஜேந்திரன் (கி. பி. 1014-1044)

இவர் தந்தைக்கு ஏற்ற தகுதியான பிள்ளையாக விளங்கினார். தன் தந்தையைப்போல் இராஜேந்திரனும் திறமைமிக்க ஒரு போர் வீரரே. சிங்களத்தின் மீது படையெடுத்து, அதன் மன்னரைச் சிறைப்பிடித்து, **ரோஹணா** என்ற தென்னிலங்கையைச் சோழப் பேரரசுடன் இணைத்தார். அவர் பாண்டியர்களையும் வென்றார். சேரர்களையும் தன்னாட்சிக்கு உட்படுத்தினார். சாளுக்கிய மன்னர் இரண்டாம் ஜெயசிம்மனுக்கு எதிராகப் படையெடுத்துச்சென்று, அவரைப் போரில் வென்று, இராஜேந்திரர் ரெய்ச்சூர் மாவட்டத்தைத் தன்னாட்சியின் கீழ்க் கொணர்ந்தார்.

பின்னர் அவர் கவனம் இந்தியாவின் வடகிழக்குப் பக்கம் சென்றது. வங்காளத்தின் மீது படையெடுத்துச் சென்று அதன் மன்னர் மஹிபாலனை அவர் தோற்கடித்தார். வட அரசர்களின் மீது தாம்கொண்ட இவ்வெற்றியினைப் பாராட்ட அவர் தனக்குக் **கங்கைகொண்ட சோழன்** என்ற புகழ்ப்பெயரைச் சூட்டிக்கொண்டார். ஒரு புதிய தலைநகரையும் அமைத்து, அதற்குக் **கங்கைகொண்ட சோழபுரம்** என்று பெயரிட்டார். நீர்ப்பாசன வசதியை பெருக்கி நாட்டின் வளம் கொழிக்க 'சோழ கங்கம்' என்ற ஏரியையும் அமைத்தார்.

பின்னர் இராஜேந்திரர் மலேயா நாட்டின் ஒரு பகுதியான கடாரத்தின் மீது படையெடுத்தார். அதனையும் வென்று சுமத்திராத் தீவில் அமைந்த ஸ்ரீ விஜய நாட்டையும் தன்னாட்சியின் கீழ்க் கொணர்ந்தார்.

தந்தையைப் போலவே இராஜேந்திரரும் கலையார்வம் மிக்கவர். தஞ்சாவூரில் அமைந்துள்ள பிரகதீசுவரர் ஆலயம் போலவே கங்கைகொண்ட சோழபுரத்தில் அவர் ஒரு சிவாலயம் அமைத்தார்.




படம் 19. சோழப் பேரரசு

**அரசின் பரப்பு:** இராஜேந்திரச் சோழரின் பேரரசு வடக்கே துங்கபத்திரை ஆறுவரையிலும் பரவி தன்னுள் மலேயா, ஈழம், சுமத்திரா முதலிவற்றையும் கொண்டதாய் விளங்கியது. அவரது ஆட்சியில் வங்கக் கடல் ஒரு சோழ ஏரியாக விளங்கியது. அவர் முடிகொண்டான், பண்டித சோழன், கங்கையும் கடாரமும் கொண்டான் என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றார்.

## முதலாம் குலோத்துங்கன் (கி. பி. 1070-1120)

தஞ்சாவூர் மன்னராகக் கி.பி. 1070ஆம் ஆண்டு இராஜேந்திர சாளுக்கியர் முடிசூட்டிக் கொண்டபோது, விஜயாலய சோழ

வம்சம் முடிவடைந்து, சாளுக்கிய சோழ வம்சத்தின் ஆட்சி ஆரம்பமாயிற்று.

இராஜேந்திரர் கி. பி. 1070ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 1120 ஆண்டுவரை ஆண்டார். இவரது மற்றொரு பெயர் முதலாம் குலோத்துங்கன் என்பதாம்.

முதலாம் குலோத்துங்கன் கலிங்க நாட்டின்மீது படையெடுத்து அதனை வென்றார். இவ்வெற்றியை அவரது அவைப் புலவர் **ஜெயங்கொண்டார்** என்பவர் **கலிங்கத்துப்பரணி** என்ற காவியத்தில் பாடியுள்ளார். இப்போரில் அவரது தளபதியாகச் சென்றவர் கருணாகரத்தொண்டைமான் என்பவராவார். இருப்பினும் கலிங்கம் சோழ-சாளுக்கிய பேரரசோடு சேர்க்கப்படவில்லை. குலோத்துங்கன் வேங்கி, மதுரை, சேரர்நாடு முதலியவற்றையும் தன் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தார். அவர் சுங்க வரிகளை நீக்கியதால் **சுங்கம்தவிர்த்த சோழன்** என்னும் சிறப்புப்பெயரால் அழைக்கப்பட்டார். கி.பி. 1115ஆம் ஆண்டு வரை சோழப் பேரரசு, 'சிங்கள இழப்பைத்தவிர' தன் பரப்பில் சிறிதேனும் குறையாதிருந்தது.

### இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி.1133–1150)

சாளுக்கிய சோழ மன்னர்களில் அடுத்த முக்கிய அரசர் இரண்டாம் குலோத்துங்கன் ஆவார். அவர் கலைகளையும், இலக்கியத்தையும் மிகவும் விரும்பினார். அவரது ஆட்சியின் போதுதான் அவரது அமைச்சர் **சேக்கிழார்** 63 நாயன்மார்களின் சரிதையைக் கூறும் **பெரியபுராணம்** என்ற சிறந்த சைவ இலக்கியப் பாடல் நூலைப் படைத்தார்.

### மூன்றாம் குலோத்துங்கன் (கி. பி. 1178–1216)

இவர் சோழப் பேரரசர்களில் கடைசி மன்னர் ஆவார். அவருக்குப் பின், சோழ அரசர்கள் தங்கள் அதிகாரத்தையும் வலிமையையும் இழக்க, பாண்டிய மன்னர்கள் சிறப்புற ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்தார்கள்.

## சோழர்களின் ஆட்சிமுறை

சோழ மன்னர்கள் தங்கள் ஆட்சிமுறையைத் திறம்பட மிகச் சிறப்பாக அமைத்தார்கள். பரம்பரை மன்னராட்சி அமைந்திருந்தது. மன்னனே ஆட்சித் தலைவன் ஆவான். அவன் நினைத்தது நடக்கும்; அதுதான் நாட்டின் சட்டம். மன்னரின் முடிசூட்டுவிழா சிறப்பாகத் தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழ

புரம், சிதம்பரம் மற்றும் சில வேளைகளில் காஞ்சிபுரம் ஆகிய முக்கிய இடங்களில் பெருவிழாவாக நடைபெறும். தந்தைக்குப் பின் மூத்தமகன் அரியணை ஏறுவான். தந்தையின் வாழ்நாளி லேயே, அவன் முதலில் இளவரசனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, நாட்டாட்சியில் பங்கு கொள்வான். பேரரசின் முக்கியப் பாகங் களிலும், மாகாணங்களிலும் இளவரசர்கள் மன்னனின் பிரதிநிதி களாக நியமிக்கப்பட்டார்கள்.

சோழ மன்னர்களுக்கு முக்கியமான ஆட்சி விஷயங்களில் ஆலோசனை வழங்க 'உடன் கூட்டம்' என்ற உடனே பணிபுரியும் அதிகாரிகளும், பல்வேறு துறைகளின் பொறுப்பைக் கொண்டுள்ள அமைச்சரவையும் உண்டு. உயர்மட்டத்திலும் கீழ்மட்டத்திலும் அதிகாரிகள் மன்னருக்கு நிர்வாகத்தில் உதவி புரிந்தார்கள். உயர் மட்ட அதிகாரிகள் 'பெருந்தனம்' என்றும் கீழ்மட்ட அதிகாரிகள் 'சிறுந்தனம்' என்றும் அழைக்கப்பட்டனர். இவர்களின் பதவி களும் பரம்பரையாகப், தந்தைக்குப்பின் மகனுக்குச் செல்லும். அவர்களது தகுதிகளுக்கு ஏற்ப அதிகாரிகளுக்கு ஊதியம் நிலமாக வழங்கப்பட்டது. சிறப்புப்பட்டங்களும், போரில் கிடைத்த கொள்ளைப் பொருள்களில் பங்கும், இன்னும் பிற சிறப்புகளும், பரிசுகளும் அவர்களுக்கு அளிக்கப்பட்டன.

நிர்வாக வசதிக்காக, பேரரசு பல பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. இவற்றில் பெரும்பிரிவு **வளநாடு** அல்லது **மண்டலம்** எனப்படுவதாம். அடுத்த பிரிவு **நாடு** எனப்பட்டது. அதற்கடுத்த சிறிய பிரிவு **கூற்றம்** எனப்பட்டது. பெரிய நகரப்பகுதிகள் **தனியூர்** அல்லது **தனிக்கூற்றம்** எனப்பட்டன.

**நிதியும் வருவாயும்**

மன்னனுக்கு முக்கிய வருவாய் நிலவரிதான். ஏனவே, நில உடைமை உரிமைகளைப் பதிவு செய்வதிலும், வரவேண்டிய வரியை நிர்ணயிப்பதிலும் அதிக கவனம் செலுத்தப்பட்டது. நாட்டிலுள்ள நிலங்கள் எல்லாம் அளக்கப்பட்டு வரிக்குரியவை, வரிவிலக்குக்குரியவை எனத் தரம் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் மக்கள் வசிக்கும் இடங்கள், ஆலயங்கள், குளங்கள், கால்வாய்கள், தாழ்த்தப்பட்டோர் மற்றும் தொழிலாளர்வாழும் இடங்கள், சுடுகாடும், இடுகாடும் எல்லாவித வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பெற்றிருந்தன. வரிவிதிப்புக்குரிய நிலங்கள் அதன் தன்மை, வளம், பயிர் இவற்றிற்கேற்ப தரம் பிரிக்கப்பட்டிருந்தன. மன்னருக்குச் சேர வேண்டிய வரியினை வசூலித்துக் கொடுக்கும் பொறுப்பு,

அனைத்துக் கிராம மக்களின் கூட்டுப் பொறுப்பாகும். மக்களின் வசதிக்கேற்ப, நிலவரி பொருளாகவோ அல்லது பணமாகவோ கொடுக்கப்படலாம். நிலத்தின் மொத்த விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கு வரியாக வசூலிக்கப்பட்டது. நிலவரியைத் தவிர, பொருள்களின்மீது விதிக்கப்படும் சுங்கவரி, வீட்டுவரி, தொழில் வரி; திருமணத்தின்போது மன்னருக்கு அளிக்கவேண்டிய பரிசுப்பணம், நீதிமன்றங்கள் விதிக்கும் அபராதப்பணம் முதலியனவும் அரசுக்கு வருவாய் இனங்களாக இருந்தன.

### நீதி நிர்வாகம்

சோழநாட்டின் நீதி நிர்வாகம் அரசர் அவையிலும், கிராம நீதிமன்றங்களிலும், சாதி பஞ்சாயத்துக்களிலும் நடைபெற்றது. ஆவணங்கள், சாட்சிகள் முதலியவை வழக்கை விசாரிக்க சாட்சி களாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. சிலவேளைகளில் வேதனை தரும் 'சோதனை' முறையிலும் நீதி வழங்கப்பட்டது. இராஜத் துரோகத்திற்கு மன்னனே மரண தண்டனை விதிப்பான். சாதாரணக் குற்றங்களுக்கு அபராதமும், சிறை தண்டனையும் வழங்கப்பட்டன.

### கிராம சுய ஆட்சிமுறை

சோழர் ஆட்சிமுறையின் மிகச்சிறந்த அம்சம் சுயாட்சிமிக்க அதன் கிராம நிர்வாகமேயாகும். கிராம நிர்வாகம் திறம்படவும், ஊக்கத்துடனும் கிராம சபையால் நடைபெற்றது. கிராமமே சோழ அரசின் மிகச்சிறிய நிர்வாக அலகு. 'மகாசனம்' என்ற கிராம சபை அதன் நிர்வாகத்தை மேற்கொண்டது. இக்கிராம சபையின் உறுப்பினர்கள் உரிய தகுதிகளோடு தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். கிராம சபைத் தேர்வுக்காக ஒவ்வொரு கிராமமும் பல 'தொகுதிகளாகப்' பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு தொகுதியின் பிரதிநிதியும் குடவோலைமுறை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மகா சபையின் உறுப்பினர்கள் 'பெருமக்கள்' என அழைக்கப் பட்டனர். இவ் உறுப்பினர்கள் பல வாரியங்களாக அல்லது குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு வாரியமும், ஒரு குறிப்பிட்ட வேலையை மேற்பார்வை செய்தது. இக்குழுக்களின் உறுப்பினர்கள் 'வாரியப் பெருமக்கள்' என அழைக்கப்பட்டனர். சில வேளைகளில் பெண்கள்கூட இவற்றில் உறுப்பினராய் பணி புரிந்தனர். உண்மையில் ஒவ்வொரு சோழ கிராமமும், ஒரு ஜனநாயகக் குடியரசாக இயங்கியது.

**படை நிர்வாகம்**

சோழ மன்னர்களிடம் நன்றாகப் பயிற்றுவிக்கப்பட்ட காலாட்படையும், குதிரைப் படையும், யானைப்படையும், நாவாய்ப்படையும் இருந்தன.

**சோழர் காலத்து இலக்கியம்**

சோழர்கள் ஆட்சிக்காலம் தமிழ் இலக்கியத்தின் பொற்காலம் எனப் போற்றுதற்குரியது. இக்காலத்தில் தான் திருத்தக்க தேவர் 'சீவகசிந்தாமணி' என்ற நூலைப் படைத்தார். குண்டலகேசியும், யாப்பெருங்கலக்காரிகை, வீர சோழியம், நன்னூல் போன்ற தமிழ் இலக்கண நூல்களும் எழுதப்பெற்றன. மகாகவி கம்பர் இராமாயண நூலையும், புகழேந்திப் பெரும்புலவர் நளவெண் பாவையும் படைத்துத் தமிழ் இலக்கியத்திற்கு வளஞ்சேர்த்தது இவ்வாட்சியிலே தான். ஏற்கெனவே நாம் தேவாரம், பெரிய புராணம் முதலிய நூல்கள் இயற்றப்பட்டதைப்பற்றி கூறி யிருக்கிறோம். சயங்கொண்டாரின் கலிங்கத்துப்பரணியும் சோழ அரசர்கள்மீது ஒட்டக்கூத்தர் எழுதிய உலாக்களும் இவ்வாட்சியின் இலக்கிய மாட்சியை எடுத்துக் காட்டுகின்றன.

**சோழர்காலக் கட்டடக் கலை**

தென்னிந்திய ஆலய கட்டடக் கலை, பேரரசர் இராஜராஜர் காலத்திலும், அவர் தம் மைந்தர் இராஜேந்திரன் காலத்திலும் புகழின் உச்சியை அடைந்தன. சோழர்காலக் கட்டடக் கலையின் சிறப்புக்கு இரண்டு சிறந்த உதாரணங்களாகத் திகழ்பவை தஞ்சாவூரில் அமைந்த பிரகதீசுவரர் ஆலயமும், கங்கைகொண்ட சோழபுரத்தில் அமைந்த சிவாலயமுமாம்.

பெர்குசன் என்ற வரலாற்றுப் பேரறிஞன் சோழர் கலையைப்பற்றி பின்வருமாறு போற்றி எழுதுகிறார்: 'சோழக் கலைஞர்கள் அரக்கர்கள் போல் (பெரிய அளவில்) கற்பனை செய்து, பொற்கொல்லர் போல் அழகிய வேலைப்பாட்டுடன் முடிப்பர்.'

பிற்காலத்தில் சோழர் ஆலயக் கட்டடக் கலையில் ஒரு புதிய முறை தோன்றியது. அதாவது ஒவ்வோர் ஆலயத்தைச் சுற்றிலும் உள்ள சுவர்களில் 'கோபுரவாயில்கள்' அமைக்கப்பட்டன. பிற்காலத்தில் இக்கோபுர வாயில்களே மிகமிக உயர்ந்து, அழகிய சிற்ப வேலைப்பாடுடன் கண்ணையும், கருத்தையும் கவர்ந்தன.

சோழர் ஆட்சிக்காலம் கற்களாலும் செம்பாலுமாகிய சிறந்த சிலைகள் செய்யப்பட்டமைக்குப் புகழ் பெற்றது. சிதம்

பரத்திலுள்ள நடராஜர் சிலை, உலக மக்கள் அனைவராலும் வியத்தகு வேலைப்பாடு உடையது எனப் போற்றப்படுகிறது.

## பிற்காலப் பாண்டியர்கள்

### அரிகேசரி பராங்குச மாறவர்மன் (கி. பி. 670-710)

களப்பிரர் ஆட்சியில் அடங்கிக் கிடந்த பாண்டியர்கள் கடுங்கோன் என்ற பாண்டிய மன்னன் முயற்சியால் மீண்டும் விடுதலை பெற்று சிறப்புற்றனர். அவருக்குப்பின் வந்த மன்னர்களுள் அரிகேசரி. பராங்குச மாறவர்மன் முக்கியமானவர் ஆவார். அவர் சேர அரசர்களை வென்று, சோழர்களையும் தனக்கடங்கிய சிற்றரசர்களாக்கினார். முதலில் அவர் சமண சமயத்தைத் தழுவியபோதிலும், பிற்காலத்தில் அவர் சைவசமயக்குரவர் திருஞானசம்பந்தரால் மீண்டும் சைவசமயத்திற்கு மாற்றப் பட்டார். இவர் 'கூன்பாண்டியன்' என்றும், 'நின்றசீர் நெடுமாறன்' என்றும் வழங்கப்படுகிறார்.

கி. பி. 10 ஆம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை பாண்டியர்களுக்கும் சோழர்களுக்கும் இடைவிடாது தொடர்ச்சியாகப் போர்கள் நடந்துகொண்டேயிருந்தன.

### மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-38)

இவர் பிற்காலப் பாண்டியப் பேரரசுக்கு அடிகோலினார். இவர் 'சோழநாடு கொண்டோன்', 'கலியுக இராமன்' என்ற சிறப்புப் பெயர்களைச் சூட்டிக்கொண்டார். இவர் சோழ மன்னர் மூன்றாம் இராஜராஜனின் சமகாலத்தவர். இவர் சோழருடன் போர் செய்து, உரையூரை எரித்து, தஞ்சாவூரையும் அழித்தார். தோற்கடிக்கப்பட்ட சோழ மன்னனைத் தனக்குக் கப்பங்கட்ட செய்தார்.

### ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1251-68)

பிற்காலப் பாண்டிய மன்னர்களுள் மிகப் புகழ் வாய்ந்தவரும் பேரரசராகவும் விளங்கியவர் ஜடாவர்மன் சுந்தரபாண்டியரே. அவரது ஆட்சியில் பாண்டியர் பெருமை கொடிகட்டிப் பறந்து உச்ச நிலையில் இருந்தது. தன் ஆட்சியின் தொடக்க காலத்தில் அவர் பல போர்களின் மூலம் தன்னாட்சியை நெல்லூர் வரை நிறுவினார். ஹொய்சலர்களின் ஆட்சி மைசூருக்குள் அடங்கும் படி செய்தார். சிங்களத்தின்மீது படையெடுத்து வெற்றி கொண்டார். காஞ்சிபுரத்தைப் பாண்டியப் பேரரசின் இரண்

டாவது தலைநகரமாக்கினார். அவர் சேர மன்னனையும், சோழ மன்னனையும், கொங்கு நாட்டு மன்னர், காகதீய மன்னர் முதலியவர்களையும் போரில் வென்றார்.

போர்களின் விளைவாக அவர் பெற்ற அளவற்ற செல்வம் சிதம்பரத்திலும், ஸ்ரீ ரங்கத்திலும் உள்ள சிவ, விஷ்ணு ஆலயங்களை விஸ்தரிக்கும் திருப்பணிக்குச் செலவிடப்பட்டது.

**மாறவர்மன் குலசேகரப் பாண்டியன் (கி.பி. 1268-1310)**

மாறவர்மன் குலசேகரப் பாண்டியன் சுந்தரபாண்டியனின் மைந்தராவார். அவர் பிற்காலப் பாண்டியப் பேரரசர்களில் சிறந்த மன்னராவார். அவர் கி.பி. 1279இல் ஹொய்சல மன்னர் வீரராமநாதன், சோழ மன்னர் மூன்றாம் இராஜேந்திரன் இவர்களின் கூட்டுப்படையைப் போரில் தோற்கடித்து வெற்றிப் பெற்றார். சிங்களத்தின்மீது படையெடுத்து, அதனையும் வென்றார். அன்றிலிருந்து சுமார் 20 ஆண்டுகள் வரை, சிங்களத் தீவு பாண்டியப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது.

குலசேகரது கடைசி நாட்கள் அமைதியாகக் கழியவில்லை. பாண்டிய மணிமுடிக்கு அவரது புதல்வர்கள் உரிமைச் சண்டையிட்டனர். அவர்களுள் ஒருவர், அலாவுதீன் கில்ஜியின் தளகர்த்தரான மாலிக்காபூரை உதவிக்கு அழைத்தார். இதன் மூலம், தென்னகத்தில் முஸ்லிம் ஆட்சி ஏற்பட வழிவகுக்கப் பட்டது.

மாறவர்மன் குலசேகரப்பாண்டியன் காலத்தில் வெனிஸ் நகரப் பயணி மார்க்கோ போலோ பாண்டிய நாட்டிற்கு வந்தார். அவர் பாண்டிய மன்னர்களின் ஆட்சியைப் பற்றி புகழ்ந்து எழுதியுள்ளார். அவர் பாண்டிய நாட்டை 'உலகிலேயே மிக உன்னத மானதும் சிறந்ததும்' என்று புகழ்கிறார்.

**தமிழ் பண்பாடு தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பரவுதல்**

மிகப் பண்டைக்காலம் தொட்டே இந்திய மக்கள் அயல் நாடுகளுடன் நெருங்கிய நட்புறவு கொண்டிருந்தார்கள். தொடக்கத்தில் சோழ, பல்லவ ஆட்சி காலத்திலேயே, தமிழ் வாணிகர்கள் தென்கிழக்கு ஆசிய நாடுகளுடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. தென்னிந்தியாவிலிருந்து வைணவ, சைவ, பௌத்தச் சமயங்கள் கிழக்கிந்திய தீவுகளுக்குப் பரவின. சில தமிழக மன்னர்களும், சில வட இந்திய அரசர்களும்கூட தங்கள் மேலாண்மையை

மலேயா, சுமத்திரா, ஜாவா முதலிய நாடுகளின்மீது செலுத்தினர். அரசியல் மேலாண்மையோடு தமிழர்களின் பண்பாட்டுத் தொடர்பும், செல்வாக்கும் அங்கு ஏற்பட்டன. தென்கிழக்கு ஆசியாவில் சிறந்து விளங்கிய சைலேந்திரப் பேரரசில் மலேயா தீபகற்பம், சுமத்திரா, ஜாவா முதலிய தீவுகள் அடங்கியிருந்தன. ஜாவாவில் அமைந்துள்ள 'போராபுதூர்' ஆலயம் அங்கு பௌத்த சமயத்தின் செல்வாக்கை உணர்த்துகிறது. சோழப் பேரரசர் இராஜேந்திரர், சைலேந்திரப் பேரரசின்மீது கப்பற்படை வெற்றி பெற்றதும், அவ்வரசின் மன்னர்கள் பௌத்த சமயத்தைத் தழுவியதும் வரலாறு கண்ட உண்மைகளாகும். மேலும் இச்சைலேந்திர மன்னர்கள், வங்காளத்தை ஆண்ட 'பால' வமிசத்து மன்னர்களோடும் உறவு கொண்டிருந்தார்கள். எனினும், சோழ நாட்டுடன் அவர்கள் செய்த வாணிப உறவு மிக்க நெருக்கமாயிருந்தது.

### கம்போடியா (கம்பூசியா)

கம்போடியாவில் காணப்படும் ஆலயங்கள் திராவிட ஆலயக் கட்டடக் கலை முறையில் அமைந்துள்ளன். அங்கோர்வாட் நகரில் அமைந்துள்ள புகழ்பெற்ற ஆலயம் கட்டட சிற்பக் கலைச்



படம் 20. அங்கோர்வாட் கோயில்

சிறப்புக்குப் பெயர்பெற்று விளங்குகிறது. மகாவிஷ்ணுவிற்கு எடுக்கப்பட்ட இவ்வாலயம் உலக அதிசயங்களுள் ஒன்றாகத்

திகழ்கிறது. உள்ளம் கொள்ளை கொள்ளும் வகையில் இவ்வால யத்தின் சுவர்களில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள், இராமாயண, மகாபாரத நிகழ்ச்சிகளைச் சித்தரிக்கின்றன.

தமிழகத்திற்கும், சிங்களத்திற்கும் பண்டைகாலத்திலிருந்தே நெருங்கிய வர்த்தக, கலாச்சார தொடர்புகள் இருந்தன. பத்தினி தெய்வ வழிபாடும், சைவ நாயன்மார்களின் செப்புச் சிலை களும் இதனை எடுத்துக்காட்டும்.

கி.பி. முதலாம் நூற்றாண்டிலிருந்தே, தென்னிந்திய மக்கள் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் குடியேறினார்கள். தூரக்கிழக்கு நாடுகளுடன் தென் இந்தியாவின் கிழக்குக் கடற்கரை துறை முகங்களின் வழியாக மும்முரமான வாணிபம் நடைபெற்றது. தென்னிந்திய மக்களின் சில பழக்கவழக்கங்களான அரிசி உணவு, வெற்றிலைபோடல், சேவற்சண்டை முதலியன இத் தூரக்கிழக்கு நாடுகளிலும் பரவியுள்ளன. இவற்றிலிருந்து தமிழர்கள் இத்தூரக்கிழக்கு நாடுகளில் குடியேறியதோடு, தங்கள் பண்பாட்டின் சின்னங்களையும் அங்கே, இன்றும் காணும் வகையில் ஏற்படுத்தியுள்ளனர் என்பதை நாம் அறியலாம்.

பின்னர், இத்தூரக்கிழக்கு நாடுகளில் ஐரோப்பிய, முஸ்லிம் களின் அரசியல் ஆதிக்கம் ஏற்பட்டபோது, தென்னிந்திய பண்பாட்டின் செல்வாக்குச் சிறிது சிறிதாகக் குறைந்துவிட்டது.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடை அளிக்கவும்:

1. முதலாம் ஆதித்திய சோழன் பெற்ற வெற்றிகள் யாவை?
2. வல்லம்போரில் ஈடுபட்ட சோழமன்னர் யார்? ஏன் அவர் அப்போரில் ஈடுபட்டார்?
3. இராஜராஜன் காலத்தில் சோழப் பேரரசின் எல்லை களைக் கூறுக.
4. திருமுறைகண்ட சோழன் யார்? அவருக்கு அப்பெயர் வரக் காரணம் என்ன?
5. கங்கைகொண்ட சோழபுரத்தை அமைத்தவர் யார்? அது ஏன் அமைக்கப்பட்டது?

6. கலிங்கத்துப்பரணி யாரைப்பற்றி, யாரால், ஏன் பாடப்பட்டது?

7. சோழநாடு நிர்வாக வசதிக்காக எவ்வாறு பிரிக்கப் பட்டிருந்தது?

8. சோழநாட்டு நீதி நிர்வாகம் எவ்வாறு அமைந்திருந்தது?

9. சோழர்கால இலக்கியங்களுள் ஏதாவது இரண்டினைக் குறிப்பிட்டு, அவற்றின் பெருமையை விளக்குக.

10. சோழர் காலத்து ஆலயக் கட்டடக் கலைச் சிறப்புக்கு இரண்டு சான்றுகள் தருக.

11. கூன்பாண்டியனைப் பற்றி ஒரு சிறு குறிப்பு வரைக.

12. மாறவர்மன் குலசேகரப் பாண்டியனின் வெற்றிகளைக் குறிப்பிடுக.

13. மார்க்கோ போலோ என்பவர் யார்? அவர் எப்பாண்டிய அரசர் காலத்தில் தென்னகத்திற்கு வந்தார்?

II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடை கொண்டு பூர்த்தி செய்க:

1. சாளுக்கிய சோழ வம்சத்தின் முதல் அரசர் ———.

2. திருப்புறம்பியப் போர் ———, ——— மன்னர்களுக் கிடையே நடைப்பெற்றது.

3. மதுரைகொண்டான் என்ற சிறப்புப் பெயரைப்பூண்ட சோழ மன்னர் ———.

4. முதலாம் இராஜராஜனால் தோற்கடிக்கப்பட்ட சிங்கள நாட்டு மன்னர் ———.

5. இராஜராஜனுக்கமைந்த சிறப்புப் பெயர்கள் ———, ———, ———.

6. இராஜேந்திரச் சோழனால் தோற்கடிக்கப்பட்ட சாளுக்கிய மன்னர் ———.

7. சோழநாட்டு நிர்வாக அலுவலர்கள் ———, ——— என இருபிரிவினராகப் பிரிக்கப்பட்டனர்.

8. சோழர் ஆட்சியில் நிலவரி மொத்த விளைச்சலில் ——— பாகம் வசூலிக்கப்பட்டது.

9. பெரியபுராணத்தை எழுதிய தமிழ்ப் புலவர் ———.

10. சோழர்கால உலோகக்கலைச் சிறப்புக்குப் பெயர் பெற்றது ——— ——— சிலையாம்.

11. கலியுகராமன் என்று அழைக்கப்பட்ட பாண்டியமன்னர் ———.

12. ஸ்ரீரங்கம் கோயில் கூரைக்குப் பொன் வேய்ந்தவர் ———.

13. சைலேந்திரப் பேரரசில் அடங்கிய நாடுகள் ———, ———, ——— ஆகும்.

14. திராவிடச் சிற்பக் கலையில் சிறந்து விளங்கும் கம்போடியாவிலுள்ள ——— ஆலயம் ——— இடத்தில் உள்ளது.

15. இன்று பெரும்பாலும் தமிழ்ப்பண்பாடு சிறப்பாகக் காணப்படும் தென் கிழக்கு நாடுகள் ———, ———.

**III. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளில் விடையளிக்கவும்:**

1. இராஜராஜ சோழனின் சிறப்புக்குக் காரணங்கள் யாவை ?

2. பிற்காலப்பாண்டிய மன்னர்களுள் மிகப்புகழ்ப் படைத்தவர் யார்? ஏன் அவர் அவ்வாறு கருதப் படுகிறார் ?

3. இராஜேந்திர சோழனின் பெருமைகள் யாவை ?

4. தென்கிழக்கு ஆசிய நாடுகளில் எவ்வாறு தமிழர் பண்பாடு பரவியது ?

**IV. பின்வரும் வினாக்களுக்குத் தரப்பட்டிருக்கும் மாற்று விடை நான்கினில் சரியான விடையை வலப்புற பிறையடைகளில் குறிக்க:**

1. வங்காள மன்னன் மகிபாலனைத் தோற்கடித்த சோழப்பேரரசர்.

(அ) விஜயாலயர் ( )

(ஆ) ஆதித்தியர்

(இ) இராஜராஜன்

(ஈ) இராஜேந்திரன்

2. சோழ நிர்வாகத்தின் மிகச் சிறந்த அம்சம்.

(அ) நடுவண் அரசு ( )

(ஆ) கடற்படை அமைப்பு

(இ) கிராம நிர்வாகம்

(ஈ) நிலவரி முறை

3. திருஞானசம்பந்தரால் சைவசமயத்திற்கு மாற்றப்பட்ட பாண்டிய மன்னன்.

(அ) அரிகேசரி பராங்குச மாறவர்மன் ( )

(ஆ) மாறவர்மன் சுந்தரபாண்டியன்

(இ) ஜடாவர்மன் சுந்தரபாண்டியன்

(ஈ) குலசேகரப் பாண்டியன்

# 10. சமய சீர்திருத்த அறிஞர்கள்

**பக்தி மார்க்கம்**

கி. பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து தமிழ் நாட்டின் சமய நெறியில் ஒரு புதிய திருப்பம் ஏற்படலாயிற்று. பக்தி மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்ட சைவ, வைணவ சமயங்கள் சிறப்பாகப் பரவலாயின. இவ்விரு இயக்கங்களும் தோன்றியதனால் முன்னம் தமிழ் நாட்டில் புகுந்த பௌத்த, சமண சமயங்களின் செல்வாக்குக் குறைந்தது.

**நாயன்மார்கள்**

நாயன்மார்கள் சிவனடியார்கள் ஆவார்கள். சைவ சமயத்திற்குப் பக்தி இலக்கியத்தையும், மறுமலர்ச்சியையும் அளித்த பெரியோர்கள் நாயன்மார்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் அறுபத்துமூவரில், நால்வர் பேரும், புகழும் பெற்றனர். இவர்கள் சடங்குகள், சம்பிரதாயங்கள், கடுந்தவம், நோன்புகள் இல்லாத, மக்கள் எளிதில் பின்பற்றக்கூடிய வகையில், கடவுளின்மீது காதலாகி, கசிந்துருகி, பாடல்பாடி, அவர் புகழ்ப் பெயர் சொல்லி, இறையருளைப்பெறும் மார்க்கத்தைக் காட்டினார்கள்.

இதன்மூலம் மக்கள் விரும்பும் பக்தி இலக்கியம் தோன்றி வளரலாயிற்று. இவ்வறுபத்துமூவரின் வாழ்க்கை வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் தம்முடைய பெரிய புராணத்தில் சிறப்பாகக் கூறியுள்ளார். இந்நாயன்மார்களுள் திருநாவுக்கரசர் என்ற அப்பரும், திருஞான சம்பந்தரும், சுந்தரமூர்த்தி நாயனாரும், மாணிக்கவாசகரும் ஆகிய நால்வர் மிகப்புகழ் பெற்றார்கள். இவர்கள் இனிய தமிழில் பல பக்திப்பாடல்களைப் பாடியுள்ளனர். அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோருடைய பக்திப் பாடல்களை நம்பியாண்டார் நம்பி என்ற பெரியார் தொகுத்தளித்தார். இத்தொகுப்பிற்குத் 'தேவாரம்' என்று பெயர். மாணிக்கவாசகரின் பக்தி இலக்கியம் 'திருவாசகமாக' மலர்ந்தது. இதன் பெருமை 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்ற புகழுரையிலிருந்து அறியலாம். மேலை நாட்டறிஞர் ஜி. யு. போப் அவர்கள் இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

**ஆழ்வார்கள்**

வைணவ சமயத்திற்குத் தொண்டுசெய்த பெரியார்கள் ஆழ்வார்கள் என அழைக்கப்பெறுவர். இவர்கள் திருமால் பெருமையினைப் பக்திப்பாடல்களாக இயற்றியுள்ளார்கள். ஆழ்வார்கள் பன்னிருவராவர். கி.பி. 6ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.12ஆம் நூற்றாண்டுவரை இவர்கள் வைணவ பக்தி நெறியைத் தமிழ் மக்களிடையே பரப்பினார்கள். ஆழ்வார்களின் பக்திப் பாடல்களின் தொகுப்பிற்கு 'நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்' என்ற பெயர் வழங்குகிறது. இப்பிரபந்தத்தைத் தொகுத்த பெருமை நாதமுனிகள் என்பவரைச்சாரும். நம்மாழ்வார் இயற்றிய திருவாய் மொழியும், பெரியாழ்வார் இயற்றிய திருப் பல்லாண்டும், ஆண்டாள் இயற்றிய திருப்பாவையும் இப் பிரபந்தத்தின் முக்கியப் பகுதிகளாகும். உள்ளத்தைத் தொடும் உணர்ச்சிமிக்க இப்பாடல்கள், மனித உள்ளம் இறைவனை நாடதூண்டி ஆன்மீகத்தின் உச்சகட்டத்தை எட்டச்செய்யும்.

இவ்வாழ்வார்களும், நாயன்மார்களும் இயற்றிய அருந் தொண்டு, சமயத்துறைக்கு மட்டுமன்றி, தமிழிலக்கிய வளத்திற்கும் பெருமை சேர்த்தன என்பது எண்ணற்பாலது.

## ஆச்சாரியர் மூவர்

**சங்கரர் (கி.பி. 788-820)**

கி. பி. எட்டாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் சங்கரர் கேரள மாநிலத்திலுள்ள 'காலடி' எனும் கிராமத்தில் பிறந்தார். இவருடைய தந்தையார் சிவகுரு, தாய் ஆரியாம்பிகை. இளமையி லேயே சங்கரர் தந்தையை இழந்து, பக்திமிக்க தன் தாயால் வளர்க்கப்பட்டார். இவர் ஒரு பிறவிமேதை. வேதங்களை நன்கு கற்றுத்தேர்ந்து, இளமையிலேயே துறவு பூண்டார். அப்போது அவரின் வயது பதினாறு.



படம் 21. சங்கரர்

வடக்கே சென்று காசியை அடைந்து, அங்கு சிலகாலம் தங்கினார். அப்போது 'பிரம்மசூத்திரம்' முதலிய நூல்களுக்கு விளக்கவுரை எழுதினார். இந்தியாவின் எல்லா பாகங்களுக்கும் சென்று, சமயவிவாதங்களில் கலந்துகொண்டு, வேதங்களும்,

உபநிஷத்துகளும், பகவத்கீதையும் வலியுறுத்துகின்ற இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கைகளை நிலைநாட்டினார்.

சங்கரர் போதித்த கொள்கை அல்லது சமய தத்துவம் 'அத்வைதம்' எனப்படும். இதன்பொருள் இரண்டல்லாதது என்பதே. அவர் கடவுளைப் பரமாத்மா என்றும், உடலிலுள்ள உயிரை ஜீவாத்மா என்றும் குறிப்பிட்டார். ஜீவாத்மா தங்கியிருக்கும் உடலைப் பரிசுத்தமான கோயிலாகக் கருதவேண்டும். ஜீவாத்மா, பரமாத்மாவாக இருப்பதே முக்தி என்றும் அவர் கூறினார். பரமாத்மாவும், ஜீவாத்மாவும் ஒன்றே என்பது சங்கரரின் அத்வைத வேதாந்த தத்துவத்தில் முக்கியக் கருத்தாகும்.

ஆண்டவனின் அருளை அடைய பக்தி தேவை. ஆனால் அதோடுகூட ஆண்டவனைப் பற்றிய அறிவும் தேவை. இவ்வறிவை அறியும் வழியைத்தான் 'ஞானமார்க்கம் என்று கூறுகிறோம். இந்து மதத்தில் பல்வேறு கருத்துகளைத் திரட்டி அவற்றிற்கு உருக்கொடுத்து, வகைப்படுத்தி, சிறப்பளித்த முதல் சமயப் பெரியார் சங்கரரேயாவார். அவர் தம்முடைய, கருத்துகளைப் பரப்ப புகழ்மிக்க மடங்களை நிறுவினார். அவைகள் முறையே தமிழ் நாட்டில் காஞ்சியிலும், கர்நாடக மாநிலத்தில் சிருங்கேரியிலும், குஜராத் மாநிலத்தில் துவாரகாவிலும், ஒரிஸ்ஸாவில் பூரி நகரிலும், பனிபடர் இமயத்தின் உச்சியில் பத்ரிநாத் என்ற இடத்திலும் உள்ளன. சங்கரர் தமது 32ஆவது வயதில் இறைவன் திருவடி நிழலடைந்தார். அவருடைய முயற்சியால் இந்து சமயம் பாமர மக்களிடயே மீண்டும் தன் பிடிப்பை வலுப்படுத்தியது. பௌத்த சமயத்தின் செல்வாக்குக் குறைய ஆரம்பித்தது.

### இராமானுஜர் (கி. பி. 1017-1139)

ஆச்சாரியார் மூவரில் நாம் அடுத்துப்பார்க்க வேண்டியவர் இராமானுஜர். இவர் வைணவ ஆச்சாரியர்களில் தலைசிறந்தவர். சங்கரருக்கு 200 ஆண்டுகளுக்குப்பின் வந்தவர். இதற்கிடையில் இந்தியாவில் மும்முரமாக முஸ்லிம் படையெடுப்புகள் துவங்கிவிட்டன. இந்நிலையில் இந்து மதத்திலிருந்த வேண்டாத சடங்குகளையும், பழக்க வழக்கங்கயையும் அகற்றி, அதனைத் தூய்மைப்படுத்த விரும்பினார். இராமானுஜர் தமிழ் நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஸ்ரீபெரும்புதூரில் கி.பி 1017இல் பிறந்தார். இவர், தந்தையார் கேசவப்பெருமாள் தாய் காந்திமதி அம்மையார். இராமானுஜர் இளம் வயதிலேயே வேதங்களைக் கற்றார். சில காலத்திற்குப் பிறகு இல்வாழ்க்கை

யையும் துறந்தார். முதலில் காஞ்சியிலிருந்த யாதவப் பிரகாசர் என்ற அத்வைத புலமைமிக்க ஆசிரியரின் சீடரானார். பின்னர் திருக்கோட்டியூர் நம்பி எனும் பெரியாரை அடைந்து அவரிடம் திருமந்திர உபதேசம் பெற்றார். ஸ்ரீரங்கம் என்ற திருவரங்கத்தில் வைணவ மடாதிபதியாயிருந்த 'ஆளவந்தார்' எனப்படும் யமுனாச்சாரியாரை அணுகி, அவரது சீடரானார். ஆளவந்தாருக்குப் பின் அவரது வாரிசாக இராமானுஜர் மடாதிபதியானார். சிறிது காலம் அவர் திருவரங்கத்தை விட்டு ஹொய்சால நாட்டில் தங்கவேண்டியதாயிற்று. அவர் சாதிவேறுபாடின்றி, எல்லோரையும் தம் சமயத்தில் சேர்த்துக் கொண்டதுஒரு புரட்சியாகும். காந்தியடிகள், அவரை இந்து சமூக சீர்திருத்தவாதி எனப் புகழ்ந்துரைக்கின்றார்.



படம் 23. இராமானுஜர்

இராமானுஜர் போதித்த கொள்கை 'விசிஷ்டாத்வைதம்' என்றழைக்கப்படுகிறது. இவர் ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றே என்ற சங்கரரின் கருத்தை ஏற்கவில்லை. ஜீவாத்மாவானது, பரமாத்மாவின் ஒரு பகுதியே என்றும், அது நிலைத்து நிற்பதென்றும், பரமாத்மாவுடன் ஜீவாத்மா கூடினாலொழிய, ஜீவாத்மா பேரின்பத்தை அடைய முடியாது என்பது அவருடைய கருத்து. கடவுள் அருகே செல்வதன் மூலமே அவ்வின்பத்தை நாம் பெறமுடியும் என்றார். சுருங்கச் சொன்னால், பக்தியே முக்திக்கு வித்து எனலாம். இவருடைய கொள்கைகள் இடைக்காலத்தில், வட இந்தியாவில் வாழ்ந்த பல சமயத் தலைவர்களின் பக்தி இயக்கத்திற்கு அடிப்படையாய் அமைந்தன.

பக்தியின் மூலம் இறைவன் திருவடி அடைவதை, எல்லா உயிர்களுக்கும் சேவை செய்வதன் மூலம் அடையலாம் என்பது இவர் கருத்து. ஆண்டவன் அன்பு வடிவானவர்; தன்னிடம் பக்தி செலுத்துவோருக்கு அருளைப் பொழிந்து வினைப்பயனை அளிப்பான் என்ற கருத்துக்களும் இவரது போதனைகளாம். இதன் மூலம் இறைபக்திக்கு வழிவகுத்து, ஆன்மீக மறுமலர்ச்சிக்கு, இந்து சமயத்தில் ஓர் இடம் ஆக்கித் தந்தார். ஆண்டவன் முன் அனைவரும் சமமே என்று அவர் உறுதியாய் நம்பினார். தன் சீடர்களாக எல்லா சாதியைச் சார்ந்தவர்களையும் சேர்த்துக்

கொண்டார். இவ்வாறு இந்து சமயத்தில் ஒருமைப்பாட்டை ஏற்படுத்தினார்.

**மத்வாச்சாரியார் (கி.பி. 1198–1275)**

இராமானுஜருக்கு 60 ஆண்டுகளுக்குப் பிறகு மத்வாச்சாரியார் தோன்றினார். இவருடைய இயற்பெயர் வாசுதேவர். மற்றொரு சிறப்புப் பெயர் ஆனந்த தீர்த்தராகும். இவர் தென்கன்னட மாவட்டத்தில் உடுப்பிக்கருகில் பெல்லி எனும் ஊரில் கி. பி. 1198இல் பிறந்தார்.

படம் 23. மத்வாச்சாரியார்

புருஷோத்தம தீர்த்தர் என்பவரிடம் இவர் சீடரானார். தமது பதினாராம் வயதில் துறவறம் மேற்கொண்டார். தென்னிந்தியாவில் குமரி முனை வரையில் பலவிடங்களுக்கும் புனிதப் பயணம் செய்து, பின் வடஇந்தியாவிற்கும் இருமுறை சென்று வந்தார். சங்கரர், இராமானுஜர் ஆகியவர்களைப் போன்று இவரும் பிரம்மசூத்திரம், பகவத்கீதை, உபநிஷத்துகள் ஆகியவற்றுக்கு உரை எழுதியுள்ளார். அவர் போதித்த கொள்கை 'துவைதம்' ஆகும்.

மத்வருடைய கருத்துப்படி ஜீவாத்மாவும், பரமாத்மாவும் வெவ்வேறானவை. இவையிரண்டும் ஒருபோதும் ஒன்றாகக் கலக்கமுடியாது. எக்காலமும் பரமாத்மாவை துதிசெய்ய வேண்டியதே ஜீவாத்மாவின் கடமையாகும். பக்தி செய்தலே முக்திக்கு வழி என்று உரைத்தார். அவர் மூலமாகக் கிருஷ்ண பக்தி எங்கும் பரவியது. மத்வர்களுக்கு 'உடுப்பி' முக்கியப் புண்யஸ்தலம் ஆகும்.

**மெய்கண்டார்**

மெய்கண்டார் என்னும் பெரியார் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார். இவர் சிவஞானபோதம் என்னும் நூலை இயற்றினார். இந்நூல் சைவ சித்தாந்தத்திற்கு அடிப்படையாக விளங்குகிறது. சைவ சித்தாந்த தத்துவத்தின் திரட்சி என இந்நூல் அழைக்கப்படுகிறது. இந்நூல் இறைவனைப் பதி என்றும், மனிதனைப் பசு என்றும், மனிதனை ஆண்டவனோடு இணைக்கும் உணர்வைப் பாசம் என்றும் கூறுகிறது. உலகியல் தளைகளி

லிருந்து மனிதனை விடுவித்துத் தன் ஆன்மாவுள் இறைவன் மனிதனை ஒடுக்கிக் கொள்கிறான் என்பது இதன் கருத்தாகும். பசு என்பது உயிர்; பதி என்பது இறைவன்; பாசம் என்பது ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலங்களைக் (குறைபாடுகளைக்) கொண்டது. இறைவனை அடையவேண்டுமானால் பாசமாகிய இம் மும்மலங்கள் ஒழியவேண்டும்; அவைகளை அகற்றி, நற்காரியங்களில் ஈடுபட்டு, இறைவனிடம் பக்தி செலுத்தினால் முக்தி அடையலாம்.

## வட இந்தியாவில் பக்தி இயக்கம்

பதினான்காவது, பதினைந்தாவது நூற்றாண்டுகளுக்குள், இஸ்லாம் சமயம் இந்திய மண்ணில் காலூன்றிவிட்டது. எனவே இயற்கையாகவே இந்து, முஸ்லிம் கருத்துகளும் பண்பாடுகளும் ஒன்றோடொன்று கலந்தன. இஸ்லாம் சமயத்தின் சமத்துவக் கொள்கைகள் இந்து மக்களின் வாழ்க்கை முறையிலும் செல்வாக்குப் பெற்றன. அரும்பெரும் சமயத் தலைவர்கள் தோன்றி, இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு அறைகூவல் விடுத்தார்கள். இவ்விரு சமயங்களும் இருவேறு வழிகளில் ஒரே இலட்சியத்தை அடைய விரும்புகின்றன என்பதை சுட்டிக் காட்டினார்கள். மனிதனின் கண்ணியத்திற்கு இவர்கள் அழுத்தம் கொடுத்தார்கள். உயர் குடிப் பிறப்பினால் மனிதன் பெருமையையோ, உயர்வையோ அடைய முடியாது என்றார்கள். எளிய பக்தி மார்க்கத்தினால் மனிதன் உயர்வை அடையலாம் என்று போதித்தார்கள்.

### சைதன்யர் (கி.பி. 1485-1533)

வடஇந்திய வைணவ சமயாச்சாரியார்களுள் மக்கள் மனம் கவர்ந்த பெரியவர் சைதன்யர் ஆவார். அவர் கி. பி. 1485இல் வங்கத்திலுள்ள நாதியா என்ற ஊரில் அந்தணர் குலத்தில் பிறந்தார். இளம் வயதிலேயே தம் வியக்கத்தகு சமய அறிவினைப் புலப்படுத்தினார். அவர் தமது இருபத்துநான்காம் வயதில் உலக வாழ்வைத் துறந்தார். எஞ்சிய வாழ்நாளினை மக்களிடையே அன்பையும், பக்தியையும் வளர்க்கப் பாடுபட்டார். அவருடைய சீடர்கள் அவரை திருமாலின் அவதாரம் எனக் கருதுகின்றார்கள். அவர் போதனையின் முக்கிய அம்சம் 'கண்ணன் புகழ் பாடி பக்தி செய்தால், குருபக்தியும் இருந்தால், ஒருவன் உலக பந்தங்களிலிருந்தும், மாயைகளிலிருந்தும் விடுபட்டு, இறைவனின் பாதாரவிந்தங்களை அடைவான். மெய்மறந்து, உள்ளம் உருகி, பக்திப்பாடல்கள்பாடி, ஆடுவதே இறைவனோடு ஒன்றாகச்சேரும் வழி என்றார். இவரும் ஜாதி வேற்றுமைகளையும், சமயச் சடங்குகளையும் கண்டித்தார். இவருடைய

சீடர்களாகச் சாதிவேறுபாடுகள் இன்றி, இந்துக்களும், முஸ்லிம் களும்கூட சேர்ந்தனர்.

**கபீர்தாசர் (கி.பி. 1440-1518)**

காசியில் பிறந்த கபீர்தாசர் பக்தி மார்க்கத்தைப் பரப்பிய பெரியார் ஆவார். 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் இவர் வாழ்ந்தவராகத் தெரிகிறது. இந்து, முஸ்லிம் ஒற்றுமையே இவருடைய முயற்சிகளின் குறிக்கோளாகும். எனவே இவர் அன்பை அடிப்படையாகக்கொண்ட சமயத்தைப் போதித்தார். இதன் மூலம் பல்வேறு சமயத்தைச் சார்ந்தவர்களும் ஒற்றுமை அடைவர் என்று கருதினார். இந்துவும், முஸ்லிமும் ஒரே களி மண்ணால் ஆன இரு பானைகளே என்றார். அல்லாவும், இராம னும் இரு பெயருடைய ஒரே இறைவன் என்றார். 'ஒரு துறவியின் சாதியைக் கேட்கவேண்டிய அவசியமில்லை; இந்து முஸ்லிம் வேறு பாடின்றி, ஒரே இறைவனைக் காண யாரும் விழையலாம்.' சடங்குகளிலும், பிற வெளிப்பாட்டுச் செயல்களிலும் அவருக்கு நம்பிக்கை இல்லை. 'ஆன்மா' உண்மையாகப் போலித்தனத் தினின்றும், கொடுமையினின்றும் விடுபட்டுப் பக்தியோடு விளங் கினால் முக்தியடையலாம்' என்பது அவர் கருத்து.

**குருநானக் (கி.பி. 1469-1538)**

குருநானக் கபீர்தாசரின் சீடராவார். அவரது போதனை களை மகிழ்ச்சியோடு ஏற்றார். அவர் 1469இல் லாகூர் மாவட்டத் திலுள்ள தால்வாண்டி என்னு மிடத்தில் பிறந்தார். வாழ் நாள் முழுவதும் சமயப் பொறையை மக்கள் கைக் கொள்ள வேண்டுமென்றும், இந்து இஸ்லாம் ஆகிய இரு சமயங்களிலுள்ள நல்லவற் றைப் பின்பற்ற வேண்டும் என்றும் போதித்தார். இறை வன் ஒருவனே என்றும், அவன் முன் எல்லோரும் சமம் என் றும் வற்புறுத்தினார். இரு சமயங்களிலுள்ள தீவிரவாதி களை அவர் ஏற்கவில்லை. அவர் எழுதினார்: 'வெறும் வார்த்தைகளில் சமயமில்லை; எவனொருவன் எல்லா மக்க



படம் 24. குருநானக்

னையும் சமமாகக் காண்கிறானோ, அவனே உண்மையில் சமயப் பற்றுள்ளவன் ஆவான். தியானத்தில் அமர்வதோ, புனிதச் சின்னங்கள் அமைந்த இடங்களுக்குப் பயணம் செய்வதோ மட்டும் சமயம் ஆகாது. ஆலயங்களுக்குச் செல்வதோ, அல்லது யாத்திரைத் தலங்களில் புனித நீராடுவதோ சமயமன்று. மாசுகள் நிறைந்த இவ்வுலகில் நீ என்றும் தூய்மையாய் இரு. இதன் மூலம் நீ உண்மைச் சமயத்தைக் காண்பாய்.' தம் சீடர்களைப் போலித்தனத்தையும், தன்னலத்தையும், பொய்யையும் ஒதுக்கித்தள்ளச் சொன்னார். குருநான்க் நிறுவிய மதம் சீக்கிய மதம் ஆகும். இம் மதத்தின் கொள்கைகள் அடங்கிய புனிதநூல் ஆதிகிரந்தம் ஆகும்.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் ஐந்து வரிகளில் விடைதருக :

1. நாயன்மார்கள் யாவர்? அவர்களில் முக்கியமான நால்வரைக் குறிப்பிடுக.
2. ஆழ்வார்கள் யார்? அவர்கள் பாடிய பாடல்கள் யாவை?
3. தேவாரம் பாடிய மூவர் யார்?
4. திருவாசகம் யாரால் இயற்றப்பட்டது? அதன் பெருமை என்ன?
5. இந்துமத ஆச்சாரியார்கள் மூவர் யார்? அவர்களின் தத்துவங்கள் எப்பெயரால் அழைக்கப்பட்டன?
6. இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு அடிப்படையிட்ட இரண்டு பக்திமார்க்கப் பெரியார்களைக் குறிப்பிடுக.
7. மெய்கண்டாரின் போதனைகள் யாவை?

II. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் பதினைந்து வரிகளில் விடை எழுதுக :

1. ஆதிசங்கரர், இராமானுஜர், மத்துவர் இவர்களுடைய வாழ்க்கையையும், போதித்த முக்கியக் கருத்துகளையும் விவரி.
2. சிறு குறிப்பு வரைக.

   1. கபீர்தாசர் 2. ஆதிகிரந்தம் 3. சிவஞானபோகம்

III. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைப் பொருத்தமாக நிரப்புக :

1. ஆதிசங்கரர் தம் கொள்கைகளைப் பரப்ப ஏற்படுத்திய மடங்கள் ———, ———, ———, ——— என்ற இடங்களில் அமைந்துள்ளன.

2. துவைதத் தத்துவத்தைப் போதித்தவர் ———

3. சிறந்த சமூக சீர்திருத்தவாதி என்று மகாத்மா காந்தியாரால் புகழப்பட்ட சமயப்பெரியார் ———.

IV. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் நான்கு மாற்று விடைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சரியான விடைக்கு எதிராய் அமைந்த எழுத்தினை வலப்புறப் பிறை அடைகளில் எழுதுக :

1. தேவாரப் பாடல்களைத் தொகுத்தளித்த பெரியார்

(அ) சுந்தரர் ( )
(ஆ) அப்பர்
(இ) நம்பியாண்டார்நம்பி
(ஈ) சம்பந்தர்

2. பெரிய புராணத்தை இயற்றியவர்

(அ) மாணிக்கவாசகர் ( )
(ஆ) நாதமுனி
(இ) சுந்தரர்
(ஈ) சேக்கிழார்

3. சீக்கிய சமயத்தை நிறுவியவர்

(அ) சைதன்யர் ( )
(ஆ) கபீர்தாசர்
(இ) குருநானக்
(ஈ) இராமானந்தர்

# 11. இந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கம்

## அராபியப் படையெடுப்பு

பல நூற்றாண்டுகளாக அராபியர்கள் இந்தியாவின் மேற்குக் கடற்கரைக்கு வியாபார விஷயமாகப் பயணங்கள் மேற் கொண்டிருந்தார்கள். இதன் மூலம் தென்னிந்தியாவின் வாணிகம் முதலில் அவர்கள் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. பின்னர், கி. பி. எட்டாம் நூற்றாண்டின் துவக்கத்தில் சிந்து நாட்டின்மீது அராபிய படையெடுப்பு ஏற்பட்டது. இதனை மேற்கொண்டவர் முகம்மதுபின் காசிம் ஆவார். இப்படையெடுப்புக்குக் காரணம் சிந்து மாகாணக் கடற்கொள்ளைக்காரர்கள், அராபியக் கப்பல்களைக் கொள்ளை அடித்ததேயாம். அவ்வமயம் பிராமண வம்சத்தைச் சார்ந்த இராஜா தாஹிர் சிந்துவின் அரசராக இருந்தார். முதலில் உபயதுல்லா என்பவர் தலைமையிலும், பின்னர் புடேல் என்பவர் தலைமையிலும் வந்த அராபியப் படைகளை அவர் முறியடித்தார். எனவே, ஈராக்கின் கவர்னர் அல் ஹஜாஜ் என்பவர் இளமையும், ஆர்வமும் மிக்க தன் மருமகனான தளபதி முகம்மதுபின் காசிம் என்பவரை கி.பி. 711ஆம் ஆண்டில் இது சம்பந்தமாக அனுப்பிவைத்தார். இராஜா தாஹிர் தன்னால் கடல் கொள்ளைக்காரர்களை அடக்க இயலாது எனக் கூறிவிட்ட பின்னர் முஸ்லிம்கள் சிந்துவின் மீது படையெடுத்துத் தேபால், நிருன், சேகுவான் முதலிய நகரங்களை எளிதாகக் கைப்பற்றினார்கள். எனினும், கி.பி. 712இல் நடந்த போரில் இராஜா தாஹிர், முஸ்லிம் படையெடுப்பாளர்களைக் கடுமையாக எதிர்த்தார். அவர் இராவார் என்ற இடத்தில் நடந்த போரில் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். அவருக் குப்பின் அவருடைய மனைவி இராணிபாய் எதிர்த்துநின்று பின் தன் மானம்காக்க் தீக்குளித்தாள். பின்னர் முஸ்லிம்கள் சிந்து மாகாணத்தின் தலைநகரான அலோர் நகரைக் கைப்பற்றினர். கிட்டத்தட்ட பிராமணாபாத் வரையில் உள்ள சிந்து மாகாணம் முழுவதும் அராபியர்களின் ஆட்சியின்கீழ் வந்தது. பின்னர் முல்தான் முற்றுகையிடப்பட்டு, கி. பி. 713இல் அராபிய ஆட்சி யின்கீழ்க் கொண்டுவரப்பட்டது.

### அராபியர் ஆட்சியின் முடிவுக்குக் காரணங்கள்

அராபிய ஆட்சி சிந்துவில் நீண்டகாலம் பயனற்ற வகையில் நீடித்தது. ஸ்டான்லி லேன் பூல் எனும் வரலாற்றறிஞர், அராபி

யரின் சிந்து வெற்றியை, 'இந்திய வரலாற்றில் இஃது ஒரு சாதாரண நிகழ்ச்சியே; நிரந்தர விளைவில்லாத ஒரு வெற்றியே' எனக் கருதுகிறார். காசிமுக்குப்பிறகு வந்த அரசர்கள் பலமற்ற வர்கள். வடக்கிலும், கிழக்கிலும் இருந்த வலிமைமிக்க இராச புத்திர மன்னர்களை எதிர்த்து அவர்களால் நிற்க இயலவில்லை. பாக்தாத் காலிஃப் அரசில் உள்நாட்டுக் குழப்பங்கள் மலிந்ததால் தேவையான இராணுவ உதவி சிந்துவிற்குக் கிடைக்கவில்லை. மேலும், பாலை நிலமான சிந்துநாடு ஒரு பேரரசை நிறுவு வதற்கான செல்வத்தைக் கொடுக்க இயலவில்லை.

### இந்திய அராபிய கலாச்சாரத் தொடர்புகள்

சிந்துவில் அராபியர் வெற்றி, ஒருவித முக்கியத்துவமும் இல்லாததாய் இல்லை. இவ்வெற்றியின் மூலம் இந்திய மண்ணில் இஸ்லாம் விதை ஊன்றப்பட்டது. இந்துக்களின் பண்பாடும், கலாச்சாரமும், அராபியர்களின் பண்பாட்டையும், கலாச்சாரத் தையும் பாதித்தன. அராபிய மொழியில் பல வடமொழிச் சொற்கள் புகுந்தன. அவ்வாறே இந்திய மொழிகளிலும், அரா பியச் சொற்கள் கலந்தன. அராபியர்கள் இந்திய இலக்கியத்தில் ஈடுபாடுகொண்டதன் விளைவாக மிகப் புகழ்வாய்ந்த இந்திய நூல்களான பஞ்ச தந்திரக் கதைகளும், கீதோபதேசமும், அராபிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு, பாக்தாத் மூலம் ஐரோப்பாவிற்கும் சென்றன. அவ்வாறே பாக்தாத்தில் காலிஃப் மன்னர் அவைக்குப் பல இந்து அறிஞர்கள் ஈர்க்கப்பட்டார்கள்.

பாக்தாத் காலிஃப் அவையில் இந்திய மருத்துவமுறைகள் மிகவும் பாராட்டப்பட்டுப் புகழப்பட்டன. இந்திய மருத்துவ நூல்களான சுஸ்ருதமும் (அறுவை சிகிச்சை நூல்), சரகசம்ஹிதை யும் (மருந்துகள் பற்றிய நூல்) அராபிய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. இந்திய மருத்துவர்கள் பாக்தாத் நகரில் மருத்துவமனைகளும், மருத்துவ பள்ளிகளும் அமைத்தார்கள்.

இந்திய வானசாத்திரமும் முஸ்லிம்களிடையே செல்வாக்குப் பெற்றது. புகழ்மிக்க இந்திய வானசாத்திர நூலான சூரிய சித்தாந்தம் எனும்நூல் அராபிய மொழியில் மொழிபெயர்க்கப் பட்டது. மற்ற சிறந்த, இந்திய வானசாத்திர அறிஞர்களான வராகமிகிரர், ஆரியபட்டர், பிரம்மகுப்தர் ஆகியோர்களின் நூல் களும் அராபிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன.

கணிதத்துறையில் கணிதத்தின் ஒரு பகுதியான திரிகோண மிதியை இந்தியரிடமிருந்து அராபியர் கற்றுக்கொண்டனர். அராபிய எண்கள் என்று அழைக்கப்படும் 1, 2, 3 என்ற எண்கள்

அராபியர்கள் இந்தியரிடம் இருந்து கற்றவையே. இந்திய இசைக்கலையறிவு அராபிய பாடகர்களுக்கு மிக மிக உதவியது. இந்திய இசைக்கலையின் அடிப்படைக் கருத்துகளடங்கிய ஒரு நூல் அராபிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டது. இந்தியக் கட்டடக் கலைஞர்களும், ஓவியர்களும் முஸ்லிம் மசூதிகளையும், அரண்மனைகளையும் அழகுற அமைக்க உதவினர்.

மேற்கூறிய செய்திகளிலிருந்து அராபியர்களின் சிந்து வெற்றி, அரசியல் துறையில் நிரந்தர விளைவுகளை ஏற்படுத்தாவிட்டா லும், இந்திய பண்பாட்டிலிருந்தும், நூல்களிலிருந்தும் அராபியர்கள் மிக்க பயனடைந்தனர் என்பதை அறியலாம்.

## துருக்கியப் படையெடுப்பு

கி. பி. பத்தாவது நூற்றாண்டின் இறுதிக்குள் இஸ்லாம் சமயத்தைத் தழுவிய துருக்கியர்கள் வடமேற்கிலிருந்து இந்தியாவின் மீது படையெடுத்தனர். கி. பி. 933இல் ஆல்ப்டிஜின் என்பவர் கஜினியைக் கைப்பற்றினார். அவருக்குப்பின் சபக்டிஜின் கி.பி. 977இல் கஜினி மன்னரானார். அவர் தன் அரசைப் பரப்ப ஆவலுற்றார். எனவே காபூல், லம்கன், பஞ்சாப் முதலிய நாடுகளின் மன்னரான ஜெயபாலரை அவர் எதிர்த்தார்.

### சுல்தான் முகம்மது

சபக்டிஜினிக்குப்பின் அவர் மைந்தர் முகம்மது கஜினி மன்ன ரானார். இந்தியாவின் பெரும் செல்வம் அவரைக் கவர்ந்ததால் அவர் பலமுறை இந்தியாவின்மீது படையெடுத்தார். அவர் படையெடுப்பின் முக்கிய நோக்கம் இந்திய செல்வத்தைக் கவர்வதேயாம். இதையடுத்துச் செல்வமிக்க இந்துக்கோயில்களும் அவர் பார்வையில் விழுந்தன. கி.பி. 1000 ஆண்டிலிருந்து சுமார் 27 ஆண்டுளில் அவர் 17 முறை இந்தியாவின்மீது படையெடுத்து, ஒவ்வொரு முறையும் அளவிலா செல்வத்தை எடுத்துச் சென்று கஜனி நகரை கட்டடச் சிறப்பு, கலைச் சிறப்பு, நூற் சிறப்பு உள்ளதாக ஆக்கினார்.

அவரது படையெடுப்புகள்: முதல் முதலில் கி. பி. 1002இல் அவர் தன் தந்தையின் பகைவனான பஞ்சாப் மன்னன் ஜெய பாலைத் தாக்கினார். அவரை வெற்றிக்கொண்டு நிறைந்த செல் வத்துடன் நாடு திரும்பினார். மீண்டும் கி. பி. 1008ஆம் ஆண்டு நிகழ்ந்த முகம்மதுவின் படையெடுப்பை முறியடிக்க ஜெயபாலின் புதல்வன் அனந்தபாலின் முயற்சியும் தோல்வி அடைந்தது. இப் பஞ்சாப் வெற்றிக்குப்பின்னர், கஜினி முகம்மது தானே

சூரத்தைக் கைப்பற்றினார். நான்காண்டுகளுக்குப்பின்னர் மதுரா நாடும் அவர் ஆட்சியின் கீழ் வந்தது. கனோஜ் நாடும் அவரால் வெற்றி கொள்ளப்பட்டது. கி. பி. 1021ஆம் ஆண்டில் அவர் லாகூரையும் கைப்பற்றினார்.

கஜினி முகம்மதுவின் படையெடுப்புகளில் மிகவும் முக்கியமானது கி.பி. 1025இல் நடைபெற்ற சோமநாதபுரம் படையெடுப்பாகும். செல்வத்திற்கும், புனிதத்திற்கும் அங்கிருந்த அழகிய ஆலயம் பெயர் பெற்றிருந்தது. எனவே, கஜினி முகம்மது அதை தாக்கியபொழுது கடுமையான எதிர்ப்பு இருந்ததில் வியப்பில்லை. இருப்பினும் இவ்வெதிர்ப்புகள் வீணாயின. இந்நகரையும் வென்று தங்கம், வெள்ளி, விலையுயர்ந்த கற்களை எடுத்துச் சென்றார். அவருடைய கடைசி படையெடுப்பு ஜாட்டுகளுக்கு எதிராக முல்தான் நகரைத் தாக்கியது. அவர் கி. பி. 1030ஆம் ஆண்டு மரணமடைந்தார்.

அவர் இந்தியாவிலிருந்து எடுத்துச்சென்ற செல்வத்தைக் கஜினி நகரை அழகுபடுத்துவதிலும், அங்கே ஒரு நூல் நிலையம், ஒரு பொருட்காட்சியகம், ஓர் அருமையான மசூதி இவைகளை அமைப்பதிலும் செலவழித்தார். 'அல்பருனி' என்ற கணித மேதை அவர் அவைக்கு அணி செய்தார். இவர் அன்றைய இந்தியாவைப் பற்றி ஒரு நூலும் எழுதியுள்ளார்.

**முகம்மது கோரி**

கோரி என்பது, ஆப்கானிஸ்தானத்தில் கஜினிக்கும் ஹீரட்டுக்கும் இடையே உள்ள ஒரு சிறிய இராஜ்யம் ஆகும். கி.பி. 1150இல் இந்நாட்டின் மன்னர், கஜினி வமிசத்து மன்னனைத் தோற்கடித்து, கஜினியையும் தன் ஆட்சிக்குட்படுத்தினார். ஷகாபுதீன் முகம்மது கோரி நாட்டின் அரசரானபோது, இந்தியாவையும் தன் ஆளுகையின் கீழ்க் கொணரவேண்டுமென நினைத்தார்.

அவரது படையெடுப்புகள்: கோமல் கணவாயின் வழியாக அவர் முதல் முதலில் இந்தியாவில் நுழைந்தார். கி.பி. 1182இல் சிந்து நாட்டின் மன்னர் தன் மேலாதிக்கத்தை ஏற்கச் செய்தார். மீண்டும் அவர் கைபர் கணவாய் வழியில் இந்தியாவிற்கு வந்து, லாகூர் வரையிலானபிரதேசங்களை வென்று தன் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். பின்னர் அவர் தன் கவனத்தைக் கங்கைச் சமவெளியில் அமைந்துள்ள இராசபுதன அரசுகள் மீது செலுத்தினார். கி. பி. 1191ஆம் ஆண்டு நடைபெற்ற முதல் தரெய்ன் சண்டையில் பிரிதிவிராஜ் சௌஹான் என்பவர் தலைமையில் முகம்மது கோரியைத் தோற்கடித்தனர். அவர் தன் உயிர்காக்க

பின்வாங்க நேரிட்டது. இத்தோல்விக்குப் பழிவாங்க மீண்டும் அவர் இந்தியாவின் மீது இரண்டாம் முறையாக அடுத்த ஆண்டு படையெடுத்தார். கனோஜ் மன்னன் ஜெயசந்திரனைத் தவிர, மற்ற இராசபுத்திர மன்னர்கள் மீண்டும் பிரதிவிராஜ் தலைமையில் அவரை எதிர்த்தனர். தன் சொந்த மனத்தாங்கல் காரணமாக ஜெயசந்திரன் இப்போரில் கலந்துக் கொள்ளவில்லை. போரின் முடிவில் பிரிதிவிராஜ் கைது செய்யப்பட்டு, பின்னர் கொல்லப்பட்டார். இவ்வாறு இரண்டாம் தரெய்ன் போர் முகம்மது கோரிக்கு வெற்றியினைத் தந்தது (1192).

இவ்வெற்றியின் விளைவாக முகம்மது கோரி, ஹான்சி, ஆஜ்மீர் முதலிய இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த இடங்களைக் கைப்பற்றினார். தான் வென்ற எல்லா பிரதேசங்களையும், தன்னுடைய படைத்தலைவனும் விஸ்வாசமுள்ள அடிமையுமான குத்புதீன் ஐபக் என்பவரிடம் ஆளும்படி ஒப்படைத்துவிட்டார். அவர் இராசபுத்திர படையினைத் தோற்கடித்துக் கி.பி. 1193இல் மீரட், டில்லி ஆகிய நகரங்களைக் கைப்பற்றினார். அன்றிலிருந்து முகம்மது கோரியின் இந்திய பிரதேசங்களின் தலைநகராக டில்லி விளங்கலாயிற்று.

கோரி முகம்மதுவின் மரணத்திற்குப் பின்னர் குத்புதீன் ஐபக் டில்லியில் சுதந்தர அரசைநிறுவி, ஆட்சிபுரியத் தொடங்கினார். அவர் ஆட்சி காலம் தொடங்கி இந்தியாவில் டில்லி சுல்தான்களின் ஆட்சி ஏற்பட்டது.

இந்து அரசுகளின் ஒற்றுமையின்மையும், சாதி வேற்றுமைகளும், சரியான எல்லைப்புற பாதுகாப்பின்மையும், பழங்கால போர்முறைகளும் இந்துக்களின் தோல்விக்கும், முஸ்லிம்களின் வெற்றிக்கும் காரணமாயின.

## முஸ்லிம் ஆட்சியின் விளைவுகள்

### சமயம்

முஸ்லிம்கள் பின்பற்றிய இஸ்லாம் மதம் 'ஆண்டவன் ஒருவனே', 'அனைவரும் சகோதரர்கள்' என்ற கருத்துகளைக் கொடுத்துள்ளது. இக்கருத்துகள் நம் சமுதாயத்தையும், சமயத்தையும் தொட்டன. இந்துக்களில் ஒரு சிலர் சாதி, சமய கட்டுப்பாடுகளை இதன்காரணமாக மேலும் கடுமையானதாக்கினார்கள். சமயவிதிகளை மீறுபவர்களைச் சமூகத்தினின்றும் விலக்கவும் செய்தார்கள். மக்கள் சமுதாயத்தின் மற்றொரு பிரிவினரில் 'ஓரே கடவுள்', 'அனைவரும் உடன்பிறந்தோர்'

என்ற கருத்துகள் நல்லவிளைவுகளை ஏற்படுத்தின. இந்து சமயத்திலும் ஒரு காலத்தில் இக்கருத்துகள் இருந்தன என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். உண்மையில் நம்நாட்டுப் பண்டைக் காலத்து ரிஷிகள் 'இறைவன் ஒருமையையும்' மக்கள் 'சகோதரத் துவத்தையும்' வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், இடைக்காலத்தில் மக்கள் இக்கருத்துகளை முற்றிலும் மறந்து விட்டார்கள். சமயத்தின் புறச்சடங்குகளிலும், பிற பழக்கவழக் கங்களிலும் மூழ்கி இருந்தார்கள்.

எனவே, இஸ்லாம் சமயம் நம் மக்களிடையே ஒரு புதிய விழிப்பை ஏற்படுத்தி, அவர்கள் மறந்திருந்த பண்டைக்கால உன்னத கருத்துகளை மீண்டும்பரப்ப உதவிற்று. இதன் காரண மாகப் பக்தி இயக்கத்தைச்சார்ந்த பல ஆன்றோர்கள் தோன்றி 'ஒன்றே குலம்', 'ஒருவனே தேவன்' என்ற கருத்து களைப் பரப்பினார்கள். அவர்கள் சாதி அமைப்புகளில் உள்ள தீமைகளைக் கண்டித்தார்கள். இந்து முஸ்லிம் மக்களிடையே இருந்த வேற்றுமையைப் போக்கி, ஓர் ஒற்றுமை பாலத்தை அமைக்க விரும்பினார்கள். இந்துக்கள் வழிபடும் ஈஸ்வரனும், முஸ்லிம்கள் வழிபடும் அல்லாவும் ஒருவரேதான் என்று அவர்கள் அழுத்தமாக எடுத்துரைத்தார்கள். சமயத்தின் பெயரால் செய்யப்படும் புறச்சடங்குகளையும் அவர்கள் கண்டித்தார்கள். வீடுபேறடைய ஒரேவழி 'இறைவன்பால் பக்தி செலுத்துதலே' என்றும் கூறினார்கள். மதிப்பும், மரியாதையும் ஒருவருக்குப் பிறப்பால் வருவன அல்ல; அவர்களது நற்செயல்களாலேதான் வரும் என்பதையும் அவர்கள் வலியுறுத்தினார்கள். பகட்டான ஆடம்பரச் சடங்குகளைவிட, எளிமையான இறைபக்தியே 'முக்திக்கு வழி' என்று காட்டினார்கள். 'இறைவனுக்கு ஆனந்தம் அளிப்பதும் அதுவே' என்றும் சொன்னார்கள். அப்பேர்ப்பட்ட சமயச் சான்றோர்களில் மிக முக்கியமானவர்கள் இராமானந்தர், கபீர்தாசர், குருநானக், சைதன்யர், மீராபாய், நாமதேவர் ஆகியோர் ஆவர். இதன் காரணமாக இந்துக்களும், முஸ்லிம்களும் சமயப் பொறையோடு அன்புகலந்த இணக்கமான வாழ்க்கையை வாழ்ந்தனர்.

### சமூக வாழ்க்கை

சமூகத்தில் இந்து-முஸ்லிம் கலப்புத் திருமணங்கள் நிகழ லாயின. இவை பெரும்பாலும் அரச குடும்பங்களிலேயே நிகழ்ந்தன. இவ்விருபெரும் சமயத்தாரின் சில பழக்க வழக்கங்கள் இவ்விரு சமூகத்தாராலுமே கலந்து பின்பற்றப்பட்டன.

**மகளிர் நிலை**

சமூகத்தில் மகளிர் நிலைபற்றிய செய்திகள் அதிகம் தெரிய வில்லை. இருப்பினும் அவர்கள் திரைக்குப்பின் இருந்தார்கள். முஸ்லிம்கள் 'பர்தா' வழக்கத்தை மிகக் கடுமையாகப் பின்பற்றி னார்கள். இந்துக்களில் ஒருசிலரும் இதனை நாகரிகமாகப் பின்பற்றினார்கள். ஒருசிலர் இப்பழக்கத்தை, 'தம் பெண்கள் அந்நியர் கண்களில் படாமல் இருப்பதற்காகப்' பின்பற்றி னார்கள். சமூகத்தில் பெண்களின் நிலை மிக உயர்ந்ததாக இருந்ததாகச் சொல்வதற்கில்லை. அரச குடும்பத்துப் பெண்கள் கல்வியிலும், கலைகளிலும் தேர்ந்தவராயிருக்க, மற்ற பெண் களெல்லாம் தங்கள்வீட்டைக் கட்டிக் காப்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தனர். சிறுவயதுத் திருமணங்கள் அக்காலத் தில் வழக்கத்தில் இருந்தன. முஸ்லிம் மன்னர்கள் பல பெண்டிரை மணந்தனர்.

பிரபுக்கள் செல்வாக்கு உள்ளவர்களாக இருந்தார்கள், ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தார்கள். உழவர்களும், சாதாரண குடிமக்களும் எளிய வாழ்க்கை வாழ்ந்தர்கள். நாட்டின் தலை நகரில் நிகழும் அரசியல் புரட்சிகளிலும், குழப்பங்களிலும் அவர்கள் சிறிதேனும் அக்கறை காட்டவில்லை.

முஸ்லிம் ஆட்சியின் காரணமாக 'உருது' என்ற ஒரு புதிய மொழித் தோன்றியது. இந்தி, பாரசீக மொழிகளுக்கு வசதியான ஒரு பாலமாக அது விளங்கியது. இந்தி இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டு துருக்கிய, பாரசீக, அராபிய மொழி களின் சொற்களை உருதுமொழி ஏற்றுக்கொண்டது. உருது மொழியில் சிறந்துவிளங்கிய முதல் எழுத்தாளர் அமீர் குஸ்ரு ஆவார். டில்லி முஸ்லிம் மன்னர்களின் அவையை அலங்கரித்த மாபெரும் பாரசீகக் கவிஞரும் அவரே.

இஸ்லாம் சமயத்தின் காரணமாக வங்காளி, குஜராத்தி, மராத்தி முதலிய மொழிகளிலும் இலக்கியங்கள் படைக்கப் பட்டன. முஸ்லிம் மன்னர்களின் ஆதரவால் வடமொழி இலக்கி யங்கள்பல பிறமொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டன.

## பயிற்சி

I. **பின்வரும் வினாக்களுக்கு ஐந்து அல்லது ஆறு வரிகளுக்குள் விடை தரவும்:**

1. *சிந்துவின் மீது அராபியர்கள் ஏன் படையெடுத்தனர்?*

2. அராபியர்களின் சிந்து படையெடுப்பு அரசியல் கண்ணோட்டத்தில் ஏன் நிரந்தர விளைவுகளை ஏற்படுத்தவில்லை ?

3. முகம்மது கஜினியின் மிக முக்கிய இந்திய படையெடுப்பு யாது ? அதன் விளைவினைக் கூறு.

4. தரெய்ன் போர்களையும் அதன் விளைவுகளையும் குறிப்பிடு.

II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடை கொண்டு நிரப்புக :

1. சிந்து மாகாணத்தின்மீது முக்கிய அரேபிய படையெடுப்பு ——— ஆம் ஆண்டு ——— என்பவரால் நிகழ்ந்தது.

2. அராபிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட இந்திய மருத்துவ நூல்கள் ———, ———.

3. அராபிய எண்கள் பின்னர் ——— எனப் பெயர் பெற்றன.

4. தரெய்ன் போர் ———, ——— என்பவர்களுக்கு இடையில் நடைபெற்றது.

5. கோரி முகம்மதுவின் இந்திய பிரதேசங்களுக்கு நியமிக்கப்பட்ட வைசிராய் ——— ஆவார்.

III. நான்கு மாற்று விடைகளில் சரியானதைத் தேர்ந்தெடுத்துப் பிறையடைகளில் எழுதுக :

1. சூரிய சித்தாந்தம் என்ற நூல்

(அ) அறுவைநூல் ( )

(ஆ) பொது மருத்துவநூல்

(இ) வானவியல் நூல்

(ஈ) இசைநூல்

2. முகம்மது கஜினி லாகூரைக் கைப்பற்றிய ஆண்டு

(அ) கி. பி. 977 ( )

(ஆ) கி. பி. [illegible]

(இ) கி. பி. 1021

(ஈ) கி. பி. 1025

3. முகம்மது கோரியை எதிர்த்த முதல் இராசபுத்திர மன்னர்

(அ) ஜெய்பால் ( )
(ஆ) அனந்தபால்
(இ) ஜெயசந்தர்
(ஈ) பிரிதிவிராஜ்

IV. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளுக்கு மிகாமல் விடையளிக்கவும்:

1. பின்வரும் துறைகளில் இந்து அரேபிய கலாச்சார விளைவுகளைப் பற்றிக் கூறுக.

(அ) இலக்கியம், (ஆ) மருத்துவம், (இ) இசை, (ஈ) கணிதம்.

2. அராபியர்களின் சிந்து நாட்டுப் படையெடுப்பைக் கூறி அது ஏன் முடிவுற்றது என்று விளக்குக.

3. முகம்மது கோரி எவ்வாறு தன் ஆட்சியை இந்தியாவில் நிறுவினார்?

# 12. விஜயநகர, பாமினிப் பேரரசுகள்

## அறிமுகம்

கில்ஜி வமிசத்துச் சுல்தான்கள் ஆட்சியில் தொடங்கி, தக்காணம் படிப்படியாக டில்லி பேரரசின் ஆட்சியின்கீழ் வந்தது. முகம்மதுபின் துக்ளக் ஆட்சியின்போதும், அதன் பின்னரும் தக்காணம், டில்லி சுல்தான்களின் ஆட்சியிலிருந்து படிப்படியாகச் சுயேச்சை அடைந்து, தெற்கே புதிய அரசுகள் தோன்றின. அவைகள் முறையே பாமினி, விஜயநகர அரசுகள் ஆகும்.

## பாமினிப் பேரரசு (கி.பி. 1347-1526)

முகம்மதுபின் துக்ளக் டில்லியில் ஆண்டபோது தக்காணத்தில் அந்நிய அமீர்களால் கி.பி. 1347ஆம் ஆண்டு பாமினி அரசு நிறுவப் பட்டது. அவர்கள் தங்கள் மன்னராக 'ஹாசன் கங்கு' என்பவரைத் தேர்ந்தெடுத்தனர். அவர் 'அல்லாவுதீன் பாமன்ஷா' என்ற பெயரைப் பூண்டதால் அவருடைய வம்சம் 'பாமினி வம்சம்' என்று அழைக்கப்பட்டது. ஹாசன் திறமையான அரசர். பீடார், தௌலதாப்பாத் இவைகளை வென்றதோடு பேராரையும், குல்பர்காவையும் வென்று தன் அரசோடு சேர்த்துக் கொண்டார். இவ்வாறு அவர் தன் அரசை விரிவாக்கினார். அவருடைய அரசு மேற்கே அரபிக் கடலையும், வடக்கே தபதி நதியையும், கிழக்கே வார்தா நதியையும், தெற்கே துங்கபத்ரை ஆற்றையும் தன் எல்லைகளாகக் கொண்டமைந்திருந்தது. அவர் குல்பர்காவைத் தன் தலைநகராக்கினார். அவர் நாணயங்களையும் வெளியிட்டார்.

கி. பி. 1336இல் நிறுவப்பட்ட விஜயநகர இந்து அரசு, பாமினி அரசின் போட்டி அரசாக வளர்ந்தது. இவ்விரு அரசுகளும் தக்காண ஆதிக்கத்திற்காக நீண்டகாலம் ஒன்றோடொன்று போரிட்டன. இவ்விரு அரசுகளிடையே போர்கள் ஏற்படக் காரணமாயிருந்த பிரதேசம் 'ரெய்ச்சூர் தோவாப்' ஆகும்.

**முகம்மதுஷா (கி. பி. 1358-1375):** தொடக்ககால பாமினி அரசர்களில் குறிப்பிடத்தக்கவர் முகம்மதுஷா ஆவார். இவர் வாரங்கல் நாட்டு இந்து அரசர்களிடமிருந்து கோல்கொண்டாவை வென்றார்,

பிருஸ்ஷா (கி. பி. 1397 - 1422): பாமினி அரசை சிறப்புற ஆட்சிசெய்த மற்றொரு சுல்தான் இவர். அரபிக் கடலின்கண்




படம் 25. பாமினி—விஜயநகரப் பேரரசுகள்

அமைந்த துறைமுகங்களின் மூலம் கடல்கடந்த வாணிபத்தைப் பெருக்கினார். நாட்டில் சட்டத்தையும், அமைதியையும் கட்டிக் காத்தார். அவர் ரெய்ச்சூர் தோவாப் பகுதியை விஜயநகர

அரசர்களிடமிருந்து பெறுவதற்கு மும்முறை போர்கள் செய்தார். ஆனாலீ, அவை பயனற்றுப்போயின.

**அகம்மதுஷா வாலி (கி. பி. 1422 – 1435) :** பிருஸ்ஷாவிற்குப்பின் இவர் பாமினி சுல்தான் ஆனார். வெற்றியின்றி விஜய நகர இராயர்களுடன் சண்டையிட்டார். இருப்பினும் அவர் வாரங்கல் நாட்டை வென்று தம் அரசோடு சேர்த்துக் கொண்டார். பாமினி பேரரசின் தலைநகரைக் குல்பர்காவிலிருந்து பீடாருக்கு மாற்றி அங்கே பல அழகிய கட்டடங்களை அமைத்தார்.

**மூன்றாம் முகம்மதுஷா (கி. பி. 1463–1482) :** இவர் பாமினி அரசர்களில் மிக முக்கியமானவர். இவர் ஆட்சிப்பெருமை பெறுவதற்குக் காரணமாயிருந்தவர் இவரது முதல் அமைச்சர் குவாஜா முகம்மது கவான் ஆவார். அக்காலத்தில் தலைசிறந்த இராஜதந்திரிகளில் இவரும் ஒருவர். பாமினி பேரரசின் முன்னேற்றத்திற்கு வழி ஏற்படும் வகையில் தக்காண முஸ்லிம்களுக்கும் அந்நிய முஸ்லிம்களுக்கும் இடையே இவர் அமைதிஏற்பட வகை செய்தார்; ஊழல் பழக்கங்களை ஒழித்தார். நிதி நிலைமையைச் சிறப்புற மாற்றி அமைத்தார், நீதித்துறை அமைப்பைச் சிறப்பாக்கினார். கல்வி நிலையங்களை ஏற்படுத்தினார்; நாட்டுப் படையில் சில சீர்திருத்தங்களைச் செய்தார். கொங்கணத்தை அடிமைப்படுத்தியதும், விஜயநகர அரசிடமிருந்து கோவாவை மீண்டும் கைப்பற்றியதும் இவருடைய் மிகச் சிறந்த சாதனைகளாகும். பாரசீகப் பிர்புவான இவரை தக்காண முஸ்லிம்கள் வெறுத்தனர். அவர்களது குற்றச்சாட்டுகளை நம்பி பாமினி அரசர், முகம்மது கவானைக் கொன்றார். கவானின் மரணத்தோடு பாமினி அரசின் பேரும் புகழும் மறைந்து விட்டன எனலாம். மாகாண கவர்னர்கள் சுதந்தரம் பெற்றார்கள். பின்னர் பாமினி பேரரசு ஐந்து சுயேச்சை சிற்றரசுகளாக உடைந்தது. அவை முறையே (1) இமத்ஷாஹி வமிசத்தாரால் ஆளப்பட்ட பிரார், (2) நைசாம்ஷாஹி வமிசத்தாரால் ஆளப்பட்ட அகம்மதுநகர், (3) அடில்ஷாஹி வமிசத்தாரால் ஆளப்பட்ட பீஜப்பூர், (4) குதுப்ஷாஹி வமிசத்தாரால் ஆளப்பட்ட கோல்கொண்டா, (5) பரீத்ஷாஹி வமிசத்தாரால் ஆளப்பட்ட பீடார் ஆகும்.

இவ்வைந்து சிற்றரசுகளும் அடிக்கடி தங்களுக்குள்ளும், விஜய நகரத்தோடும் போர்களில் ஈடுபட்டன. எனவே, விரைவில் அவை ஒன்றன்பின் ஒன்றாக மொகலாயப் பேரரசோடு சேர்த்துக் கொள்ளப்பட்டுத் தக்காண வரலாற்றிலிருந்து மறைந்தன.

பாமினி அரசர்கள் கலையையும், கல்வியையும் ஆதரித்தார் கள். குடிகளின் நல்வாழ்வை பெருக்கினார்கள். அவர்கள் சிறந்த பல கட்டடங்கள் அமைப்பதிலும் ஈடுபட்டார்கள். நாட்டின் பாதுகாப்பிற்காகப் பெரிய கோட்டைகளைக் கட்டினார்கள். தக்காணத்தின் மிகச் சிறந்த தலைநகர்களாக அவை விளங்கின. குல்பர்காவில் அமைந்த ஜும்மா மசூதியும், பீடாரில் அமைந்த முகம்மது கவான் கல்லூரியும், பீஜப்பூர் மன்னன் முகம்மது அடில்ஷாவின் கோல்கும்பாஸ் சமாதியும் பாமினி அரசர்கள் காலத்துக் கட்டடக் கலைச்சிறப்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டு களாகும். பாமினி கட்டடக்கலை இந்திய, துருக்கிய, பாரசீக கட்டட அமைப்பின் கலவையாகும். பீஜப்பூரிலும், பீடாரிலும் தக்காண சுல்தான்களின் அழகிய மசூதிகளையும், சமாதி களையும், அரண்மனைகளையும் நாம் இன்றும் காணலாம்.

### இலக்கியம்

பாமினி மன்னர்கள் அறிஞர்களையும், கவிஞர்களையும் சிறப்பாக ஆதரித்தார்கள். எனவே, பல பாரசீக அறிஞர்களும், கவிஞர்களும் இம்மன்னர்களின் அவைகளை அலங்கரித்தார்கள்.

### விஜயநகரப் பேரரசு (கி. பி. 1336 – 1565)

துங்கபத்திரை ஆற்றின் தென்கரையில் விஜயநகர அரசு ஹரிஹரர், புக்கர் என்ற இரு சகோதரர்களால் கி. பி. 1336ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இவர்கள் இருவரும் சங்கமா என்பவ ருடைய மைந்தர்கள். எனவே, இவர்களது அரச வமிசம் 'சங்கம வமிசம்' என அழைக்கப்பட்டது.

விஜயநகர அரசை தோற்றுவித்ததில் முக்கிய நோக்கங்கள், தென்னகத்தில் முஸ்லிம் படையெடுப்பையும், ஆதிக்கத்தையும் தடுத்தலும், இந்து சமயத்தையும், பண்பாட்டையும் காத்தலுமே யாம். இவ்வரசை நிறுவ, ஆக்கமும், ஊக்கமும் அளித்து, ஆர்வமும் காட்டியவர் அவர்களுடைய ஆசான் மாதவ வித்யாரண்யர் ஆவார். கி. பி. 1344ஆம் ஆண்டிலிருந்து விஜயநகரம் இவ்வரசின் தலைநகராக இயங்கியது.

சங்கம வமிசத்தின் முதல் அரசர் முதலாம் ஹரிஹரர். இவர் கி.பி. 1353ஆம் ஆண்டில் இறக்கவே அவருடைய சகோதரர், புக்கர் அரசரானார். அவர் விஜயநகரத்தைக் கட்டிமுடித்தார், பல வெற்றிகளால் பெரும் புகழ் ஈட்டினார். விஜயநகர அரசை ஆண்ட மற்றொரு புகழ்பெற்ற மன்னர் இரண்டாம் தேவராயர்

(1422–46). அவர் பாமினி சுல்தான்களுடன் பலமுறை போர் செய்தார். அவருடைய காலத்தில்தான் இத்தாலியப் பயணி நிக்கோலோ காண்டியும், பாரசீக தூதர் அப்துல் ரஸாக்கும் விஜயநகரத்திற்கு வந்தனர். விஜயநகர மக்களைப்பற்றியும், அதன் செல்வச்செழிப்பைப் பற்றியும் அவர்கள் சுவையான செய்திகளை நமக்கு அளித்துள்ளனர். நீண்ட, அகலமான கடைவீதிகள், விற்பனை இடங்கள் முதலியன கவனமாகத் திட்டமிட்டுக் கட்டப்பட்டிருந்தன. ஒன்றுக்குள் ஒன்றாக ஏழு கோட்டைச் சுவர்கள் இந்நகரைக் காத்துநின்றன.

### கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1509–1529)

இவர் விஜயநகர பேரரசின் மிகப் புகழ் வாய்ந்த பேரரசர். துளுவ வமிசத்தைச் சார்ந்த இவர் பல்திறன்மிக்க அறிஞரும், மாபெரும் போர்வீரரும் ஆவார். இவர் ஒரிஸ்ஸா மன்னனையும், பீஜப்பூர் சுல்தானையும் தோற்கடித்தார். ரெய்ச்சூர் தோவாபைக் (நதியிடை நிலத்தை) கைப்பற்றினார். அவரது பல்வேறு வெற்றிகளின் காரணமாக விஜயநகரப் பேரரசு மேற்கே கொங்கணம் வரையிலும், கிழக்கே விசாகப் பட்டணம் வரையிலும், தெற்கே இந்திய தீபகற்பத்தின் தெற்கு முனை வரையிலும் பரவியிருந்தது. அவருடைய ஆதிக்கம் இந்தியப் பெருங்கடலில் உள்ள பல தீவுகளிலும் ஒப்புக்கொள்ளப் பட்டது எனத் தெரிகிறது. கிருஷ்ணதேவராயர் சிறந்த நிர்வாகி. சட்டங்களைக் கண்டிப்புடன் செயல்படுத்தியதன் காரணமாக நாட்டில் அமைதியும், கட்டுப்பாடும், ஒழுக்கமும் நிலவின. அவர் எல்லா மதங்களையும் சமயப் பொறையோடு ஆதரித்தார். அவரே ஒரு பேரறிஞர்; அறிஞர்களுக்கும் அள்ளிக் கொடுத்து ஆதரித்தார். அஷ்டதிக்கஜங்கள் என்று அழைக்கப்பட்ட அறிஞர்கள் அவர் அரசவைக்கு அணி செய்தனர்.

அவர் போர்ச்சுக்கீசியருடன் நட்புறவு பூண்டார். எனவே, அவர்கள் இந்நாட்டில் குதிரை வியாபாரத்திலும், பிறபொருள் வியாபாரத்திலும் ஈடுபட்டனர்.

கிருஷ்ணதேவராயர் சிறந்த கட்டடங்களையும் எழுப்பினார். அவரது ஆதரவில் எழுப்பப்பட்ட புதிய நகரான நாகலாபுரத்தில் பல பெரிய கட்டடங்கள் எழுப்பப்பட்டன. விஜயநகரத்தில் அவர் விட்டலசாமி ஆலயத்தையும், ஹசாரா இராமசாமி ஆலயத்தையும் கட்டினார். அவருடைய அருங்கொடை குணமும், பல்கலைத் திறனும், அவர் மக்கள்நலம்பால் கொண்ட அக்கறையும், சமயப்பொறையும், ஏராளமான செல்வமும்,

அவர் அருங்கலைக்களித்த ஆதரவும் தென்னிந்திய மன்னர் களுக்குள்ளே அவரை மிகச் சிறந்த பேரரசராகக் காட்டுகின்றன. அவர் கி. பி. 1529ஆம் ஆண்டு அமரரானார்.

**விஜயநகரப் பேரரசின் மறைவு**

கிருஷ்ணதேவராயருக்குப் பின்வந்த அச்சுதராயர் வலிமை யற்றவராகவும் செயல் ஊக்கமற்றவராகவும் இருந்தார். அவருக்குப் பின்வந்த சதாசிவராயர் அரசு விவகாரங்களைத் தமது அமைச்சர் இராமராயரிடம் விட்டுவிட்டார். இராம ராயரோ அண்டை முஸ்லிம் அரசுகளின் விவகாரங்களில் தலை யிடும் ஆபத்தான கொள்கையைக் கடைப்பிடித்தார். பீஜப்பூர், கோல்கொண்டா சுல்தான்களுடன் சேர்ந்துகொண்டு அகமது நகரைத் தாக்கினரர். அந்நகர் சீரழிக்கப்பட்டது. இதனால் கோபமடைந்த முஸ்லிம் மன்னர்கள் தங்களிடையே இருந்த வேற்றுமைகளை மறந்து, விஜயநகர அரசுக்கு எதிராக ஒன்று திரண்டனர். அதன் விளைவு கி. பி. 1565ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் 23ஆம் தேதி நடைபெற்ற தலைக்கோட்டைப் போரே யாகும். இப்போர் பீஜப்பூர், அகமது நகர், கோல்கொண்டா, பீடார் அரசுகளின் கூட்டணிப்படைக்கும், விஜயநகர படைக்கும் இடையே நடந்தது. இராமராயர் போரில் கொல்லப்பட்டார். வெற்றிபெற்ற சுல்தான்கள் விஜயநகரத்தை அடியோடு அழித்தனர். அவ்வழிவின் சின்னங்களை நாம் இன்றும் ஹம்பி என்னும் இடத்தில் காணலாம். 'சீவெல்' என்னும் வரலாற்றுப் பேராசிரியர் இதனைப் பின்வருமாறு வருணிக்கிறார்: 'உலக வரலாற்றிலேயே இவ்வளவு பெரிய அழிவு, இவ்வளவு விரைவாக, இவ்வளவு சிறந்த எந்த ஒரு நகரத்தின்மீதும் ஏற்பட்டதில்லை.'

தலைக்கோட்டைப் போர் விஜயநகர அரசுக்கு ஒரு பெரிய அடியாக இருந்தாலும் மரண அடியாக அமையவில்லை. இராம ராயரின் சகோதரர் திருமலை என்பவர் விஜயநகர அரசின் தலை நகரைப் பெனுகொண்டாவிற்கு மாற்றினார். பெயரளவில் ஆண்ட சதாசிவராயரைத் தள்ளிவிட்டு ஆட்சிக்குவந்த அவரது வமிசம் 'அரவீடு வமிசம்' என அழைக்கப்பட்டது. இவ்வமிசத்தின் கடைசி அரசர் மூன்றாவது ரங்கா ஆவார். அவர் பீஜப்பூர், கோல்கொண்டா சுல்தான்களின் தாக்குதல்களைப் பலமுறை சந்திக்க நேரிட்டது. மேலும் சீரங்கப்பட்டினம், மதுரை, தஞ்சாவூர் முதலிய இடங்களில் இருந்த உள்நாட்டுத் தலைவர்கள் கலகம் செய்தனர். இதனால், படிப்படியாக விஜயநகரப் பேரரசு சிறு அரசுகளாகப் பிளவுண்டு, இறுதியில் மொகலாயப் பேரரசுடன் இணைந்துவிட்டது.

**கலை, கட்டடம், இலக்கியம்**

விஜயநகரப் பேரரசர்கள் கலை, கட்டடம், இலக்கியம் ஆகியவற்றை ஆதரித்தார்கள். கிருஷ்ணதேவராயருடைய ஆட்சி தென்னிந்திய வரலாற்றில், இத்துறைகளில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்தது. கிருஷ்ணதேவராயரே தெலுங்கு மொழியிலும், சமஸ்கிருத மொழியிலும் மிகச் சிறந்த அறிஞர் என்பதை நாம் ஏற்கெனவே கண்டோம். அவர் ஆண்டாளின் சரிதத்தைத் தெலுங்கு மொழியில் **ஆமுக்த மால்யதா** என்னும் பெயரில் எழுதினார். அவருடைய புகழ்வாய்ந்த வடமொழி நூல்கள் **உஷா பரிணயமும், ஜம்பாவதி கல்யாணமுமாகும்.** ஏற்கெனவே அவர் அவையை அலங்கரித்த அஷ்டதிக்கஜங்கள் என்று எட்டு அறிஞர்களைப்பற்றிக் கூறியிருக்கிறோம். அவர்களுள் அல்லாசானி பெத்தண்ணா என்பவர் ஆஸ்தானக் கவிஞர். தெலுங்குக் கவிஞர்களுள் அவர் புகழ்பெற்ற, ஒரு சிறந்த இடத்தைப்பெற்றார். அவர் மனுவின் கதை என்ற மனுசரிதத்தை எழுதினார். திம்மண்ணா என்ற மற்றொரு கவிஞர் **பாரிஜாத அபகரணம்** என்ற நூலை எழுதினார். இராமபத்ரர் என்பவர் தெலுங்கு மொழியில் சகலகதாசங்கரகம் என்ற நூலை எழுதினார். தமிழ்க் கவிஞர் ஹரிதாஸ் இரு சமய விளக்கம் என்னும் நூலில் சைவ சமயத்தையும் வைணவ சமயத்தையும்பற்றி விரிவாக விளக்குகிறார். கன்னட மொழியிலும் பெரிய நூல்கள் இயற்றப்பட்டன. திம்மண்ணா, மகாபாரதத்தைக் கன்னட மொழியில் 'கிருஷ்ணராய பாரதம்' என்னும் பெயரில் மொழி பெயர்த்தார். இராமாயணமும் பாகவத புராணமும் கன்னட மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. இம்மொழியில் மிகச் சிறந்த புகழ்வாய்ந்த கிருஷ்ண பக்தரான பண்டரிபுரத்துப் புரந்தரதாஸர் பல தெய்வீகப் பாடல்களை இயற்றினார். அவர் அச்சுதராயர், சதாசிவராயர் காலத்தில் வாழ்ந்தார். கிருஷ்ண தேவராயர் காலத்தில் சாயனரும், வேதங்களின்மீது விளக்கங்கள் எழுதிய அவருடைய சகோதரர் மாதவரும் வாழ்ந்தார்கள்.

விஜயநகரப் பேரரசு காலத்தில் ஓவியக்கலை புதிய உன்னத நிலையை அடைந்தது. இசை, நாடகம், நாட்டியம் ஆகியவையும் ஆக்கமும் ஊக்கமும் பெற்றன. இலக்கணம், தத்துவ சாத்திரம், வேதாந்தம் முதலியவையும் தற்போது ஹம்பி நகரில் காணப் படும் விஜயநகரத்தின் அழிவுச் சின்னங்களும், விஜயநகரப் பேரரசின் கட்டடக் கலையின் மகோன்னதச் சிறப்பிற்குக் கட்டியம் கூறுகின்றன.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஐந்து அல்லது ஆறு வரிகளில் விடையளிக்கவும் :

1. பாமினி அரசை நிறுவியவர் யார்? அவரது சாதனைகளைக் கூறு.
2. பாமினி அரசர்களுள் சிறந்தவர் என மூன்றாவது முகம்மது ஷா கருதப்படுவானேன்?
3. சிறுகுறிப்பு வரைக. முகம்மது கவான்
4. பாமினி பேரரசின் அழிவின்மீது ஏற்பட்ட ஐந்து சிற்றரசுகள் யாவை?
5. விஜயநகர அரசு ஏன் அமைக்கப்பட்டது? அதனை அமைத்தவர்கள் யாவர்?
6. கிருஷ்ணதேவராயரின் போர் வெற்றிகளைக் குறிப்பிடுக.
7. சிறுகுறிப்பு வரைக. அஷ்ட திக்கஜங்கள்.
8. விஜயநகர கட்டடக் கலைச் சிறப்பிற்கு இரண்டு சான்றுகள் தருக.
9. தலைக்கோட்டைப் போர் ஏன் ஏற்பட்டது? அதன் விளைவுகள் யாவை?

II. பின்வரும் வாக்கியங்களில் உள்ள கோடிட்ட இடங்களைத் தகுந்த விடையால் நிரப்புக :

1. பாமினி அரசின் தலைநகர் ———.
2. விஜயநகர, பாமினி அரசுகளுக்கிடையே போர்கள் நிகழக்காரணமாயிருந்த பிரதேசம் ———.
3. பாமினி அரசின் தலைநகராகப் பீடாரை ஆக்கியவர் ———.
4. மூன்றாவது முகம்மதுஷாவிற்குப் பேரும் புகழும் தந்த முதலமைச்சர் ———.
5. பீஜப்பூர் சுல்தான்களில் மிகப் புகழ் வாய்ந்தவர் ———. அவருடைய நினைவுச் சின்னம் ——— என்று அழைக்கப் படுகிறது.
6. விஜயநகர அரசை அமைத்தவர்கள் ———, ———.

7. விஜயநகரப் பேரரசைப்பற்றி சிறந்த செய்திகளைக் கொடுத்துள்ள அயல்நாட்டுப் பயணிகள் ———, ———.

8. விஜயநகரப் பேரரசின் புகழ்மிக்கப் பேரரசர் ———.

9. அல்லாசானி பெத்தண்ணா ——— என்னும் நூலை எழுதினார்.

10. கிருஷ்ணதேவராயர் இயற்றிய இரண்டு சமஸ்கிருத நூல்கள் ———, ———.

11. கிருஷ்ணதேவராயருடன் நட்புறவு பூண்ட அயல் நாட்டினர் ———.

12. விஜயநகரப் பேரரசின் அழிவிற்குக் காரணமானவர் ———. அவர் ——— என்னும் போரில் பாமினி சுல்தான்களால் தோற்கடிக்கப்பட்டார்.

III. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் பதினைந்து வரிகளுக்கு மிகாமல் விடையளி

1. பாமினி அரசின் வரலாற்றை அது ஐந்து சிற்றரசு களாக உடைந்தது வரை கூறுக.

2. விஜயநகரத்தை ஆண்ட கிருஷ்ணதேவராயரின் ஆட்சி யைப்பற்றிக் குறிப்பிடு.

3. விஜயநகரப் பேரரசின் கலை, கட்டடக் கலை, இலக்கியம் இவற்றின் நிலையைப்பற்றி எழுதுக.

IV. நான்கு மாற்று விடைகளுள் சரியானவற்றைத் தேர்ந் தெடுக்கவும் :

1. முகம்மது கவானின் சிறந்த நிர்வாகத்திற்கு உதவிய பாமினி அரசர்.

(அ) அஹமது ஷாவாலி ( )

(ஆ) முகம்மது ஷா I

(இ) முகம்மது ஷா III

(ஈ) அலாவுதின் முகம்மது ஷா.

2. தலைக்கோட்டைப் போரின்போது விஜயநகர மன்னர்.

(அ) கிருஷ்ணதேவராயர் ( )

(ஆ) தேவராயா II

(இ) சதாசிவராயர்

(ஈ) ஹரிஹரர்.

# 13. மொகலாயப் பேரரசு

## (கி. பி. 1526—1707)

### அறிமுகம்

இந்திய வரலாற்றில் நினைவில் நிலைத்துநிற்கும் பேரரசு, மொகலாயப் பேரரசாகும். அவர்கள் இந்தியாவில் எவ்வாறு தங்கள் பேரரசை நிலைநாட்டினர், எவ்வாறு இந்திய மக்களோடு ஒன்றி வாழ்ந்தனர் என்பது படிப்பதற்கு மிகச் சுவையான நிகழ்ச்சிகளாகும். கி.பி. 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவின் அரசியல் நிலை, மொகலாயர்கள் இந்திய மண்ணில் தம் காலை நன்கு ஊன்றுவதற்கு ஏதுவாக இருந்தது.

### கி.பி. 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவின் நிலை

கி. பி. 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், டில்லியை இப்ராஹிம் லோடி என்பவர் பெயரளவிற்கு அரசராய் ஆண்டு வந்தார். பஞ்சாப், சிந்து, முல்தான், ஜான்பூர், வங்காளம், ஒரிஸ்ஸா முதலிய இராச்சியங்கள் சுதந்தர இராச்சியங்களாக விளங்கின. இராசபுத்திர இராச்சியம் யாரும் எதிர்க்கமுடியாத பலம்வாய்ந்த 'சிசோடியர்'கள் தலைமையில் மிகச் சிறப்பாக விளங்கியது. சுதந்தரம் பெற்ற முல்தான், காண்டேஷ் முதலிய இராச்சியங்கள் முகம்மதிய அரசர்களால் ஆளப்பட்டுவந்தன. குஜராத்தும் வலிமைவாய்ந்த சுதந்தர இராச்சியமாக விளங்கியது. ஆயினும் இவ்விராச்சியங்கள் ஒற்றுமையின்றி தங்களுக்குள் போரிட்டுக்கொண்டன. விந்தியமலைக்குத் தெற்கே ஆண்டுவந்த ஐந்து பாமினி சுல்தான்களும், விஜயநகரப் பேரரசுடனும், தங்களுக்குள்ளும் தொடர்ந்து போரிட்டுக்கொண்டிருந்தனர். இவ்விதச் சூழ்நிலை இந்தியாவில் மொகலாயர்கள் பிரவேசத்திற்கு வழியமைத்துக் கொடுத்தது எனலாம்.

### பாபர் (கி. பி. 1526 – 1530)

பாபர் கி.பி. 1483இல் மத்திய ஆசியாவில் பர்கானா 'என்ற இடத்தில் பிறந்தார். அவருடைய இயற்பெயர் ஜாகிருதீன் என்பதாகும். அவர் தந்தையின் வழியில் தைமூர் பரம்பரையைச் சார்ந்தவர்; தாய் வழியில் செங்கிஸ்கான் பரம்பரையைச் சார்ந்தவர். அவர் வீரமும், தீரமும், முன்னேற்றத்தில் ஆர்வமும் கொண்டவர். பர்கானாவின் அரியாசனத்தை வெற்றிகொண்ட பின் தம்மைக் காபூலின் மன்னராக முடிசூட்டிக்கொண்டார்.

### பாபரின் வெற்றிகள்

இப்ராஹிம் லோடியின் ஆட்சியில் வெறுப்புகொண்ட பிரபுக்கள் பாபரை இந்தியாவின்மீது படையெடுக்கும்படி அழைப்பு விடுத்தனர். அந்த அழைப்பிற்கு இணங்கி பாபர் 12,000 வீரர்களுடன் இந்துஸ்தானத்தைக் கைப்பற்ற எண்ணி இந்தியாவில் காலடி எடுத்து வைத்தார். இப்ராஹிம் லோடி பெரும்படை திரட்டி பாபரின் படையெடுப்பை எதிர்த்தார். இதனால் கி. பி. 1526ஆம் ஆண்டு சரித்திரப் புகழ்பெற்ற முதலாம் பானிப்பட்டுப் போர் நிகழ்ந்தது. இப்போரில் பெரு வெற்றிவாகை சூடிய பாபர் டில்லியையும், ஆக்ராவையும் கைப்பற்றி இந்தியாவில் மொகலாயப் பேரரசை நிறுவினார்.

பின்பு பாபர், தம்மை எதிர்த்த மேவாரின் தலைவரான இராணாசங்காவைக் கான்வாகா என்னும் இடத்தில் நடந்த போரில் (கி. பி. 1527) தோற்கடித்தார். பின்னர் 'கோக்ராப்' போரில் (கி. பி. 1529) ஆப்கானியர்களின் ஆதிக்கத்தை அழித்தார். அவர் ஆதிக்கத்தின்கீழ்க் காபூல், பஞ்சாப், ஆக்ரா, அயோத்தி, குவாலியர், பீகார், இராசபுத்திரம் முதலிய பகுதிகள் இருந்தன. டில்லி அவரின் தலைநகராக விளங்கியது. ஆயினும், அவர்தம் வெற்றிகளை விரிவுபடுத்துவதற்கு முன்பே கி.பி.1530இல் உயிர் நீத்தார்.

### குணநலன்கள்

பாபர் உடல் வலிமையும், சிறந்த வீரமும் உள்ளவராவார். அவர் விளையாட்டிலும், வேட்டையாடுவதிலும், வில்வித்தையிலும் வல்லவர்; இசையிலும் கலைகளிலும் விருப்பமுள்ளவர்; துருக்கிய மொழியிலும் பாரசீக மொழியிலும் கவிதைபல இயற்றிட வல்லவர். அவர் துருக்கிய மொழியில் எழுதிய பாபர்நாமா என்ற சுயசரிதை ஒரு முக்கியமான நூலாகும்.

## ஹுமாயூன் (கி.பி. 1530–1540) – (கி.பி. 1555–1556)

பாபரின் மறைவுக்குப்பின், அவரின் மகன் ஹுமாயூன் பட்டத்திற்கு வந்தார். பெயரிலேயே அதிர்ஷ்டத்தைக் கொண்ட ஹுமாயூன், வாழ்க்கையில் நேர்மாறாகத் துரதிர்ஷ்டம் பிடித்தவராக விளங்கினார். பாபர் அவரிடம் ஒரு நிலையான ஆட்சியையுடைய அரசை விட்டுச் செல்லவில்லை. தயாள குணமும் நல்லிதயமும் படைத்த ஹுமாயூன் நல்ல ஆட்சியாளராக விளங்கவில்லை. தந்தை விட்டுசென்ற பேரரசைத் தம் மூன்று சகோதரர்களுடன் பிரித்து ஆண்டுவந்தார். காபூலையும்,

காண்டகாரையும் காம்ரானும், சம்பல் பிரதேசத்தை அஸ்காரியும், மேவார் பிரதேசத்தை ஹிண்டாலும் பெற்று ஆண்டனர். ஆயின், அவர்கள் ஹுமாயூனிடம் நன்றியோடு நடந்துகொள்ளவில்லை. ஹுமாயூனை வீழ்த்துவதற்கு அவர்கள் ரகசியத் திட்டம் தீட்டினர். தக்க சமயத்தில் காம்ரான் பஞ்சாபை வென்று சுதந்தர அரசனானான். பாபரால் வங்காளத்திலும் பீகாரிலும் வெல்லப்பட்ட ஆப்கானியர்கள் மீண்டும் தங்கள் ஆதிக்கத்தை அங்கு நிலைநாட்ட முயன்றனர். குஜராத்தின் அரசரான பகதூர்ஷா, டில்லியைக் கைப்பற்ற விழைந்தார். இதற்கிடையில் பீகாரில் சில தொல்லைகள் ஏற்பட்டன.

ஹுமாயூன் பீகாரில் தொந்தரவு கொடுத்துவந்த ஆப்கானியத் தலைவன் ஷெர்கானை எதிர்க்க ஒரு பெரும் படையுடன் சென்றார். ஆயின், தன் புத்தி வலிமையால் ஷெர்கான் ஹுமாயூனுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டார். அடுத்து ஹுமாயூன் குஜராத்தை ஆண்ட பகதூர்ஷாவை வெல்ல பெரும் படையுடன் சென்றார். இதற்கிடையில் ஹுமாயூன் டில்லியில் இல்லாமையால், அதனைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு ஷெர்கான் தம் இராச்சியத்தை விரிவாக்கினார். ஹுமாயூன் ஷெர்கானை எதிர்த்தும், ஷெர்கானால் கி.பி. 1539ஆம் ஆண்டு பாட்னாவின் அருகில் கங்கைநதிக் கரையில் அமைந்த 'சௌஸா' என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டார். ஆக்ராவில் ஆப்கானியத் தலைவர்களுடன் மோத முயன்றுகொண்டிருந்தபோது மீண்டும் ஷெர்கானால் கி.பி. 1540இல் கன்னோசிப் போரில் முறியடிக்கப்பட்டார். ஆகவே, ஹுமாயூன் புகலிடம்தேடி ஊர் ஊராய் அலைய வேண்டியிருந்தது. இச்சமயத்தில்தான் அவர் மனைவி ஹமீதாபானு கி.பி. 1542இல் அக்டோபர் மாதம் 14ஆம் நாள் அமரக்கோட்டை என்னுமிடத்தில் 'அக்பர்' என்ற மகவைப் பெற்றார். அப்போது ஷெர்கான் டில்லிக்குத் தம்மை தலைவராக்கிக்கொண்டு ஷெர்ஷா என்ற பெயரைச் சூட்டிக்கொண்டார்.

### ஷெர்ஷா (கி.பி. 1540-1545)

ஷெர்ஷா டில்லியில் ஐந்தே ஆண்டுகள் ஆண்டாலும், இக்குறுகிய காலத்தில் பெரும் சாதனைகள் புரிந்தார். இவரால் ஏற்படுத்தப்பட்ட வமிசம் 'சூர் வமிசம்' என்று அழைக்கப்பட்டது.

ஷெர்ஷா தம் நிர்வாகத் திறமையால் (ஆட்சி முறையால்) இந்திய வரலாற்றில் புகழ்பெற்றவரானார். அவரின் ஆட்சிமுறை மொகலாயப் பேரரசர் அக்பருக்கு ஒரு முன்மாதிரியாக

விளங்கியது எனலாம். ஆகவே, அவர் 'அக்பரின் முன்னோடி' எனப்பட்டார்.

**ஷெர்ஷாவின் அரசியல் நிர்வாகம்:** இவர் காலத்தில் நாடு 47 சர்க்கார்களாகவும் (மாவட்டங்கள்) அவை மீண்டும் பர்கானாக் களாகவும் பிரிக்கப்பட்டன. ஷெர்ஷா விளைநிலங்களை அளந்து நிலவரியை நிர்ணயித்திருந்தமையால் அஃது அவருக்குப் பெயரும் புகழும் பெற்றுத் தந்தது. நாட்டில் நிலங்களை நன்றாக அளந்து அதனை ஏடுகளில் குறித்துவைத்தார். நிலவருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு, பணமாகவோ, தானியமாகவோ கண்டிப்பாக வசூலிக்கப்பட்டது. இம்முறையே பின்பு அக்பரால் பின்பற்றப் பட்டது.

புதிய சட்டங்கள் இயற்றப்பட்டன. பாரபட்சமின்றி நீதி வழங்குவதில் ஷெர்ஷா சிறந்த பெயர்பெற்றார். இந்துக்கள் தங்கள் வழக்குகளைப் பஞ்சாயத்தின் மூலம் தீர்த்துக் கொண்டனர். பெரிய குற்றங்கள் அரசு நீதிமன்றங்களில் விசாரிக்கப்பட்டன. மிகப் பெரிய பதவியில் இருப்பவரும் குற்றவாளிகளாகயிருந்தால் அவர்களுக்கு எந்தவிதக் கருணையும் காட்டப்படவில்லை.

ஷெர்ஷா புதிய நாணய முறையைக் கொணர்ந்து, வெள்ளி நாணயங்களை வெளியிட்டார். அது தற்கால ரூபாய் நாணயங் களுக்கு முன்னோடியாக விளங்குகிறது. ஷெர்ஷா இந்த நாணயங் களுக்கு மதிப்பீடு செய்திருந்தமையால் நாட்டில் வாணிபம் பெருகியது. காவல் துறையைத் திறமையாகவும் சிறப்பாகவும் நிருவகித்தார். இதனால், நாட்டில் மக்கள் பயமின்றி பயணம் செய்ய முடிந்தது.

ஷெர்ஷா ஆங்காங்கே பல நல்ல சாலைகளை அமைத்தார். அச்சாலைகளில் முக்கியமானது வங்காளத்திலிருந்து பஞ்சா பிற்குப் போடப்பட்ட நெடுஞ்சாலையாகும். சாலைகளின் இரு பக்கங்களிலும் சத்திரச் சாவடிகளைக் கட்டினார். நிழல் தரும் மரங்கள் பல, சாலைகளின் இரு மருங்கிலும் நடப்பட்டன. ஆங்காங்கே நிறுவப்பட்ட சத்திரங்களும் சாவடிகளும், குதிரை களின் மூலம் கடிதப் போக்குவரத்தை நடத்தும் இடங்களாகப் பயன்பட்டன.

ஷெர்ஷா சிறந்த அறிஞர்கள் பலரைப் போற்றினார்; கட்டடக்கலையையும் ஊக்குவித்தார். ஷெர்ஷா காலத்தில் கட்டடக் கலைச் சிறப்பிற்கு உதாரணமாக விளங்குவது அவரது கல்லறைக் கட்டடமாகும். அது அழகாக வடிவமைக்கப் பட்டுச் சிறப்பாகக் கட்டப்பட்டிருந்தது.

ஷெர்ஷா எல்லாச் சமயங்களையும் ஆதரிக்கும் சகிப்புத் தன்மையுள்ளவர். ஷெர்ஷாவினால் ஏற்படுத்தப்பட்ட ஆப்கானியப் பேரரசு நீண்டநாள் நிலைத்து நிற்கவில்லை. இவர் மறைந்த பத்து ஆண்டுகளுக்குப்பின் ஹுமாயூன் மீண்டும் டில்லியைக் கைப்பற்றித் தம் ஆட்சியை மீட்டுக்கொண்டார்.

**மீண்டும் ஹுமாயூனின் ஆட்சி (கி. பி. 1555-1556)**

ஷெர்ஷாவினால் தோற்கடிக்கப்பட்ட ஹுமாயூன் ஊர் ஊராய் அலைந்து திரிந்து பாரசீக மன்னர் ஷாவிடம் அடைக் கலம் புகுந்தார். அவருக்கு நாட்டை மீட்பதற்காகச் சுமார் 14,000 வீரர்கள் கொடுக்கப்பட்டனர். முதலில் ஹுமாயூன் தன் சகோதரன் காம்ரானை வென்று காபூலையும், காண்ட காரையும் மீட்டார். ஆப்கானியத் தலைநகரைக் கைப்பற்றியபின் இந்துஸ்தானத்தை நோக்கிப் படையெடுத்தார். லாகூரைக் கைப்பற்றிப் பின் டில்லியை நோக்கிப் படையெடுத்தார். கி. பி. 1555ஆம் ஆண்டு ஸர்ஹிந்த் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் சூர்வம்சத்துக் கடைசி அரசர் சிக்கந்தர் சூர் என்பவரை வென்று, பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் டில்லியின் பேரரசராக வெற்றிவாகை சூடினார்.

ஹுமாயூன் மீண்டும் தன் ஆட்சியை டில்லியில் நிலை நாட்டினாலும், அது நெடுநாள் நிலைக்கவில்லை. அடுத்த ஆண்டே டில்லியில் தம் நூலக அறையின் மாடியிலிருந்து அவர் தவறிக் கீழே விழுந்து இறந்தார்.

**பேரரசர் அக்பர் (கி. பி. 1556-1605)**

ஹுமாயூனின் மறைவுக்குப் பின்பு அக்பர் பட்டத்திற்கு வந்தார். அவருக்கு அப்போது பதிமூன்றே வயது. ஆயினும், அவரின் பாதுகாப்பாளரான பைராம்கான் அக்பரை பாதுஷா எனப் பிரகடனம் செய்தார். அச்சமயத்தில் அடில்ஷா என்ற சூர்வம்சத்தைச் சார்ந்த ஆப்கானியத் தலைவரின் மந்திரி ஹெமு, மொகலாயர்களிடமிருந்து டில்லியையும் ஆக்ராவையும் கைப் பற்றினார். ஆகவே. கி. பி. 1556இல் நவம்பர் மாதம் ஐந்தாம் நாள் அக்பரின் பெரும்படை ஹெமுவின் படையைச் சரித்திரப் புகழ்பெற்ற பானிப்பட் என்னுமிடத்தில் சந்தித்தது. இப்போர் இரண்டாம் பானிப்பட்டுப் போர் என அழைக்கப்படுகிறது. இப்போரில் ஹெமு தோல்வியுற்றுத் தம் உயிரையும் இழந்தார். இவ்விரண்டாம் பானிப்பட்டுப் போரின் வெற்றி, மொகலாயர் களின் ஆதிக்கத்தை இந்தியாவில் பலமாக ஊன்ற வழிவகுத்தது எனலாம். பைராம்கான் மேலும் பல இராச்சியங்களை அக்பரின்

அரசுடன் இணைக்க விரும்பினார். அவ்வாறே குவாலியரும், ஜான்பூரும் வெற்றிகொள்ளப்பட்டு இணைக்கப்பட்டன. அக்பர் தம் பதினெட்டாம் வயதில், ஆட்சியைக் கைப்பற்றி, தாமே நேரடியாகப் பொறுப்பை ஏற்றார். பைராம்கான் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

**அக்பரின் வெற்றிகள்:** அரசாட்சியை ஏற்றபின், அண்டை இராச்சியங்களைக் கைப்பற்றித் தம் ஆட்சியை வடக்கிலும் தக்காணத்திலும் ஏற்படுத்த விரும்பினார். ஆகவே, கி. பி. 1560இல் மாளவத்தின் அரசரான பாஸ்பகதூரை வென்று அப்பகுதியைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். பின்பு தம் பார்வையைக் கோண்ட்வானாவின்மீது செலுத்தினார். கோண்ட்வானாவைத் தைரியமும் திறமையும் கொண்ட இராணி துர்காவதி அப்போது ஆண்டுவந்தார். கி. பி. 1564இல் இராணி துர்காவதியை வென்று, கோண்ட் வானாவைத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். தம் போர்த் தந்திரத்தாலும், திருமணப் பந்தத்தாலும் பல இராசபுத்திரர் களின் நம்பிக்கையையும், பேராதரவையும் பெற்றார். இதனால், 'இராஜா பகவன்தாஸ்' என்பவரும் 'இராஜா மான்சிங்' என்ப வரும் அக்பரின் படையில் தளபதிகளாகப் பொறுப்பை ஏற்றனர். மற்றோர் இராசபுத்திரத் தலைவர் இராஜா தோடர்மால் நிதி அமைச்சராக நியமிக்கப்பட்டார்.

கி. பி. 1567இல் தமக்கு அடிபணிய மறுத்த மேவாரின் இராசபுத்திர அரசர்மீது அக்பர் போர் தொடுத்து மேவாரின் தலைநகரான சித்தூரைக் கைப்பற்றினார். இறுதியில் கி. பி. 1568இல் இராசபுத்திரப் படையை முழுவதுமாக வென்றார். எனினும், மேவாரின் 'இராணா உதயசிங்' ஒரு புதிய தலைநகரை ஏற்படுத்திக்கொண்டு சுதந்தர அரசராக ஆண்டுவந்தார். அவருக்குப்பின் சித்தூரை மீட்பதற்காக உதயசிங்கின் மகன் இராணா பிரதாப்சிங் மொகலாயர்கள்மீது தொடர்ந்து 25 ஆண்டுகளாகப் போர் தொடுத்தார். ஆயினும், பிரதாப்சிங்கும் கி. பி. 1596இல் அக்பரைச் சேர்ந்த மான்சிங் என்ற படைத்தலைவரால் ஹால்டிகாட் என்னும் இடத்தில் நடந்த போரில் தோற்கடிக்கப்பட்டார். பின்பு, அக்பர் ரண்தாம் போரையும் வென்றார். பந்தல்கண்டில் உள்ள களிஞ்சார் என்ற கோட்டையும் அந்த ஆண்டே அக்பர் ஆட்சியின்கீழ் வந்தது.

பின்பு அக்பர் குஜராத்தைக் கைப்பற்றினார். அதன் சுல்தானுக்கு ஒய்வு ஊதியம் அளித்து அனுப்பிவைத்தார்,

கி.பி. 1574இல் அக்பர் வங்காளத்திற்குத் தாமே படையெடுத்துச் சென்று 'தாவுத்கானை' வென்றார். 'ராஜ்மகல்' என்னு

படம் 26. அக்பர் பேரரசு

மிடத்தில் நடந்த போரில் தாவுது கொல்லப்பட்டார். இவ்வாறு வங்காளமும் பீகாரும் அக்பரின் ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப் பட்டன.

கி. பி. 1586இல் அக்பர் காஷ்மீரத்தையும் வென்று தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். பின்பு காபூலின் தலைவன் தனக்கு எதிராகச் சதி செய்தமையால் அவனையும் வென்று, காபூலையும் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். சிந்து, பலுசிஸ்தானம், காண்டகார் முதலியனவும் அக்பரின் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டன.

கி. பி. 1596இல் அக்பரின் ஆட்சி நேபாளம், அஸ்ஸாம், சிக்கிம், பூடான் தவிர மீதியுள்ள வடபகுதிகள் முழுவதுமே பரவியிருந்தது. வடமேற்குப் பகுதியில் காபூலும் காண்டகாரும் அவர் ஆட்சிக்குட்பட்டிருந்தன.

தக்காண வெற்றி: வட இந்தியா முழுவதையுமே க்கைப்பற்றிய அக்பர், தம் கவனத்தைப் பின்பு தக்காணத்தின்மீது செலுத்தினார். தம் பிரதிநிதிகளைக் கான்டேஷ், அகமது நகர், பீரார் முதலிய பிரதேசங்களுக்கு அனுப்பி அதன் சுல்தான்களைத் தம் மேலாண்மையை ஏற்கும்படி கட்டளையிட்டார். ஆயினும், அவர்கள் அதனை மறுக்கவே, முதலில் சாந்த் பீபியினால் ஆளப்பட்டுவந்த அகமதுநகரைத் தாக்கி வெற்றிவாகை சூடினார். பீராரையும் வெற்றிகொண்டார். அவர் காண்டேஷ் மீது பெற்ற வெற்றியே அவர் பெற்ற இறுதி வெற்றியாகும்.

### அக்பரின் ஆட்சிமுறை

அக்பர் மிகச் சிறந்த நிர்வாகத்திறமை வாய்ந்தவர். அவரது ஆட்சியில் முக்கியமானவரும் சுழலச்சு போன்றவரும் பேரரசரே யாவார். அவருக்கு அதிக அதிகாரங்கள் இருந்தன. அவருக்கு உதவிசெய்ய வக்கீல் (முதல் அமைச்சர்), திவான் (பொருள் அமைச்சர்), மீர்பக்ஷி (இராணுவ அமைச்சர்), சாதர் (மதத்துறை அமைச்சர்), காஜி (நீதித்துறை அமைச்சர்) ஆகியோர் அவர் ஆட்சியில் இருந்தனர். அவர்களைத் தவிர இன்னும் பல அதிகாரிகளும் அக்பருக்கு நிர்வாகத்தில் உதவி செய்ய நியமிக்கப்பட்டிருந்தனர்.

மாகாண ஆட்சிமுறை: அக்பர் தம் பேரரசை 15 சுபாக்களாகப் (மாகாணங்கள்) பிரித்தார். ஒவ்வொரு சுபாவும், பல சர்க்கார்களாகப் (மாவட்டங்கள்) பிரிக்கப்பட்டன. அவை சிறுசிறு பர்கானக்களாகப் பிரிக்கப்பட்டன. சில பர்கானாக்கள் சேர்ந்தது 'சர்க்கார்' என்பதாகும். பல கிராமங்கள் சேர்ந்தது 'பர்கானா' வாகும்.

**படை நிர்வாகம் (மன்சப்தாரி முறை):** அக்பர் பாரசீகத்தைப் பின்பற்றி மன்சப்தாரி முறையை இந்தியாவில் புகுத்தினார். மன்சப்தாரி முறைப்படி ஒவ்வொரு படைத் தலைவருக்கும் 'மான்சப்' என்ற பதவி கொடுக்கப்பட்டது. ஆகவே, அவர்கள் 'மன்சப்தார்கள்' என்றழைக்கப்பட்டனர். இம் மன்சப்தார்கள் தக்க சமயத்தில் அரசருக்குப் படைகொடுத்துத் துணைபுரிய வேண்டும். மன்சப்தார்கள் 33 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டனர். அவர்களுள் 10 குதிரை வீரர்களுக்குத் தலைவரான மன்சப்தார்கள் முதல் 10,000 குதிரை வீரர்களுக்குத் தலைவரான மன்சப்தார்கள் வரை இருந்தனர். அக்பரின் படை மிகச் சிறியது. மன்சப் தார்கள்தான் அக்பருக்குத் தக்க தருணத்தில் படைகொடுத்து உதவினார்கள். அக்பர் படையில் குதிரைகள், காலாட்கள், பீரங்கிகள், கடற்படை முதலியன இடம்பெற்றிருந்தன.

**நிலவரிச் சீர்திருத்தம்:** அக்பரது ஆட்சியில், நில்வரித் திட்டம் 'இராஜா தோடர்மால்' என்பவரால் ஏற்படுத்தப்பட்டது. ஷெர்ஷாவைப் பின்பற்றி நிலங்கள் அளக்கப்பட்டுத் தரவாரி யாகப் பிரிக்கப்பட்டன. தரத்திற்கு ஏற்றவாறு நிலவரி மூன்றில் ஒரு பங்காக வசூலிக்கப்பட்டது. விவசாயிகளிடமிருந்து நிலவரி பணமாகவோ, தானியமாகவோ நேரடியாக வசூலிக்கப்பட்டது. பயிர்த்தொழிலின் முன்னேற்றத்தைப் பாதிக்கும் பல வரிகளை அக்பர் நீக்கினார், நாட்டில் பஞ்சம் ஏற்பட்டபோது வரி குறைக்கப்பட்டது. சொத்துகளின் விவரம் குறித்துவைக்கப் பட்டிருந்தது. இந்நிலவரித் திட்டம் பின்புவந்த ஆங்கிலேயர் களின் 'இரயத்துவாரி முறைக்கு' முன்மாதிரியாய் விளங்கியது எனலாம்.

**பொருளாதார, சமூகச் சீர்திருத்தங்கள்:** வாணிபத்தின் பெருக்கத்தைத் தடைசெய்யும் பல வரிகளை அக்பர் நீக்கினார். புதிய நாணயமுறை புகுத்தப்பட்டது. வெள்ளி நாணயங்களோடு, 'மோஹர்' என்றழைக்கப்பட்ட பொன் நாணயங்களையும் அவர் வெளியிட்டார். நாடு முழுவதையும் இணைக்கும் சாலைகள், தபால்முறை முதலியவற்றின் மூலம் ஒவ்வொரு மாகாணத் துடனும் உடனுக்குடனே தொடர்புகொள்ளவும் வாணிபம் பெருகவும், வழிவகுத்தார். அக்பர், சமூகக் கொடுமைகளான 'சதி' என்ற உடன் கட்டை ஏறுதல், பால்ய விவாகம், பெண்வதை முதலியவற்றை எதிர்த்தார். விதவைத் திருமணத்தை ஆதரித்தார்.

**சமயச் சீர்திருத்தம்:** அக்பர் ஒரு தேசியப் பேரரசர் எனலாம். குடிமக்களின் நல்வாழ்வே நாட்டின் நல்வாழ்வு என்பதனை திண்மையாக அறிந்திருந்தார். இந்துக்களின்மீது விதிக்கப்

பட்டிருந்த 'ஜிஸியா' என்ற வரியையும், யாத்திரை வரியையும் நீக்கினார், இந்துக்களுக்கு உயர் பதவியை அளித்தார். இந்து முஸ்லிம் ஒற்றுமையை விரும்பிய அவர் அதற்கு எடுத்துக் காட்டாக ஓர் இராசபுத்திர இளவரசியை மணந்தார். அவர் பதேபூர்சிக்ரியில் 'இபதத்கானா' என்ற மண்டபத்தைக் கட்டி அதில் சமயத் தொடர்பாகக் கலந்துரையாடல் செய்ய எல்லா மதத்தலைவர்களையும் அழைத்தார். இந்து, முஸ்லிம், சமண, பௌத்த மதத் தலைவர்கள், பாரசீக, கிறித்துவ மதத் தலைவர்கள் அனைவரும் அழைக்கப்பட்டனர். எல்லா மதத்திலுள்ள சிறந்த கொள்கைகளைக் கேட்டறிந்தார், குரானிலும், வேதங்களிலும், கிறித்துவ புனித நூலிலும் இன்னும் பல சமய நூல்களில் உள்ள நல்ல கொள்கைகளைத் தொகுத்து தீன் இலாஹி அல்லது **தெய்வீக மதம்** என்ற பொதுச் சமயம் ஒன்றை அக்பர் நிறுவினார். சன்னி முகம்மதியராய் இருந்தும் அவர் மற்ற மதங்களை மதித்தார். தாம் ஏற்படுத்திய புதிய சமயத்தை மற்றவர்கள் தழுவவேண்டுமென்று அவர் கட்டாயப்படுத்தவில்லை. ஆகவே அக்பருக்குப்பின் 'தீன் இலாஹி' என்ற அச்சமயம் மறைந்துவிட்டது.

**கலையும் இலக்கியமும்**

அக்பரின் ஆதரவால் கலை, கட்டடக்கலை, ஓவியம், இசை முதலியன வளர்ந்தன. ஹுமாயூனுக்காக அக்பர் கட்டிய கல்லறை கட்டடம் மொகலாயர்களின் கட்டடக்கலைச் சிறப்பிற்கு எடுத்துக்காட்டாகும். ஆக்ராவிலும், லாகூரிலும் உள்ள கோட்டைகள் அக்பரால் கட்டப்பட்டன. அக்பர் கட்டடக் கலையில் ஆர்வமும், விருப்பமும் உள்ளவர் என்பதனை பதேபூர்சிக்ரி என்ற புதிய தலைநகரத்தில் அவர் கட்டிய அழகிய கட்டடங்களே உணர்த்துகின்றன. மேலும், அக்பர் காலத்தில் கட்டடக்கலைச் சிறப்பை ஜோத்பாய் அரண்மனை, பீர்பாலின் அரண்மனை, ஷெய்க் சலிம்சிஸ்தியின் கல்லறையிலும், 'புலன்தர்வாஸா'விலும் காணலாம். ஓவியக்கலையும் அக்பர் காலத்தில் நன்றாக வளர்ந்தது.

அக்பர் அறிவுசார்ந்த பெரியோர்களின் மத்தியில் இருக்கவே விரும்பினார். அபுல் பாசல், அபுல் பெய்சி ஆகிய புகழ்வாய்ந்த புலவர்கள் அவர் அரசவையில் இடம் பெற்றிருந்தனர். தான்சேன் என்ற புகழ்பெற்ற பாடகர் அக்பரின் அரசவையை அலங்கரித்தார். பேரறிஞரும், புகழ்வாய்ந்த புலவருமான அபுல் பாசல் அக்பரின் சிறந்த ஆலோசகராகவும், நண்பராகவும் விளங்கினார். அபுல் பாசல் அக்பரின் ஆட்சி முறையைப்பற்றி அயினி அக்பர் என்ற நூலிலும், அக்பரின் வரலாற்றை அக்பர் நாமா என்ற நூலிலும் விளக்கி உள்ளார்.

அக்பரின் மைந்தர் சலீமினால் அபுல் பாசல் கொல்லப் பட்டார். பின்பு அக்பர் கி. பி. 1605இல் தம் உயிர் நீத்தார். அவரின் உடல் சிக்கந்தராவில் அடக்கம் செய்யப்பட்டது. இக்கட்டடம் அக்பர் காலத்தில் திட்டமிடப்பட்டாலும், அவர் மைந்தன் சலீமால் முடிக்கப்பட்டது. இக்கட்டடம் மொகலாயர் காலத்துக் கட்டடக்கலைச் சிறப்பிற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

## ஜஹாங்கீர் (கி. பி. 1605–1627)

அக்பரின் மறைவுக்குப் பின், அவர்தம் மைந்தன் சலீம் ஜஹாங்கீர் என்ற பெயரில் பட்டத்திற்கு வந்தார். அவர் சிறந்த கல்விமானாகவும், கலாரசிகராகவும் விளங்கினார். நீதி நிர்வாகத்தில் அவர் பாரபட்சமின்றி நடந்துகொண்டார்.

பகைவரை ஒழிப்பதில் அவர் கருணையற்ற முறையைப் பின்பற்றினார். ஜஹாங்கீரின் மகன் குஸ்ரு, அக்பரின் மறைவுக்குப் பின்பு ஆட்சியைக் கைப்பற்றிக்கொள்ள முயன்றதால் அவனைச் சிறையிலிட்டு, குருடாக்கிக் கொன்றார். குஸ்ருவிற்கு உதவி செய்த சீக்கிய குரு அர்ஜுன் சிங்கையும் கொன்றார். இச்செய்கை மொகலாயர்களுக்கும், சீக்கியர்களுக்கும் இடையே பகைமையை வளர்த்தது.

பர்த்வானைச் சேர்ந்த ஜாகிர்தாரின் விதவைமனைவி மெஹருன்னிசாவை ஜஹாங்கீர் மணந்துகொண்டு அவளை 'நூர்ஜஹான்' என்று பெயரிட்டழைத்தார். அவள் நிர்வாகத் திறமை வாய்ந்தவள். அரசியல் அதிகாரம்யாவும் அவளிடமே ஒப்படைக்கப்பட்டது. பின்னர் ஷாஜகானும் மாபத்கானும் வெளிப்படையாகக்கலகம் செய்ய காரணமாய் இருந்தவள் இந்த நூர்ஜஹான்தான் எனலாம்.

படையெடுப்புகள்: ஜஹாங்கீர் வங்காளம் முழுவதையும் வென்று, தம் ஆட்சிக்குக் கீழ்க் கொண்டுவந்தார். போர்ச்சு கீசியரின் அதிகாரமும், இந்திய இராஜாக்களின் ஆதிக்கமும் ஒடுக்கப்பட்டன.

அக்பர் காலத்தில் அகமதுநகர் முழுவதுமாக வெல்லப்பட வில்லை. ஜஹாங்கீர் அதனை முழுவதும் வெல்ல முற்பட்டார். எனினும், மாலிக் அம்பர் என்பவர் அம்முயற்சியை முறி யடித்தார்.

மேவாரின் இளவரசர், பிரதாப் சிங்கின் மகன் அமர்சிங் ஜஹாங்கீருக்கு அடிபணிந்தார். இஃது ஜஹாங்கீர் ஆட்சியில் நடைபெற்ற மிகப்பெரும் வெற்றியும், முக்கியமான நிகழ்ச்சியும் ஆகும்.

ஜஹாங்கீரின் மற்றொரு பெரியவெற்றி 'காங்ரா'வை வெற்றி கொண்டதேயாகும். கி. பி. 1622இல் காந்தகார் பாரசீகப் பேரரசரால் கைப்பற்றப்பட்டது.

**அரசுரிமைப் போர்:** கி. பி. 1622இல் ஜஹாங்கீரின் மைந்தர் ஷாஜஹான் தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார். ஆயினும், அவர் டில்லியில் தோற்கடிக்கப்பட்டார். பின்பு தக்காணம், வங்காளம் நோக்கிச் சென்றார். இறுதியில் தந்தையுடன் சமாதானம் செய்து கொண்டார்.

கி. பி. 1626இல் ஜஹாங்கீரின் தளபதி மகபத்கான் அரசருக்கு எதிராகவும், நூர்ஜஹானுக்கு எதிராகவும் கிளர்ச்சி செய்தார். மிகத் தைரியமாக அரசரை காபூலுக்குச் செல்லும் வழியில் கைது செய்தார். ஆனால், நூர்ஜஹான் தம் கணவரை தந்திரமாக விடுவித்தாள். மகபத்கான் தக்காணத்திற்கு ஓடி மறைந்து கொண்டார்.

**ஐரோப்பியர்களுடன் தொடர்பு:** ஜஹாங்கீர் ஆட்சியின்போது ஆங்கிலேயர்களும், போர்த்துக்கீசியர்களும், இந்தியாவில் வியாபாரம் செய்துவந்தனர். இருசாராரும் மொகலாயப் பேரரசரிடமிருந்து சலுகைகள்பெற விரும்பினர். கி. பி. 1611இல் போர்த்துக்கீசியர்கள் ஹூக்ளியில் சில ராஜாங்க கப்பல்களைச் சூறையாடவே, ஜஹாங்கீர் அவர்களைச் சிறையிலிட்டார். இத் தருணத்தை ஆங்கிலேயர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். கி.பி. 1615இல் ஸர் தாமஸ்ரோ என்ற ஆங்கிலேயத் தூதுவர் இங்கிலாந்து மன்னன் முதலாம் ஜேம்ஸின் அனுமதியுடன் ஜஹாங்கீரிடம் தூது வந்து, பல வியாபார சலுகைகள் பெற்றுச் சென்றார்.

## ஷாஜஹான் (கி. பி. 1629–1659)

ஜஹாங்கீருக்குப்பின் அவர் மகன் ஷாஜஹான் பட்டத்திற்கு வந்தார். மொகலாயப் பேரரசு இவரது ஆட்சியில் மிக உன்னத நிலையில் இருந்தது எனலாம். நாட்டில் அமைதியும், சுபிட்சமும் நிலவியது. எனினும் சில மாநிலங்களில் (குஜராத்திலும் காண்டேஷிலும்) பஞ்சமும், தொற்று நோயும் தலைவிரித்தாடின.

ஷாஜஹான் தக்காணம், அகமதுநகர், கோல்கொண்டா ஆகியவற்றை கைப்பற்ற எண்ணி அதன் மீது படையெடுத்தார். அவை மிக சுலபமாக அவருக்கு அடிபணிந்தன. பீஜப்பூர் மிக வலிமையாக எதிர்த்தது. ஆயினும் ஷாஜஹானின் மைந்தனும் தக்காணத்தின் பிரதிநிதியுமான ஔரங்கசீப் பீஜப்பூரை வெற்றி கொண்டார்.

ஷாஜஹான் ஒரு சிறந்த கட்டடக்கலை வல்லுநர். அவர் மிகப்பெரிய அழகிய மசூதிகளையும், சமாதிகளையும் கோடிக் கணக்காகச் செலவு செய்து கட்டினார்.

ஷாஜஹான், தம் அன்பு மனைவி மும்தாஜ் நினைவாக யமுனை நதிக்கரையில் தாஜ்மகாலைக் கட்டினார். இதைத் தவிர ஆக்ராவில் முத்து மசூதியும், டில்லியில் ஜும்மா மசூதியும் கட்டப் பட்டன. டில்லியில் செங்கோட்டையில் திவானிகாஸ், திவானிஆம் போன்ற கண்கவர் கட்டடங்கள் கட்டப்பட்டன. சிறந்த நவரத்தினக் கற்களால் மயிலாசனம் ஒன்றும் இவர் காலத்தில் செய்யப்பட்டது.

கி. பி. 1657இல் ஷாஜஹான் நோய்வாய்ப்பட்டார். அச் சமயம் அவரின் நான்கு மைந்தர்களுக்கு இடையே வாரிசுரிமைப் போர் எழுந்தது. அவர்களுள் ஔரங்கசீப் ஆக்ராவைக் கைப் பற்றி, தம் தந்தை ஷாஜஹானையும் சிறையிலிட்டார். பின்பு, தம் சகோதரர்களை ஒவ்வொருவராக வென்று, ஆட்சிப் பீடத்தைக் கி. பி. 1658இல் கைப்பற்றினார். ஷாஜஹான் ஆக்ராக் கோட்டையிலேயே இறக்கும்வரை சிறைவைக்கப் பட்டார் (1666).

## ஔரங்கசீப் (கி.பி. 1658-1707)

ஔரங்கசீப் மொகலாயப் பேரரசரானபின் 'ஆலம்கீர்' (உலகத்தையே வென்றவர்) என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார். அவரின் தீவிர மதப்பற்று மொகலாயப் பேரரசின் அழிவிற்குக் காரணமாய் இருந்தது எனலாம்.

**ஔரங்கசீப்பும், இராசபுத்திரர்களும்:** ஆம்பரைச் சார்ந்த இராஜா ஜெய்சிங் என்பவரும், மார்வாரின் இராஜா ஜஸ்வந்த் என்பவரும் மறைந்தபின் ஔரங்கசீப் இராசபுத்திரர்கள்மீது கொண்ட தம் எண்ணத்தை மாற்றிக்கொண்டார். முன்பைவிட இப்போது இராசபுத்திரர்கள் மீதும் இந்துக்களின் மீதும் மிகக் கடுமையாக நடந்துகொண்டார். ஜஸ்வந்த்சிங்கின் மகன் அஜித்சிங் இராணாவாக நியமிக்கப்படவில்லை. அஜித்சிங் குழந்தைப்பருவத்திலேயே மொகலாய அந்தப்புரத்தில் வளர்க்கப் பட்டார்; மார்வாரின் தலைவன் துர்காதாஸ், அஜித்சிங்கை அங்கிருந்து மீட்டு வந்தார். ஔரங்கசீப் இந்துக்களின்மீது 'ஜிசியா' வரியை மீண்டும் விதித்தார். மேவாரின் இராணா ராய்சிங் இதனை பெரிதும் வெறுத்தார். கி. பி. 1679இல் மார்வாரை ஔரங்கசீப் கைப்பற்றினார். மேவார் இராச்சியம் அழிக்கப்பட்டது. மொகலாயர்களை எதிர்க்கமுடியாது இராணா

காட்டுக்குள் சென்று ஒளிந்து கொண்டார். ஔரங்கசீப் மேவாருடன் உடன்படிக்கை செய்துகொண்டு சில இடங்களைப் பெற்றுக்கொண்டார். அதற்குப் பதிலாக அவர்கள் மீது 'ஜிசியா' வரியை நீக்கினார். மதுராவைச் சேர்ந்த 'ஜாட்' இனத்தவரும், இராசபுத்திரர்களும் 'கோகலா'வின் தலைமையில் மொகலாயப் பேரரசரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். ஔரங்கசீப் அதனை ஒடுக்கினாலும், அக்கிளர்ச்சி அவரின் ஆட்சிக்காலம் இறுதிவரை நீடித்தது. கி.பி. 1672இல் தற்போதைய பாடியாலா, ஆல்வார் பகுதிகளைச் சார்ந்த 'சத்நாமியர்' என்ற இந்துக்களும் மொகலாயப் பேரரசருக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தனர். ஆயினும் அவர்களும் ஒடுக்கப்பட்டனர்.

ஔரங்கசீப்பின் ஆட்சிக்காலத்தில், பல திசையிலிருந்தும் கிளர்ச்சிகள் எழுந்தவண்ணம் இருந்தன. ஔரங்கசீப் இந்துக்களை வெறுத்து ஒதுக்கியதால் பந்தல்கண்ட்டைச் சார்ந்த 'பந்தலர்'கள் தங்கள் தலைவன் சத்ரஸால் தலைமையில் ஔரங்கசீப்பிற்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தனர். அம்முயற்சியில் வெற்றிபெற்று, தனிச் சுதந்தர 'பந்தல்கண்ட்' இராச்சியத்தை நிறுவினர்.

**ஔரங்கசீப்பும், ஷியாக்களும், சீக்கியர்களும், சூபிக்களும்:** ஔரங்கசீப் தீவிர மதப்பற்றுள்ளவராயும், வைதிகப் பற்றுள்ளவராயும் இருந்தமையால் ஷியாக்கள், சீக்கியர்கள், சூபிக்கள் ஆகியோரைப் பகைத்துக்கொண்டார். ஷியாக்களும், சூபிக்களும் முஸ்லிம்களாக இருந்தும் தம்பிரிவைச் சாராத முஸ்லிம்களானதால் அவர்களிடம் அவர் வெறுப்புக் காட்டினார். ஷியாக்களின் நௌரோஸ் என்ற வழக்கத்தையும், முகரம் பண்டிகையையும் கி.பி. 1669இல் நிறுத்திவிட்டார். இது மேலும் அவர்கள் பகைக்குத் தூபமிட்டதுபோல் ஆயிற்று. 'கோஜர்' இனத்தவரையும், சூபிக்களையும் அவர் துன்புறுத்தினார்.

அதுமட்டுமன்றி கி. பி. 1675இல் சீக்கியக் கோயில்கள் பலவற்றையும் இடித்துத்தள்ளினார். சீக்கியர்களின் ஒன்பதாவது குருவான தேஜ்பகதூர் இஸ்லாம் மதத்தைத் தழுவமறுத்ததால் கொல்லப்பட்டார். இதனால், தேஜ்பகதூரின் மகன் குரு கோவிந்சிங் சீக்கியர்களை இராணுவ அமைப்புடன் கூடிய ஒரு சமூகமாக மாற்றினார். அதன் பின்பு சீக்கியர்கள் மொகலாயர்களின் கடும் பகைவர்களாக மாறினர்.

**ஔரங்கசீப் தக்காண நாடுகளைக் கைப்பற்றுதல்:** தக்காணத்தின் முஸ்லிம் இராச்சியங்களான பீஜப்பூர், கோல்கொண்டாவையும் ஔரங்கசீப் தம் பேரரசுடன் சேர்த்துக்கொள்ள எண்ணம்

கொண்டார். இதற்கு முக்கியக் காரணம், சன்னி முஸ்லிமான் ஔரங்கசீப் ஷியா முஸ்லிம்களை வெறுத்ததேயாம். மற்றொரு

படம் 27. ஔரங்கசீப் பேரரசு

காரணம் வளர்ந்துவரும் மகாராஷ்டிரர்களையும் ஒடுக்க வேண்டும் என்ற அவரது எண்ணமேயாகும்.

**பீஜப்பூரைக் கைப்பற்றுதல்:** கி.பி. 1686இல் ஔரங்கசீப் ஒரு பெரும்படை கொண்டு பீஜப்பூரை வென்று தம் பேரரசுடன் இணைத்துக் கொண்டார். பீஜப்பூரின் சுல்தான் சிக்கந்தர் ஔரங்கசீப்பிடம் சரணடைந்து சிறையில் அடைக்கப்பட்டார். ஆகவே, பீஜப்பூர் தன் சுதந்தரத்தை இழந்தது. அடில்ஷாஹி வமிசமும் அழிந்து விட்டது.

**கோல்கொண்டாவைக் கைப்பற்றுதல்:** அடுத்து, ஔரங்கசீப் கோல்கொண்டாவைத் தாக்கினார். அவர்கள் மகாராஷ்டிரர்களுக்கு உதவி செய்ததாலும், ஷியா முஸ்லிம்களானதாலும் ஔரங்கசீப் அதன்மீது படையெடுத்து வென்றார். ஓய்வு ஊதியம் பெற்ற அதன் சுல்தான் தவுலதாபாத் சிறையிலேயே தம் வாழ்நாளைக் கழித்தார். இவ்வாறாகக் குதுப்ஷாஹி வமிசமும் முடிவுற்றது.

**ஔரங்கசீப்பும் மகாராஷ்டிரர்களும்:** வீரத்திற்கு விளைநிலமாக விளங்கிய மகாராஷ்டிரர்களை ஔரங்கசீப் ஒடுக்க எண்ணினார். மகாராஷ்டிர அரசை நிறுவிய சிவாஜி அடிக்கடி மொகலாய பகுதிகளைச் சூறையாடியும், தாக்கியும் தொல்லை கொடுத்து வந்தார். செயிஷ்டகான், ஜெய்சிங் முதலான மொகலாய தளபதிகள் சிவாஜியை அடக்க அனுப்பப்பட்டனர். ஆயினும் அவர்கள் அதில் முழு வெற்றிபெற முடியவில்லை. சிவாஜி தம் இறுதிக் காலம் வரை மொகலாயர்களுக்கு எதிராகப் போரிட்டார். கி. பி. 1689இல் மொகலாயப் படையால் சிவாஜியின் மகன் சாம்பாஜி சிறையெடுக்கப்பட்டுப் பின் கொல்லப்பட்டார். அவருடைய மகன் சாஹூ சிறையில் வைக்கப்பட்டார். எனினும், மகாராஷ்டிரர்கள் மொகலாயருக்கு அடிபணியாமல் நிமிர்ந்து நின்றனர். சாம்பாஜியின் சகோதரன் ராஜாராம் இறந்தபின் அவரது மனைவி தாராபாய் ஔரங்கசீப்பை எதிர்த்து வீரத்துடன் போராடினாள். 'சதாராவை' தலைநகராக்கிக்கொண்டு ஆண்ட அவள், ஔரங்கசீப்பிற்கு அமைதியைக் கொடுக்கவில்லை, அடிபணியவுமில்லை. எனினும், ஔரங்கசீப் மகாராஷ்டிரர்களுடன் தொடர்ந்து தம் முடிவுக் காலம்வரை (1701) பயனற்ற போர் தொடுத்தார். தக்காணம் ஔரங்கசீப்பின் நற்பெயருக்கு கல்லறையாக அமைந்தது என்றால் அது மிகையாகாது.

**ஔரங்கசீப்பின் தனிப்பட்ட குணநலன்கள்:** ஔரங்கசீப் எளிமையும், இஸ்லாம் மதத்தில் மிகத் தீவிர பற்றும், நேர்மையும் கொண்டவராவார். அவரது தனி வாழ்க்கை எவ்விதக் குறையுமின்றி இருந்தது. அவர் ஓயாது உழைப்பவர், பல குற்றங்குறை

களையும் படித்துத் தம் தீர்ப்பை நீதி தவறாது, தமது 77 வயதிலும் அளித்து வந்தார். இஸ்லாம் மதத்தில் மிகத் தீவிரமாகப் பற்றுக்கொண்டவராக இருந்தமையால், மற்ற மதத்தினரையும், மற்ற முஸ்லிம் இனத்தையுமே பகைவராகக் கருதினார். அவர் நல்ல பண்புகள் பெற்றவராக இருப்பினும், அவரை இராஜ தந்திரி எனக்கூற இயலாது.

## மொகலாயர் காலத்தில் இலக்கியம், கலை, கட்டடம் முதலியவற்றின் வளர்ச்சி

மொகலாயர்கள் காலத்தில் கல்வி முக்கியத்துவம் பெற்றது. அநேக பள்ளிகளும், நூல் நிலையங்களும் திறக்கப்பட்டு நன்கு நிர்வகிக்கப்பட்டன. ஹுமாயூன் நூல்நிலையங்கள் பல அமைத்தார். அக்பர், அரண்மனைப் பெண்டிர்க்குக் கல்வி அவசியம் என்பதனை வலியுறுத்தினார். நூர்ஜஹான், மும்தாஜ், ஜஹானரா ஆகிய பெண்கள் உயர் கல்வி பெற்றவர்களாக இருந்தனர்; மேலும் புத்தகங்கள் படித்துப் பயன் பெறுவதில் பேரார்வம் கொண்டிருந்தார்கள்.

### இலக்கியம்

மொகலாயர்களின் காலம் பாரசீக இலக்கிய வளர்ச்சியின் சிறப்புமிக்க காலம் என்றே கூறலாம். இந்து முஸ்லிம் கலாச் சாரங்கள் கலந்து விளங்கின. தத்துவ நூல்கள், சமய நூல்கள், வான சாஸ்திர நூல்கள், மருத்துவ நூல்கள் முதலியன வட மொழியிலிருந்து பாரசீக மொழிக்கு மொழிபெயர்க்கப்பட்டன. முஸ்லிம்கள் சமஸ்கிருதத்தையும் வங்காளம், இந்தி மற்றும் ஏனைய மொழிகளையும் நன்கு கற்றுத் தேர்ந்தனர். உப நிடதங்கள், பகவத் கீதை, மகாபாரதம், இராமாயணம் முதலியன பாரசீக மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. அபுல் பெய்சி என்பவர் கணிதநூலான லீலாவதி என்னும் நூலை பாரசீக மொழியில் மொழிபெயர்த்து எழுதினார். அப்துல் அகமத் லாகூரி 'பாதுஷா நாமா' என்ற நூலைப் பாரசீக மொழியில் எழுதினார். அக்பர் இந்தி இலக்கியத்திற்கும் பெரு ஊக்கம் அளித்தார். அவருடைய சபையில் பீர்பால், ராஜா மான்சிங் முதலிய புகழ் பெற்ற அவையோர் பலர் இருந்தனர். துளசிதாஸ் என்பவர் இந்தியில் 'ராமசரித மானஸ்' என்ற நூலை இயற்றினார். சூர்தாஸ் என்ற புகழ்பெற்ற கவிஞரும் அக்பர் காலத்தில் வாழ்ந்திருந்தார். அபுல் பாசல் என்ற பாரசீக கவிஞர் 'அயினி அக்பரி', 'அக்பர் நாமா' என்ற இலக்கியங்களைப் படைத்தார். 'அயினி அக்பரி' அக்பரின் ஆட்சிமுறை பற்றியும், அக்பர் நாமா அவரது வாழ்க்கையைப் பற்றியும் விளக்குகின்றன.

**கலையும் கட்டடங்களும்**

ஔரங்கசீப்பைத் தவிர மற்ற மொகலாயப் பேரரசர்கள் அனைவரும், கலையிலும் கட்டடக்கலையிலும் பேரார்வமும் ஊக்கமும் உள்ளவர்கள். மொகலாயர்கள் காலத்தில் பாரசீகக் கட்டடக் கலையும், இந்திய கலையும் இணைந்து விளங்கின. இந்து, ஜைன கோயில்களைப் போல் சதுரமான தூண்களும், வளைவுக் கட்டடங்களும் வரிசை வரிசையாகக் கட்டப்பட்டன. மொகலாயர்கள் காலத்தில் கட்டடக்கலையும் ஓவியக்கலையும் மிக உன்னத நிலையில் விளங்கின. அக்பரால் டில்லியில் ஹுமாயூனுக்காக ஓர் அழகிய கல்லறைக் கட்டடம் கட்டப் பட்டது. அக்பரால் கட்டப்பட்ட அழகிய சிறப்பு வாய்ந்த கட்டடங்கள் பதேபூர் சிக்ரியிலும், ஆக்ரா கோட்டையிலும் உள்ளன. புலந்தர்வாஸா அல்லது வெற்றி வளைவு, சிக்கந்தராவில் அக்பரின் கல்லறைக் கட்டடம் முதலிய அழகிய கட்டடங்கள் அக்பராலேயே திட்டமிட்டுக் கட்டப்பட்டன.

ஜஹாங்கீர் காலத்தில் கட்டப்பட்ட கட்டடங்களில் குறிப் பிடத்தக்கது இத்மத் உத்-தௌலாவிற்கு ஆக்ராவில் அவர் மகள் நூர்ஜஹானால் கட்டப்பட்ட கல்லறைக் கட்டடமாகும்.

ஷாஜஹான் கட்டடக்கலைக்காகக் கோடிக்கணக்கில் பணம் செலவழித்தார். டில்லியில் செங்கோட்டையில் உள்ள திவானி ஆம், திவானிகாஸ் என்ற மிக அழகிய கட்டடங்கள் மொகலாயக் கட்டடக்கலையின் உன்னதச் சிறப்பினையும் மேன்மையையும் எடுத்துக் காட்டுகின்றன. ஆக்ராவில் கட்டப்பட்ட மோதி மஸ்ஜித் அல்லது முத்து மசூதி மிக நேர்த்தியான அழகிய கட்டட மாகும். உலக அதிசயங்களுள் ஒன்றான தாஜ்மகால் கட்டடம், ஷாஜஹான் தன் அன்பு மனைவி மும்தாஜின் நினைவாக ஆக்ராவில் யமுனை நதிக்கரையில் கட்டிய மிகச் சிறப்பு வாய்ந்த கட்டடமாகும். இதில் பாரசீக, இந்திய மேற்கத்திய நாடுகளின் கட்டடக்கலை அம்சங்கள் கலந்து காணப்படுகின்றன. இக்கட்டடம் கட்டி முடிக்க 22 ஆண்டுகள் ஆயின. 20,000 வேலையாள்களும் தொழில் நிபுணர்களும் சேர்ந்து மூன்று கோடி ரூபாய் செலவில் இக்கட்டடத்தைக் கட்டி முடித்தனர். ஜும்மா மசூதி ஷாஜஹானால் டில்லியில் கட்டப்பட்டது. இதுவே இந்தியாவில் உள்ள மசூதிகளில் மிகப்பெரியது ஆகும்.

நுண்கலைகளான ஓவியமும், இசையும் மொகலாயர் காலத்தில் மிகச் சிறப்பிடமும், முன்னேற்றமும் பெற்றிருந்தன. ஹுமாயூன் சிறந்த ஓவியக்கலைப் பிரியர். ஆகவே, பாரசீக

ஓவியர்கள் பலர் அவரது அவையில் போற்றப்பட்டனர். அக்பரும் பாரசீக ஓவியர்கள் பலரை ஊக்குவித்தார்.

ஜஹாங்கீர் ஓவியக்கலைப்பிரியர். அவர் காலத்தில் ஓவியக் கலை மிக உன்னத நிலையில் விளங்கியது. ஆனால் ஷாஜஹான் காலத்தில் அவர் கட்டடக் கலைக்கு அதிகம் முக்கியத்துவம் கொடுத்தமையால் ஓவியக்கலை சிறிது மங்கி இருந்தது எனலாம்.

பாபர் காலத்திலிருந்து ஷாஜஹான் காலம் வரை மொகலாயப் பேரரசர்கள் இசைக்கலையை வளர்த்தனர். தான்சேன் என்ற உலகப்புகழ் பெற்ற பாடகர் அக்பர் சபையை அலங்கரித்தார்.

**மொகலாயர் காலத்தில் சமூக நிலைமை**

அரசரே சமூகத்தின் தலைவர். அரசருக்கு அடுத்தபடியாக அதிகாரிகளும் பிரபுக்களும் சிறப்பு உரிமைகளும் அதிகாரங்களும் பெற்றிருந்தனர். பேரரசர்களும் பிரபுக்களும் செல்வச் சுகபோகங்களில் திளைத்திருந்தனர். விளையாட்டுகளிலும் களியாட்டங்களிலும் ஈடுபட்டிருந்தனர். ஆனால், ஔரங்கசீப்பின் காலத்தில் பிரபுக்கள் தங்கள் ஆதிக்கத்தையும் அதிகாரத்தையும் அறவே இழந்தனர்.

சமூக அமைப்பு, ஐரோப்பிய நாட்டின் 'பிரபுத்துவ முறை' அடிப்படையில் அமைந்திருந்தது. பிரபுக்களுக்கு அடுத்து, மத்திய தரவணிகர்களும், அதிகாரிகளும் முக்கியத்துவம் வாய்ந்தவர்கள். அவர்கள் தங்கள் உடல் நலத்திற்கும், உத்தியோகத்திற்கும் ஏற்ப சிக்கனமாக வாழ்ந்தார்கள்.

**சாதாரண மக்களின் வாழ்க்கை நிலை**

இந்துக்களும் முஸ்லிம்களும் மிக எளிமையாக வாழ்ந்தார்கள். இஸ்லாம் மதம் இந்து மதத்தின் மீது செல்வாக்குப் பெற்றது. கபீரும் நானக்கும் இஸ்லாம் மதக் கோட்பாடுகளினால் பெரிதும் கவரப்பட்டனர்.

பருத்தித்துணி உற்பத்தித் தொழில் மிக முக்கியத்துவம் பெற்றிருந்தது. பருத்தித்துணி உற்பத்தியில் குவாலியர், மசூலிப் பட்டினம், சூரத், பெனாரஸ் முதலிய இடங்கள் மிகப் புகழ் பெற்ற இடங்களாகும். காஷ்மீர் கம்பளம், விரிப்பு முதலியனவும் உற்பத்தி செய்யப்பட்டன. கப்பல் கட்டும் தொழிலும் நடைபெற்றது. கட்ச், காம்பே, வங்காளம் முதலியன கப்பல் கட்டும் தொழிலிடங்களாகும். உள்நாட்டு வெளிநாட்டு வியாபாரம்

பெருகியது. உள்நாட்டு வாணிபம் வளர சாலைகள் பெரிதும் உதவின. வெளிநாட்டு வாணிபம் சூரத், காம்பே, சிட்டகாங் முதலிய துறைமுகங்கள் மூலம் நடைபெற்றன.

சாதாரண மக்களின் வாழ்க்கைத்தரம் தாழ்ந்த நிலையிலேயே இருந்தது. அவர்களுக்கு மிகக் குறைந்த கூலியே கொடுக்கப்பட்டது. எளிய வீடுகளில் வசித்தனர். அதிகாரிகளால் மிகவும் துன்புறுத்தப்பட்டனர். விவசாயிகளும் ஷாஜஹான் காலத்திலிருந்து மிகவும் துன்புறுத்தப்பட்டனர். சமுதாயத்தில் மேல்படியைச் சார்ந்தவர்கள் உல்லாசத்தில் வாழும்போது கீழ்ப்படியைச் சார்ந்தவர்களின் வாழ்க்கை சீர்கேடுற்றுத் துன்பத்தில் உழலுவதாகவும் இன்னல் நிறைந்ததாகவும் இருந்தது.

## மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணங்கள்

மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணங்கள் பல உண்டு. அவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன. மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கு ஔரங்கசீப் கடைபிடித்த அரசியல் சமயக் கொள்கைகள் காரணங்களாகும்.

1. முதலாவதாக மொகலாயப் பேரரசு மிகப் பெரியதாக இருந்தமையால் அதை நன்றாக நிர்வகிப்பது கடினமாய் இருந்தது.

2. அரசுரிமைப் போர்கள் அவ்வப்போது நிகழ்ந்தன. இப்போர்கள் நாட்டை மேலும் பலவீனப்படுத்தியது எனலாம்.

3. மொகலாயப் பேரரசர்கள் ஆடம்பரமாகவும் அளவு மீறிய செலவாளிகளாகவும் வாழ்ந்தமையால் இறுதியில் ஆட்சி மிகப் பலவீனமடைந்தது.

4. ஔரங்கசீப்பின் மதக்கொள்கை இந்து, சீக்கிய இனத்தவர்களின் பகையைப் பெருக்கியது. இது மொகலாயர்களின் வீழ்ச்சிக்கு ஒரு முக்கியமான காரணமாகும்.

5. ஷாஜஹான், ஔரங்கசீப் ஆகிய மொகலாயப் பேரரசர்கள் தக்காணத்தின்மீது தாக்குதல் செய்வதற்குப் பெரும் செலவு செய்தனர். ஆகவே, கருவூலமே காலியாகும்நிலை ஏற்பட்டது.

6. ஔரங்கசீப் தக்காணத்தின்மீது தொடர்ந்து போர் தொடுத்துக்கொண்டிருந்தமையால் அது நாட்டின் நிர்வாகத்தினைப் பெரிதும் பாதித்தது.

7. மகாராஷ்டிரர்களின் எழுச்சியும் முன்னேற்றமும் மொகலாயப் பேரரசிற்கு ஒரு பேரிடியாக இருந்தது எனலாம்.

8. ஔரங்கசீப்பிற்குப் பின்புவந்த அரசர்கள் திறமை யற்றவர்களாகவும் இருந்ததனால் வலிமைகுன்றிய நாட்டை மீண்டும் நிமிர்த்த முடியவில்லை.

9. இறுதியாகக் கி. பி. 1739இல் பாரசீகப் பேரரசன் நாதிர்ஷா படையெடுப்பும் மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணமாய் அமைந்தது.

## பயிற்சி

I. ஒவ்வொரு வினாவிற்கும் ஐந்து அல்லது ஆறு வரிகளுக்கு மிகாமல் பதிலளிக்கவும்:

1. பாபர் மொகலாயப் பேரரசை நிறுவ நடத்திய மூன்று முக்கியப் போர்கள் யாவை?
2. கி. பி. 1540இல் நடந்த 'சௌஸா' போரின் முக்கியத் துவம் என்ன?
3. ஷெர்ஷா, நீதிநெறி தவறாமல் ஆண்டார் என்பதனை விளக்கு.
4. 'தீன் இலாஹி' யைப் பற்றி சிறு குறிப்பு வரைக.
5. 'மன்சப்தாரி' முறை என்றால் என்ன?
6. ஜஹாங்கீர் காலத்தில் ஆங்கிலேயர்கள் எவ்வாறு போர்த்துக்கீசியப் போட்டியைவென்று வியாபாரத்தைப் பெருக்கினர்?
7. ஷாஜஹான் சிறந்த கட்டடக்கலைப் பிரியர் என்பதற்கு மூன்று உதாரணங்கள் கொடு.
8. ஔரங்கசீப்பின் தக்காண இயல்முறையை விளக்கு.
9. மொகலாயர்கள் காலத்திய சிறந்த எழுத்தாளர்கள் கல்விமான்கள் ஆகியோரின் பெயர்களைக் கூறவும்.

II. கீழே கொடுக்கப்பட்டுள்ள கோடிட்ட இடங்களைத் தகுந்த வார்த்தையால் பூர்த்தி செய்யவும்:

1. முதலாம் பானிபட்டு யுத்தம் ——— ஆம் ஆண்டு ———, ——— இடையே ஏற்பட்டது.
2. அக்பரை மிகத் தைரியமாக எதிர்த்த இராசபுத்திர இளவரசன் ———.

3. நிலவரித் திட்டம் அக்பர் காலத்தில் ——— என்பவரால் நன்கு நிர்வகிக்கப்பட்டது.

4. தாஜ்மகால் ——— என்னுமிடத்தில் ——— என்பவரால் ——— நினைவாகக் கட்டப்பட்டது.

5. ஔரங்கசீப்பால் அழிக்கப்பட்ட இரண்டு தக்காண இராச்சியங்கள் ———, ———.

6. அக்பர் காலத்திய புகழ்ப் பெற்ற பாடகரின் பெயர் ——— என்பதாகும்.

7. அக்பர் காலத்தில் லீலாவதி என்ற ——— நூல் ——— மொழியிலிருந்து ——— மொழிக்கு மொழிபெயர்க்கப் பட்டது.

III. கீழே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்களுக்குக் கொடுக்கப் பட்டுள்ள வார்த்தைகளில் தகுந்த விடைகளைத் தேர்ந் தெடுத்து எழுது:

1. மொகலாயப் பேரரசை இந்தியாவில் உறுதியாக நிலை நாட்டியவர்.

   (அ) பாபர் ( )
   (ஆ) ஹுமாயூன்
   (இ) அக்பர்
   (ஈ) ஔரங்கசீப்

2. அக்பரைத் தைரியமாக எதிர்த்த தக்காண ராணி.

   (அ) இராணி துர்க்காவதி ( )
   (ஆ) இராணி சாந்த் பீபி
   (இ) இராணி பத்மினி
   (ஈ) இராணி தாராபாய்

3. மயிலாசனத்தைக் கட்டியவர்.

   (அ) அக்பர் ( )
   (ஆ) ஔரங்கசீப்
   (இ) ஜஹாங்கீர்
   (ஈ) ஷாஜஹான்

4. ஔரங்கசீப்பின் காலத்தில் மதமாற்றத்தைவிட சாவதே மேல் என்று எண்ணிய சீக்கிய குரு.

   (அ) குருநானக் ( )
   (ஆ) குரு அர்ஜுன்
   (இ) குரு தேஜ் பகதூர்
   (ஈ) குரு கோவிந்சிங்

5. அயினி அக்பரியை எழுதியவர்.

(அ) தாராஷுகோ ( )
(ஆ) அபுல்பாசல்
(இ) அபுல் பெய்சி
(ஈ) அப்துல் ஹமீத் லாஹோரி

6. செங்கோட்டை உள்ள இடம்.

(அ) டில்லி ( )
(ஆ) ஆக்ரா
(இ) கல்கத்தா
(ஈ) ஜான்பூர்

IV. கீழ்க்கண்ட வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் பதினைந்து வரிகளுக்கு மிகாமல் விடையளி:

1. பாபர் எவ்வாறு மொகலாயப் பேரரசை இந்தியாவில் நிறுவினார்?
2. ஷெர்ஷாவின் ஆட்சி முறையை விளக்கு.
3. அக்பர் ஒரு தேசியப் பேரரசர் என்பதனை விளக்கு.
4. அக்பரின் ஆட்சியில் நிலவிய நிர்வாக முறையை விவரி.
5. மொகலாயப்பேரரசு வீழ்வதற்குக் காரணங்கள் யாவை?
6. மொகலாயர்கள் காலத்தில் கலை கட்டட வளர்ச்சியைப் பற்றி விளக்கு.
7. மொகலாயர்கள் காலத்தில் மக்கள் வாழ்க்கை எவ்வாறு இருந்தது என்பதனை விவரி.

## செய்முறைப் பயிற்சி

இந்திய வரைபடம் வரைந்து அதில் அக்பரின் ஆட்சியில் பரவியிருந்த எல்லைகளைக் குறிப்பிடுக. அதில் கீழ்க்கண்ட இடங்களைக் குறி.

1. பானிபட்டு 2. அகமது நகர் 3. டில்லி 4. ஆக்ரா
5. கோண்ட்வானா 6. முல்தான் 7. லாகூர்

இந்திய வரைபடம் வரைந்து ஔரங்கசீப் ஆட்சி பரவியிருந்த எல்லைகளைக் குறி. அதில் கீழ்க்கண்ட இடங்களையும் குறி.

1. உதயபூர் 2. பீஜப்பூர் 3. கோல்கொண்டா
4. ஆஜ்மீர் 5. பெஷாவர் 6. காபூல்

# 14. இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சியினால் ஏற்பட்ட விளைவுகள்

## அறிமுகம்

18ஆம் நூற்றாண்டில் மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் பல அரசுகள்தோன்றி, அடிக்கடி தம்முள் சண்டை யிட்டுக் கொண்டிருந்தன. வலிமையுள்ள ஒரு நடுவண் அரசு இல்லாததால் அப்போது இந்தியாவில் அரசியல் ஐக்கியம் அல்லது ஒருமைப்பாடு இல்லை. மராத்தியர்களும், சீக்கியர் களும், இராசபுத்திரர்களும், முஸ்லிம்களும் ஒரு பொதுவான இலட்சியத்திற்காக உழைக்கவில்லை. நாட்டின் நன்மையில் தங்கள் சொந்த நன்மையை இணைக்கவில்லை. எனவே பிரிவு பட்டு நின்ற இந்தியாவை வென்று, ஆங்கிலேயரும் தங்கள் சொந்த நன்மைக்காகவே ஆட்சிபுரிந்தனர். ஆங்கிலேயருடைய நீண்டகால ஆட்சி, இந்தியாவின் வாழ்க்கையைப் பல துறைகளில் பாதித்தது. அவற்றை ஒன்றன்பின் ஒன்றாக இப்பாடத்தில் காண்போம்.

## அரசியல் விளைவுகள்

ஆங்கில ஆட்சியின் பயனாக ஏற்பட்ட ஒரு நல்ல விளைவு, இதற்குமுன் வரலாற்றில் கண்டிராதபடி, அரசியல் ஐக்கியம் அல்லது ஒரே ஆட்சி ஏற்பட்டது. மக்கள் தாங்கள் இந்தியர்கள் என்ற உணர்வைப் பெற்றார்கள். தங்கள் நாட்டை தாங்களே ஆளவேண்டும் என்னும் உள்ளுணர்வையும் அடைந்தார்கள். இவ்வுணர்வின் காரணமாக இந்திய தேசிய காங்கிரசு மகாசபை அமைக்கப்பட்டது. முஸ்லிம் லீக் அமைப்புத் தோன்றியது. பிற அரசியல் கட்சிகளும் உருவாக்கப்பட்டன. படித்த இந்தியர்கள் ஆங்கில இலக்கியத்தையும், ஐரோப்பிய வரலாற்றில் பிரஞ்சுப் புரட்சியையும், இத்தாலியின் ஐக்கியத்தையும், அமெரிக்க சுதந்தரத்தையும் கற்றதனால் தேசிய உணர்வையும், ஜனநாயகத் திற்காகப் போராடும் மனப்பாங்கையும் பெற்றனர். மேனாட்டு ஆசிரியர்களான ஜே. எஸ். மில், பென்தாம், ரூசோ முதலியவர் களுடைய மனித உரிமைகள், சுதந்தரம் பற்றிய கருத்துகள், படித்த இந்தியர்களிடையே செல்வாக்குப் பெற்றன.

ஆங்கில மொழியும், நாடு முழுவதற்கும் பொதுவான ஆட்சி முறையும் வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய எத்திக்கிலும் உள்ள மக்களை ஒன்றாக இணைத்தன. கி.பி. 1883ஆம் ஆண்டு ஓய்வுபெற்ற ஒரு பிரிடிஷ் சிவில் அதிகாரி கல்கத்தா பல்கலைக் கழகத்தில் பட்டதாரிகளுக்கு ஒரு மடல் விடுத்தார். அக் கடிதத்தில் அவர்கள் தாய்நாட்டின் அறிவு, ஒழுக்கம், நீதி, சமுக, அரசியல் முன்னேற்றத்திற்காக உழைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவருடைய ஆர்வமிக்க முயற்சிகளால், இந்திய தேசியக் காங்கிரசு அமைக்கப்பட்டு அதன் முதற் கூட்டம் கி.பி. 1885ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் பம்பாயில் நடைபெற்றது. பேரும் புகழும் படைத்த வங்காள வழக்கறிஞர் திரு. டபிள்யூ. சி. பானர்ஜி அக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார். ஆரம்பத்தில் பல நிர்வாகச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டியதே காங்கிரசு சபையின் குறிக்கோளாய் இருந்தது. பின்னர், பிரிட்டிஷ் பேரரசிற்கு உட்பட்ட சுய ஆட்சியையும் இறுதியில் ஒவ்வோர் இந்தியனின் பிறப்புரிமையான பூர்ண சுயராஜ்யத்தையும் தன் குறிக்கோளாகக் காங்கிரசு சபை மாற்றிக்கொண்டது. இக் குறிக்கோள் மாற்றம் இந்தியா பிரிட்டிஷ் ஆட்சியினின்றும் விடுதலைபெற்றுச் சுதந்தர நாடாக மலர வழிவகுத்தது. இவ்வாறு ஆங்கிலக் கல்வி மக்களிடையே விடுதலை, மக்களாட்சி போன்ற கருத்துகளைப் பரப்பியது.

### பொருளாதார விளைவுகள்

ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனி, இங்கிலாந்து நாட்டின் தொழில்கள் வளருவதற்குச் சாதகமாக நம்நாட்டுத் தொழில்களை நசிக்கச் செய்தது. இந்திய சந்தையில் இயந்திரங்களால் செய்யப்பட்ட விலை மலிந்த புதிய பொருள்களைக் கொணர்ந்து கொட்டியது. அந்நியப் பொருள்களின் குவிப்பினால், நம்நாட்டுத் தொழில்கள் மிகவும் பாதிக்கப்பட்டன. மேலும் முன்னர் நம்நாட்டுத் தொழில்களை ஆதரித்த அரசர்கள் இன்மையால், இந்திய தொழில்கள் வீழ்ச்சியடையத் தொடங்கின. பிரிட்டிஷ் ஆட்சியினால் இந்திய பொருளாதாரத்தில் ஏற்பட்ட மற்றொரு தீயவிளைவு நம்நாட்டுச் செல்வம் அயல் நாட்டுக்குச் சென்றதேயாகும். இதை சுமை அல்லது நீக்கம் (drain) என்கிறோம். கிழக்கிந்திய கம்பெனியின் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்ட சம்பளமும் கம்பெனியின் இலாபமும், நம்நாட்டுச் செல்வத்தைக் குறைத்துவிட்டன. இதனை 'சேவை அல்ல' 'வியாபாரம்' என்று சொல்வதைவிட 'சுரண்டல்' எனக் குறிப்பிடுவது பொருந்தும். வியாபார ஒப்பந்தங்கள், பரிசுகள் என்ற போர்வையில், தனிப்பட்ட பிரிட்டிஷ்காரர்கள் நம் நாட்டில் அடித்த கொள்ளை

இந்திய மக்கள் மனத்தில் தாங்கள் பிரிட்டிஷாரால் சுரண்டப் படுகிறோம் என்ற விழிப்பை ஏற்படுத்தியது. இவ்விழிப்புணர்ச்சி யின் காரணமாகச் சுதேசி இயக்கம்' தோன்றி குறிப்பாகப் பருத்தி போன்ற இந்திய தொழில்கள் தோன்றுவதற்கு வித்திட்டன.

## சமூக வாழ்வில் விளைவுகள்

பிரிட்டிஷ் ஆட்சியின் காரணமாக நம்நாட்டின் சமுதாய அமைப்பு முறையும் விரைவாக மாறலாயிற்று. சமூக சீர்திருத்த வாதிகள் உடன்கட்டை ஏறுதல், பெண் குழந்தைகளைக் கொல்லல், பலதாரமணம், குழந்தை மணம் முதலியவற்றிற்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தினர். கிறித்துவப்பாதிரிமார் களின் சமயப்பரப்புச் செயல்பாடுகளும், இந்துக்களின் விழிப் புணர்வைத் தூண்டி, இத்தீமைகளை அகற்ற முயற்சிகள் செய்ய வைத்தன. விதவைகள் மறுமணம், பெண்கள் நிலையை உயர்த்தும் நோக்கம்கொண்ட சமூக சீர்திருத்தமாக அமைந்தது.

வங்கத்தில் பண்டித ஈசுவரசந்திர வித்தியாசாகரும், இராஜா ராம்மோகன்ராயும் சமூக சீர்திருத்தத் துறையில் அரும் பணியாற்றினர். இராஜாராம் மோகன்ராய் பிரம்ம சமாஜம் என்ற அமைப்பை நிறுவினார். விதவைகள் மறுமணத்தை ஆத ரித்தார். மகாராஷ்டிரத்தில் நீதிபதி ரானடே, விதவைகள் மறுமணத்தின் சிறந்த ஆதரவா ளராகத் திகழ்ந்தார். கார்வே என்னும் சமூக சீர்திருத்தவாதி, கி. பி. 1893இல் தானே ஒரு விதவையை மணந்தார். சில ஆண்டுகளுக்குப் பின்னர் புனே யில் 'விதவைகள் இல்லம்' என்ற அமைப்பைத் தொடங்கினார். இதுதான் பின்னர் மகளிர் பல் கலைக் கழகமாக மலர்ந்தது. கேசவ சந்திரசென் என்பவரு டைய செல்வாக்கால் மகாராஷ்டிரத்தில் தொடங்கப்பட்ட பிரார்த்தனை சமாஜம் மற்றொரு சமூக சீர்திருத்த சேவை நிறு வனமாகும். அடிமைமுறை சட்டபூர்வமாக ஒழிக்கப்பட்டது. ஹார்டிங் பிரபு வைஸ்ராயாக இருந்தபோது கடவுளுக்கு நரபலி



படம் 28.
இராஜா ராம்மோகன்ராய்

கொடுப்பது சட்டபூர்வமாக நீக்கப்பட்டது. பெண் கல்விக்கு ஊக்கம் அளிக்கப்பட்டது. பர்தாமுறை கடைப்பிடிப்பதில் கண்டிப்புச் சிறிது தளர்ந்தது. அந்நிய நாட்டுப் பயணமும், ஆங்கிலப் படிப்பும் மக்களின் மனப்பான்மையைப் பரந்ததாக ஆக்கியதோடு, எண்ணச் சுதந்தரத்தின் மதிப்பையும் உணரச் செய்தன.

அச்சுக்கலை ஒரு புரட்சிகரமான மாற்றத்தை ஏற்படுத்தியது. நிறைந்த புத்தகங்கள் அச்சடிக்கப்பட்டு முன்னைவிட அதிக மக்களால் படிக்கப்பட்டன. 19ஆம் நூற்றாண்டு, வங்காள இலக்கியத்தின் எழுச்சியையும் வளர்ச்சியையும் கண்டது. அக்ஷயகுமார் தத்தா, ஈஸ்வரசந்திர வித்யாசாகர், இராஜா ராம்மோகன்ராய் முதலானோர் மிகச்சிறந்த வங்காளி எழுத்தாளர்கள். பங்கிம் சந்திர சட்டர்ஜி என்பவர் வரலாறு புதினம் சமயம் முதலியவற்றைப்பற்றி எழுதினார். அவருடைய புகழ் பெற்ற பாடல் வந்தே மாதரம் இன்றும் உணர்ச்சி மிகுந்து நம் உள்ளத்தைத் தொட்டு வேற்றுமையில் ஒற்றுமை என்ற நம் பாரதப் பாரம்பரியத்தை நமக்குச் சுட்டிக்காட்டுகிறது. நவீன இலக்கியங்கள் பிற இந்திய மொழிகளிலும் தோன்றலாயின. நவீன காலத்தின் தலைசிறந்த வங்காள கவிஞர் இரவீந்திரநாத் தாகூர் ஆவார். நம் தேசியப் பாடலான 'ஜன கணமன' என்ற பாடலை இயற்றியவர் அவரே.

சுவாமி தயானந்த சரஸ்வதியால் நிறுவப்பட்ட ஆரிய சமாஜம் பழங்கால வேதங்களின் அடிப்படையிலும் இந்தியாவின் பழங்கால மேன்மைக் கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது. ராமகிருஷ்ணர் மடம் ஏற்பட துடிப்புமிக்க செயல் வீரரான சுவாமி விவேகானந்தர் காரணமாயிருந்தார். ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் பல சமய சமூக சீர்திருத்தங்களுக்கு எடுத்துக்காட்டாய் இலங்குகிறது. இவ்வமைப்பும் இந்தியாவின் பண்டைக்கலாசாரத்தினின்றும் தன் ஊக்கத்தையும் கருத்துகளையும் பெற்றுச் செயல்படுகிறது. இதனை 'மறுமலர்ச்சி' என்கிறோம். இவ்வமைப்புகளெல்லாம் மேனாட்டுக் கல்வியாலும் சிந்தனையாலும் ஏற்பட்ட நல்ல விளைவுகளேயாம்.

இவ்வாறு இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி பல புதிய செயல்பாடுகளுக்கு மிக்க ஊக்கமளித்தது. இந்தியர்கள் மேனாட்டுத் தத்துவங்களையும் அறிவியல்களையும் கற்றுப் புரிந்துகொள்ளத் தொடங்கினார்கள். அவர்களது வாழ்க்கைநோக்குப் பகுத்

தறிவின் அடிப்படையிலும் மனப்பாங்கு பரந்து விரிந்ததாகவும் ஆகியது. பல்கலைக் கழகங்களில் ஆங்கில மொழிவழிக் கல்வி இந்திய மக்களிடையே மேனாட்டுக் கருத்துகளையும், சிந்தனைகளையும் பரப்பியது. விஞ்ஞான அறிவு மிகப் பழைய நம்பிக்கைகளைத் தகர்த்தது. இந்திய மக்களின் மனதில் ஒரு கூர்ந்துபார்க்கும் புதிய பாங்கினை ஏற்படுத்தியது. புதிய சிந்தனைகளின் முன்னே பழைய சமூக முறைகள் முறியத் தொடங்கின. சாதிக் கட்டுப்பாடு பழைய கடுமையை இழந்தது. மகளிர் விடுதலை எங்கும் பரவலாக ஆதரிக்கப்பட்டது.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஐந்து அல்லது ஆறு வரிகளில் விடை தருக:

1. இந்தியர்கள் ஐரோப்பிய வரலாற்றையும் இலக்கியத்தையும் கற்றது இந்திய மக்களின் அரசியல் வாழ்வில் எவ்விளைவுகளை ஏற்படுத்தியது?
2. இந்திய தேசியக் காங்கிரசு நடத்திய சுதந்தரப் போராட்டத்தின் மூன்று நிலைகள் யாவை?
3. எவ்வாறு ஆங்கில ஆட்சி இந்தியத் தொழில்களைப் பாதித்தது?
4. சுதேசி இயக்கம் ஏன் தொடங்கப்பட்டது?

II. பின்வரும் வாக்கியங்களிலுள்ள கோடிட்ட இடங்களைத் தகுந்த விடை கொண்டு நிரப்புக:

1. இந்திய தேசியக் காங்கிரசு ———— ஆம் ஆண்டு ———— என்பவரால் தொடங்கப்பட்டது.
2. புனேயில் விதவைகள் இல்லத்தைத் தொடங்கிய மகாராட்டிரர் ————.
3. நரபலியைத் தடைசெய்த வைஸ்ராய் ———— ஆவார்.
4. பங்கிம் சந்திர் சட்டர்ஜியின் புகழ் வாய்ந்த பாடல் ————.
5. நம் தேசிய கீதம் ————. அதனை எழுதியவர் ————.

**III. கொடுக்கப்பட்ட நான்கு மாற்று விடைகளுள் சரியான ஒன்றைத் தேர்ந்தெடுத்தெழுதுக :**

1. இந்திய தேசியக் காங்கிரசின் முதல் கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர்.

   (அ) ஏ. ஓ. ஹ்யூம் ( )
   (ஆ) டபுள்யூ. சி. பானர்ஜி
   (இ) மகாத்மா காந்தி
   (ஈ) மோதிலால் நேரு

2. பிரார்த்தனா சமாஜ் பின்வருபவரின் செல்வாக்கால் தொடங்கப்பெற்றது.

   (அ) இராஜா ராம்மோகன்ராய் ( )
   (ஆ) நீதிபதி ரானடே
   (இ) கேசவ சந்திர சென்
   (ஈ) ஈஸ்வர சந்திர வித்யாசாகர்

3. தற்கால இந்தியாவின் மிகச் சிறந்த வங்கக் கவிஞராகத் திகழ்ந்தவர்.

   (அ) டோரு டட் ( )
   (ஆ) சரோஜினி நாயுடு
   (இ) இரவீந்தரநாத் தாகூர்
   (ஈ) சுப்பிரமணிய பாரதி

**IV. பின்வரும் ஒவ்வொரு வினாவிற்கும் 15 வரிகளில் விடை அளிக்கவும் :**

1. ஆங்கில ஆட்சி, இந்திய மக்களின் சமூக வாழ்வில் ஏற்படுத்திய விளைவுகளை விரித்தெழுதுக.
2. ஆங்கில ஆட்சி எவ்வாறு இந்திய மக்களிடையே அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தியது என்பதனை விளக்குக.

# 15. இந்தியாவில் சமூகச் சீர்திருத்த இயக்கம்

## அறிமுகம்

ஆங்கில ஆட்சியினால் ஏற்பட்ட நன்மைகளில் ஒன்று நம் நாட்டு அரசியல் ஒற்றுமை ஒன்றானதே ஆகும். இதன் காரணமாகச் சமூகச் சீர்திருத்தத்திற்கு ஒருங்கிணைந்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இராஜா ராம்மோகன்ராய், நீதிபதி ரானடே முதலியவர்களின் சேவைகளைப்பற்றியும், பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், இராமகிருஷ்ண மிஷன் முதலிய நிறுவனங்களின் சேவைகளைப்பற்றியும் முன்பே கண்டோம். இப்போது, 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இந்தியாவில் சமூகச் சீர்திருத்தத் துறையில் ஏற்பட்ட விரைவான முன்னேற்றத்தைப்பற்றிப் படிப்போம்.

இந்தக் காலத்தில் சமூகச் சீர்திருத்தவாதிகளின் கவனம் சமூகத்தில் பெண்கள் விடுதலை, தாழ்த்தப்பட்ட பின்னடைந்த மக்களின் நிலை, பாமர மக்களுக்குக் கல்வியறிவித்தல், மதுவிலக்கினைப் புகுத்தல் முதலியவற்றில் சென்றது. இவைகளில் ஈடுபட்ட சமூகச் சீர்திருத்தவாதிகளின் பட்டியலில் ஒரு சிலர் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளனர். பொதுமக்களின் உறங்கும் மனசாட்சியை எழுப்பி, சமூகத்தின் மாற்றம் விரும்பா பழமைவாதிகளின் கடுமையான எதிர்ப்புக்கு எதிராகத் திரட்டவும் அவர்கள் கடுமையாக வேலை செய்யவேண்டியிருந்தது. இத்தகைய சமூகச் சீர்திருத்தவாதிகளில் முதலிடம் வகிப்பவர், மகாத்மா காந்தி ஆவார்.

## மகாத்மா காந்தி (கி. பி. 1869–1948)

1869ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2ஆம் தேதி, குஜராத் மாநிலத்தில் போர்பந்தர் என்னும் ஊரில் காந்திஜி பிறந்தார். அவரது பெற்றோர்கள் அவருக்கிட்ட பெயர் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி ஆகும். தனது 13ஆம் வயதில் அவர் கஸ்தூரிபாயை மணந்தார்.

பிறகு காந்தி சட்டப் படிப்பிற்காக இங்கிலாந்து சென்றார். மூன்று ஆண்டுகட்குப் பின்னர் வக்கீல் தொழிலை நடத்த

இந்தியாவிற்குத் திரும்பினார். ஒரு வர்த்தகக் கம்பெனியின் சார்பாக அவர் தென் ஆப்பிரிக்காவிற்குச் செல்லவேண்டிவந்தது. அப்போது அங்கே வெள்ளையரின் சிறுபான்மை அரசாங்கம் இந்தியர்களுக்கு இழைக்கும் அநீதிகளை நேரில் கண்டார். எனவே, தென் ஆப்பிரிக்காவிலேயே 21 ஆண்டுகள் இந்தியர்களின் உரிமைக்காகப் போராடிக்கொண்டு தங்கிவிட்டார்.



படம் 29. மகாத்மா காந்தி

பின்னர், கி. பி. 1915ஆம் ஆண்டு காந்தியடிகள் இந்தியாவிற்குத் திரும்பி இந்திய தேசியக் காங்கிரசின் தலைவரானார்.

தன்னுடைய நீண்டநாள் பொதுவாழ்வில், காந்திஜி அநேக சமூகத் தீமைகளையகற்ற ஆர்வத்தோடு போராடினார்.

அத்தகைய சமூகத் தீமைகளில் மிக முக்கியமானது தீண்டாமையே. 'எல்லோரும் ஆண்டவனின் குழந்தைகளே. எனவே பிறப்பின் அடிப்படையில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் வேற்றுமை கூடாது' என்பது அவருடைய கருத்து. எனவே, அவர் தாழ்த்தப்பட்ட மக்களை 'ஹரிஜனங்கள்' அல்லது ஆண்டவனின் குழந்தைகள் என்று அழைத்தார். அவர் தாமே ஹரிஜனங்கள் மத்தியில் வாழ்ந்தார். பொதுமக்களின் மனச்சாட்சியை எழுப்பி, இதைத் தீமையென உணரவைக்க 'ஹரிஜன்' என்ற பத்திரிகையைத் தொடங்கினார். தன்னைப் பின்பற்றும் ஆயிரக்கணக்கானவர்களைத் தாழ்த்தப்பட்டவர்களோடு சமபந்தி உணவு உண்ணவும் அவர்களைச் சகோதரர்கள்போல தங்கட்கு சமமானவர்களாக நடத்தவும் பணித்தார். தாழ்த்தப்பட்டவர்கள் ஆலயங்களில் நுழைய, இறைவனை வணங்கும் உரிமைபெற, பல சத்தியாக்கிரகங்களை அவர் தம் தலைமையில் நடத்தினார். அவருடைய இடைவிடாத நீண்ட போராட்டத்தாலும், முயற்சிகளாலும்தான், 'தீண்டாமை' சட்டபூர்வமாக ஒழிக்கப்பட்டது.

காந்திஜிக்கு மிகவும் பிடித்தமான மற்றொரு சமூகச் சீர்திருத்தம் 'மதுவிலக்கு' இயக்கமாகும். இதனை நாட்டில்

கொணர அவர் அயராது உழைத்தார். 'மதுவிலக்கை' அமல் செய்வதால் ஏழை மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும். மேலும், ஆண்கள் குடிப்பழக்கத்தினின்றும் காப்பாற்றப்படுவர். மதுவிலக்கை அமல்செய்வதால் அரசுக்கு வருவாய் நஷ்டம் ஏற்பட்டாலும், மக்களின் நல்வாழ்வு என்ற உயரிய நோக்கத்தில், இந்நஷ்டத்தை அரசு ஏற்க முன்வரவேண்டும் என்று காந்திஜி கருதினார்.

காந்திஜி இடைவிடாமல் ஈடுபட்ட மற்றொரு சமூகச் சீர்திருத்தம் சமூகத்தில் பெண்களின் நிலையை உயர்த்துவதே யாகும். அவர்களுக்குச் சமூகத்தில் சம அந்தஸ்தும், சம உரிமை களும் வழங்கப்படவேண்டும் என்று அவர் விரும்பினார். அவருடைய உயர்ந்த செல்வாக்கின் காரணமாகப் பல மகளிர் வீட்டில் அடைந்து கிடப்பதை விடுத்து, நாட்டுச் சுதந்தரப் போரில் பங்குகொள்ள முன்வந்து செயலாற்றினர்.

காந்திஜி கல்வித் துறையிலும் ஒரு முழுமையான மாறுதல் ஏற்படவேண்டுமென அறைகூவல் விடுத்தார். அவர் விரும்பிய கல்வித் திட்டம், 'ஆதாரக் கல்வித் திட்டம்' என அழைக்கப் பட்டது.

இக்கல்வித் திட்டப்படி, மாணவர்களுக்கு எண்ணும் எழுத்தும் மட்டுமன்றி மக்களுக்கு உபயோகமுள்ள ஒரு தொழிலும் கற்றுக்கொடுக்கப்படும். அனைத்துப் பாடங்களும் ஒரு தொழிலை மையமாகக்கொண்டு, கற்றுத் தரப்படும். குடிசைத் தொழிலின் சின்னமான 'ராட்டை அல்லது சர்க்கா' காந்திஜியின் மற்றொரு முக்கியமான சீர்திருத்தம். இந்தியர்களின் ஏழ்மைக்கு எதிராகப் போர்தொடுக்க, அவரது கரங்களில் 'சர்க்கா' சக்தி வாய்ந்த ஆயுதமாக மாறியது.

காந்திஜியின் முயற்சியால் பம்பாயில் "கதர் - கிராமத் தொழில்' அமைப்புத் தொடங்கப்பட்டது. நாட்டின் எல்லாப் பாகங்களிலும் தோன்றிய 'காந்தி ஆசிரமங்களில்' பலரகத் தொழில்களும், கிராமப்புறத் தொழில்களும் அமைக்கப்பட்டன. அவர் கிராம சுயராஜ்யத்தையும், சர்வோதயத் தத்துவத்தையும் மிகவும் நம்பினார்.

அவருடைய சீர்திருத்தங்கள் வலிமையான ஆன்மீக நீதி அடிப்படையில் அமைந்திருந்தன. தம் இலட்சியத்தை அடைய அவர் தேர்ந்தெடுத்த பாதை உண்மை, அகிம்சை—இவற்றை அடிப்படையாகக்கொண்டது.

**நிர்மாணத் திட்டம்:** விடுதலைப் போராட்ட வீரராக விளங்கியபோதே, காந்திஜி தம்முடைய புகழ்பெற்ற நிர்மாணத் திட்டத்திலும் கவனம் செலுத்தினார். இத்திட்டத்தில் 23 முக்கிய அம்சங்கள் இருந்தன. அவையாவன:

(1) இந்து-முஸ்லிம் ஒற்றுமை (2) தீண்டாமையை ஒழித்தல் (3) மதுவிலக்கை ஏற்படுத்துதல் (4) கதர் அணிவதை ஊக்குவித்தல் (5) கிராமத் தொழில்களை மேம்படுத்தல் (6) உடற்தூய்மையை ஓங்கச் செய்தல் (7) உடல்நலம் பேணல் (8) தாய்மொழியை வளர்த்தல் (9) ஆதாரக் கல்வியைச் செயல் படுத்தல். (10) தேசிய மொழியை வளர்த்தல் (11) மகளிர் முன்னேற்றம் கருதுதல் (12) விவசாயத் தொழிலாளர் முன்னேற்றம் (13) மாணாக்கர் நலம் (14) தொழுநோயை ஒழித்தல் (15) மலைஜாதி, ஆதிவாசிகள் வாழ்வை வளப்படுத்தல் (16) பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்துதல் (17) சமூகக் கல்வியைப் பரப்புதல் (18) அகதிகளுக்குப் புனர்வாழ்வளித்தல் (19) பசுக்கள் பாதுகாப்பு (20) இயற்கை மருத்துவம் (21) பூதான இயக்கம் (22) சாந்திசேவை நிறுவுதல் (23) சர்வோதயம் அல்லது கிராம ராஜ்யம்.

காந்திஜி எல்லா வகுப்பு மக்களின் முன்னேற்றத்திற்காக உழைத்தார். அவருடைய நிர்மாணத் திட்டத்தில் வாழ்வின் அடிப்படைத் தத்துவங்களான அரசியல், சமூக, பொருளாதாரம், கல்வி, சமயம், ஆன்மீகம் முதலிய அனைத்தும் இருப்பதைக் காணலாம்.

காந்திஜி இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடு பட்டார்.

### கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு (கி.பி. 1848-1919)

ஆந்திர மாநிலம் அளித்த சமூகச் சீர்திருத்தப் பெரியார் வீரேசலிங்கம் பந்துலு ஆவார். அவர் சிறந்த கல்விமான். அவர் கி.பி. 1848ஆம் ஆண்டு இராஜ மகேந்திரபுரத்தில் பிறந்தார். கி.பி. 1870இல் மெட்ரிகுலேஷன் பரிட்சையில் தேறினார். பின்னர் அங்கேயே ஆசிரியப் பணியில் அமர்ந்தார். கி.பி. 1873இல் அவர் திருமணப் பதிவாளராக நியமிக்கப்பட்டார். கி.பி. 1880-லிருந்து 1890ஆம் ஆண்டுவரை அவர் விதவைகள் மறுவிவாகத்திற்காக அரும்பாடுபட்டார். கி.பி. 1878இல் அவர் சென்னையில் தங்கி தம் கருத்துகளைப் பரப்ப 'சிந்தாமணி'

என்ற அச்சுத் தொழிலகத்தை ஆரம்பித்தார் 1900ஆம் ஆண்டில் அவர் சென்னை மாநிலக் கல்லூரியில் தெலுங்கு மொழி ஆசிரியராகப் பணிபுரிந்தார். கி.பி 1904இல் அவர் ஓய்வுபெற்ற பின்னர் ஆந்திராவிலுள்ள இராஜ மகேந்திரபுரத்திற்குத் திரும்பிச் சென்று, சமூகச் சேவையிலும் இலக்கியப் படைப்பிலும் ஈடுபட்டார். கி. பி. 1906இல் அங்கே அவர் ஓர் அனாதை இல்லத்தையும் ஆரம்பித்தார்.

வீரேசலிங்கம் தற்காலத் தெலுங்கு இலக்கியத்தின் ஆக்கபூர்வ எழுத்தாளர்களில் ஒருவராவார். அக்காலத்தில் தெலுங்கு மொழி உரைநடை எழுத்தாளர்களில் மிகச் சிறந்தவராக அவர் விளங்கினார். விவேகவர்த்தினி என்ற பத்திரிகையையும் ஆரம்பித்து நடத்தினார்.

அவர் பல ஆங்கில நூல்களைத் தெலுங்கில் மொழி பெயர்த்தார். மேலும் தன் சொற்பொழிவுகளின்மூலம் அக்காலத் தெலுங்கு அறிஞர்களை, மேலைநாட்டுக் கலாசாரத்தின் மிகச் சிறந்தவற்றை உணர்ந்து அறியச் செய்தார். அவர்தான் தெலுங்கு மொழியில் முதல்முதலாக நாவல் அல்லது நீண்ட புதினத்தை எழுதியவராவார். அவர் எழுதிய மிகச் சிறந்த முதல் நாவல் 'ராஜசேகர சரிதம்' ஆகும் அவரது 'ஆந்திர கவிதையின் சரிதம்' என்ற நூல்தான் தெலுங்கு இலக்கிய வரலாற்றைக் கூறும் முதல் நூலாகும்.

### பண்டித ரமாபாய்

சமூகச் சீர்திருத்த இயக்கத்தில் இந்திய மகளிரும் சமபங்கு பெற்றனர். அவர்களுள் நினைவில் வைத்துப் போற்றப்படும் முதல் பெண்மணி பண்டித ரமாபாய் ஆவார். இவர் பெண் விடுதலைக்கும் முன்னேற்றத்திற்கும் நன்கு உழைத்தார். இவர் கர்நாடகத்திலுள்ள மங்களூரில் பிறந்தார்.

சில காலம் சென்னையில் தங்கிய பின்னர், அவர் கல்கத்தாவிற்குச் சென்றார். அங்கே மகளிரின் பரிதாப நிலையைக் கண்டு கண்ணீர் வடித்தார். எனவே பால்ய விவாகம், கைம்பெண் மறுமணம் முதலியவைகளை நாட்டில் நீக்கப்பட உள்ளத்தைத் தொடுமாறு சொற்பொழிவுகள் செய்தார். தம் நிலையை ஆதரிக்க, அவர் வேதங்களிலிருந்தும், இராமாயண, மகாபாரத இதிகாசங்களிலிருந்தும், புராணங்களிலிருந்தும் பல மேற்கோள்களைக் காட்டினார்.

இரானடேயால் ஊக்குவிக்கப்பட்டு, அவர் புனேவிற்குச் சென்று அங்கே தம் சமூகச் சேவைப் பணியைத் தொடர்ந்தார் அங்கு அவர் 'ஆரிய மகிளா சமாஜம்' என்ற அமைப்பை ஏற்படுத்தினார். இவ்வமைப்பின் முக்கிய நோக்கங்கள் குழந்தை திருமணத்தைத் தடுப்பதும், பெண் கல்வியை ஊக்குவிப்பதுமே யாகும்.

அவர் அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற வெளிநாடுகளுக்குச் சென்று அங்கேயும் தம் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளைப் பேச்சுகளின் மூலமும், எழுத்துகளின் மூலமும் வெளியிட்டார். அப்போது அங்கே அவர் கிறித்துவ சமயத்தைத் தழுவினார்.

அவர் மீண்டும் இந்தியாவிற்குத் திரும்பி பம்பாயில் 'சாரதா சதன்' என்ற விதவைகள் புனர் வாழ்வு இல்லத்தைத் தொடங்கினார். அங்குச் சாதி, மத வேறுபாடின்றி எல்லாக் கைம்பெண்களுக்கும் பொது அறிவுக் கல்வியும், கலைப் பயிற்சியும், தொழிற் பயிற்சியும் தாய்மொழியில் தரப்பட்டன. சில காலத்திற்குப் பின்னர், சாரதா சதன் புனேவிற்கு மாற்றப்பட்டது. மேலும், மத்தியப் பிரதேசத்தில் ஒரு கொடியபஞ்சம் ஏற்பட்டபோது, ரமாபாயும் அவரது சீடர்களும் பல அனாதை விதவைகளைத் தங்கள் இல்லத்திற்குக் கொணர்ந்து உதவினர்.

புனேயில் 'கிருபா சதன்' என்ற மற்றொரு விதவைகள் புனர் வாழ்வு இல்லத்தையும் அவர் நிறுவினார். அங்கே பல ஆதரவற்ற விதவைகள் தொழிற்பயிற்சி பெற்றனர். சிறு குழந்தைகளுக்கு அவர் 'கிண்டர் கார்டன்' பள்ளிகளையும் தொடங்கினார்; அதற்கான ஆசிரியர்களுக்கும் பயிற்சி அளித்தார்.

பின்னர் ரமாபாய் அவர்கள் புனேயில் 'முக்தி மிஷன்' என்னும் நிறுவனத்தை ஆரம்பித்தார். இது ஆதரவற்ற மகளிர்க்குப் புகலிடமாகவும், கண்ணிழந்த, புத்திஸ்வாதீனமற்ற பெண்களுக்குத் தொழிற்கல்வி அளிக்கும் பள்ளிகளைக் கொண்டும் திகழ்ந்தது.

## ஸ்ரீ நாராயண குரு (கி.பி. 1854–1928)

சமூகச் சீர்திருத்த இயக்கத்தில் கேரள மாநிலமும் தனக்குரிய பங்கை வகிக்கிறது. இச்சிறப்பு, திருவனந்தபுரத்தில் பிறந்த ஸ்ரீ நாராயண குருவையே சாரும். அவர் ஈழவர்கள் சாதியில் பிறந்தார். அவர் மலையாள மொழியில் பாடல் இயற்றுவதில் வல்லவர். அவர் பல சமஸ்கிருத மொழி நூல்களையும் சிறப்பாகக் கற்றிருந்தார்.

கி.பி 1871ஆம் ஆண்டிற்குப் பின்னர் அவர் சமூகச் சீர்திருத்தத்தில் ஈடுபாடு கொண்டார். பல இடங்களுக்குச் சென்று, ஈழவர் சாதி மக்களுக்குக் கல்வியைப் போதித்தார். சில காலம் அவர் துறவி வாழ்க்கை வாழ்ந்ததால், அவருக்குக் 'குரு' என்ற அடைமொழியோடு, 'ஸ்ரீ நாராயண குரு' என்ற பெயர் கிடைத்தது.

அவரது மிக முக்கியப் போதனையானது, 'உலகில் ஒரே இனம், ஒரே சமயம், ஒரே கடவுள்தான் உண்டு' என்பது. அவரது முயற்சிகளின் காரணமாக, கேரளாவில் பின்தங்கிய நிலையிலிருந்த ஈழவர் சாதி மக்கள் புதிய வாழ்வு வாழ ஒரு புரட்சி ஏற்பட்டது. அவர் கூற்றின்படி, 'ஈழவர்கள், சமுதாய ஏணிப்படியின் உச்சிக்கு ஏறக் கடின உழைப்பு, நல்ல கல்வி, சிறந்த குணநலன் இவற்றைப் பெறவேண்டுவதே' யாகும்.

ஈழவர்களின் கல்வி மேம்பாட்டிற்காக, ஸ்ரீ நாராயண குரு 'ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன 'சங்கம்' என்ற அமைப்பை ஏற்படுத்தினார். இதன்மூலம் அவர்களுக்கெனப் பள்ளிகளும் கல்லூரிகளும் இவ்வமைப்பால் நடத்தப்பட்டன. இந்நிறுவனம் உயர்சாதிப் பூசாரிகளல்லாதவர்களால் பூசை செய்யப்படும் அநேக ஆலயங்களை எழுப்பியது. கி.பி. 1887இல் அடுவிபுரத்தில் அவர் ஓர் ஆலயத்தைக் கட்டி, அதன் தெய்வத்தைப் பிரதிஷ்டை செய்தார். அக்கோயிலின் சுவர்களில் பின்வரும் வாசகங்களைப் பொறிக்கச் செய்தார்: 'சாதி வேறுபாடும், வெறுப்பும், வேற்றுமையும் இல்லாமல் எல்லோரும் சமமாகப் பழகி வாழும், வணங்கும் உண்மையான ஆலயம் இது' என்பதாகும்.

## டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி (கி. பி. 1886–1966)

முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் கி.பி. 1886இல் சென்னை மாநிலத்தில் பிறந்தார். அவரது கல்வி புதுக்கோட்டையிலும் சென்னை மருத்துவக் கல்லூரியிலும் மலர்ந்தது. தென்னிந்தியாவில் முதன்முதலாக எம்.பி.பி.எஸ். என்ற மருத்துவப் பட்டம் பெற்ற பெண்மணி இவரேயாவார்.

இவர் பெண்கள் முன்னேற்றத்திலும், குழந்தைகளின் நோய் ஒழிப்பிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டார். இவரது சிறந்த மருத்துவ அறிவினைப் பாராட்டி, இந்திய அரசு, இவரை பெண்கள்—குழந்தைகள் நோய்கள்பற்றி ஆராய்ச்சிசெய்ய இலண்டனுக்கு அனுப்பியது.

சென்னைச் சட்ட மேலவையில் உறுப்பினராக நியமிக்கப் படும் பேறுபெற்ற முதற் பெண்மணி இவரே. பின்னர் இவர் மேலவையில் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

முத்துலட்சுமி அம்மையார் தேவதாசி முறையையும், குழந்தைத் திருமணங்களையும் ஒழிக்கத் தீர்மானித்தார். இவருடைய இடைவிடா முயற்சியினால் தேவதாசி முறையினை ஒழிக்கும் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இவர் மருத்துவமனை களிலும் பல புதிய சீர்திருத்தங்களைச் செய்தார். இவரது முயற்சியால் மருத்துவமனைகளில், மகளிர் மருத்துவர்களாக நியமிக்கப்பட்டனர். பள்ளிகளிலும் மருத்துவப் பரிசோதனைக்கு வழிவகுத்த பெருமை இவரையே சாரும்.

சென்னையிலுள்ள 'ஔவை இல்லம்', உதவியும் ஆதரவும் அற்ற அனாதைக் குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் இவர் ஆற்றிய தொண்டின் சின்னமாக விளங்குகிறது. அங்கே இவர் களுக்குப் புகலிடமும், நல்ல கல்வியும், நீதிபோதனையும், நல் வாழ்க்கை முறையும் கற்பிக்கப்படுகின்றன. இந்தியாவிலேயே தலைசிறந்தது எனத் தற்போது அனைவராலும் பாராட்டப் படுகிற 'அடையாறு கான்ஸர் இன்ஸ்டிடியூட்' இவரால் தொடங்கப்பெற்றதேயாம்.

சமூகச் சேவகியாய் மட்டும் இல்லாமல் முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் சிறந்த தேசபக்தையுமாவார்.

### சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் (கி. பி. 1878-1972)

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் கி. பி. 1878ஆம் ஆண்டு, அக்கால சேலம் மாவட்டத்திலிருந்த ஹோசூர் தாலூக்காவில் அமைந்த 'தொரப்பள்ளி' என்ற கிராமத்தில் பிறந்தார். மக்கள் அவரை அன்புடனும் மரியாதையுடனும் 'இராஜாஜி' எனச் சுருக்கமாக அழைத்தனர்.

பெங்களூர் மத்தியக் கல்லூரியிலும், சென்னை இராசதானிக் கல்லூரியிலும் கல்வி பயின்று தம் 18ஆம் வயதில் அவர் பி. ஏ. (இளங்கலைப்) பட்டம் பெற்றார். பின்னர் சட்டக் கல்லூரியில் சேர்ந்து, பட்டம் பெற்று சேலத்தில் வழக்கறிஞராகத் தம் பணியைத் தொடங்கினார்.

மிகச் சிறந்த வழக்கறிஞராக இருந்தபோதிலும், இராஜாஜி நாட்டின் அரசியல் வாழ்விலும் மக்களுக்குச் சேவை செய்வதிலும்

அதிக ஈடுபாடு கொண்டார். சேலம் நகரசபையின் தலைவராகச் சிறப்புற பணியாற்றினார். தம் பதவிக் காலத்தில் தீண்டாமையை அகற்ற அரும்பாடுபட்டார்.

கி. பி. 1925இல் இராஜாஜி திருச்செங்கோட்டிற்கு அருகேயுள்ள புதுப்பாளையம் கிராமத்தில், புகழ் வாய்ந்த காந்தி ஆசிரமம் ஒன்றை நிறுவினார். அதன் தலைவராய் இருந்து 'நிர்மாணத் திட்டங்களை' நிறைவேற்றுவதிலும், மது விலக்குப் பிரசாரத்திலும், தீண்டாமையை அகற்றுவதிலும் முழு மூச்சுடன் தீவிரமாக உழைத்தார்.



படம் 30. இராஜாஜி

கி. பி. 1930இல் காந்திஜி தமது புகழ்பெற்ற உப்புச் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கியபோது (தண்டியில்) இராஜாஜி, தம் சகாக்களுடன் வேதாரண்யக் கடற்கரைக்குக் கடல் நீரிலிருந்து உப்புக் காய்ச்ச நடந்துசென்றார். சென்னை மாகாணத்தில் பிரதமராயிருந்தபோது, நம் நாட்டிலேயே முதன் முறையாக மதுவிலக்குச் சட்டத்தை இயற்றிய பெருமை அவரையே சாரும். மேலும் 'ஆலய நுழைவுச் சட்டத்தின்' மூலம் தாழ்த்தப்பட்டவர்கள் ஆலயங்களில் தடையின்றி சென்று இறைவனை வணங்க வழிவகுத்தார்.

இராஜாஜி ஒரு சிறந்த அரசியல்வாதியும் சமூகச் சீர்திருத்தவாதியுமல்லாமல், மிகச் சிறந்த எழுத்தாளராகவும் திகழ்ந்தார்.

கி. பி. 1972ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் அவர் அமரரானார்.

## பெரியார் ஈ. வே. ராமசாமி (கி. பி. 1879–1973)

பெரியார் ஈ. வே. ராமசாமி ஈரோடு நகரில் பிறந்தார். (இது இப்போது பெரியார் மாவட்டத்தின் தலைநகராகும்.) தமது 19ஆம் வயதில் நாகம்மையை மணந்தார். கி.பி.1919ஆம் ஆண்டு ஈரோடு நகராட்சி மன்றத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரை மக்கள் அன்புடனும் மரியாதையுடனும் ஈ. வே. ரா. என்றும் தந்தை பெரியார் என்றும் அழைத்தனர்.

ஈ. வே. ரா. மிகச் சிறந்த தேசபக்தர். அக்காலத்தே இந்திய தேசியக் காங்கிரசு அவையின் உறுப்பினர் இவர் கி பி. 1920ஆம் ஆண்டில் காங்கிரசில் சேர்ந்தார். காங்கிரசின் 'நிர்மாணத் திட்டங்களிலும்' பிற திட்டங்களிலும் ஆர்வத்தோடு கலந்து கொண்டார். இவரும் மது விலக்குத் திட்டத்தை ஆதரித்தார். இதன் காரணமாகக் கள்ளுக்கடைகளின் முன்பு சத்தியாக்கிரகம் செய்தபோது, கைது செய்யப்பட்டு சிறை சென்றார்.



படம் 31. பெரியார் ஈ. வே. ரா.

பெரியார் ஈ. வே. ராவிற்கு வைக்கம் வீரர் என்ற புகழ்ப் பெயரும் உண்டு. கேரளாவிலுள்ள வைக்கம் என்ற ஊரில் தாழ்த்தப்பட்டவர்கள் நடக்கத் தடை விதிக்கப்பட்ட கோயில் வீதியில் இவர் நுழைவு செய்தார். இவர் அப்பொழுது கைது செய்யப்பட்டபோதிலும். இவரது இலட்சியம் இறுதியாக நிறைவேறியது.

பெரியார் ஈ. வே. ரா. பொருளற்ற பழக்க வழக்கங்களுக்கும் மூடநம்பிக்கைகளுக்கும் எதிராக முழுமூச்சுடன் போராடினார். இவர் மக்களைப் பகுத்தறிவுப் பாதையில் செல்ல உபதேசித்தார். பிற்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காக மனப்பூர்வமாக உழைத்தார். இவர் ஒரு பெரிய பகுத்தறிவுவாதி. சாதிப் பாகுபாட்டினை முழுமையாக எதிர்த்தார். ஈ.வே.ரா. திராவிட இயக்கத்தின் பெரும் தலைவர்களான அறிஞர் அண்ணா, தமிழ் நாட்டின் முன்னாள் முதலமைச்சர் திரு. மு. கருணாநிதி, இந்நாள் முதலமைச்சர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன் முதலியோருக்கு அரசியல் குருவாகவும் சமூகச் சீர்திருத்தங்களுக்குக் கலங்கரை விளக்காகவும் திகழ்ந்தார்.

இவர் கி.பி. 1973ஆம் ஆண்டு தமது முதிர்ந்த 95வது வயதில் அமரரானார். கி.பி. 1979ஆம் ஆண்டு இவரது நூற்றாண்டுவிழா தமிழ்நாடு முழுவதும் ஆர்வமுடன் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. இவருடைய பெயரால் ஈரோட்டினைத் தலைநகரமாகக்கொண்டு ஒரு புதிய மாவட்டம் தமிழக அரசினால் அமைக்கப்பட்டது. அதுவே பெரியார் மாவட்டமாகும்.

பெரியார் மறைந்துவிட்டபோதிலும் ஏழைகட்கும், பின் தங்கிய மக்கட்கும் இவர் ஆற்றிய அருந்தொண்டுகள் தமிழக மக்களின் மனத்தில் என்றும் பசுமையாக நிலைத்து நிற்கும்.

**சகோதரி சுப்புலட்சுமியும் அன்னை தெரெசாவும்**

சமூகச் சீர்திருத்த இயக்கத்தில் பெண்களின் விடுதலைக் காகவும், முன்னேற்றத்திற்காகவும் பாடுபட்ட பெரிய தலைவி யர்களுள் மற்றொருவர் சகோதரி சுப்புலட்சுமி ஆவார். அவர் பெண்களுக்கு ஆண்களோடு சம உரிமை அளிக்கவேண்டு மென்றும், கைம்பெண் மணஉரிமை அளிக்கப்பட வேண்டு மென்றும், பெண்டிற்கு உயர் கல்வி கிடைக்கவேண்டுமென்றும், ஆண்களோடு சமவேலைவாய்ப்புத் தரவேண்டுமென்றும் பாடு பட்டார். அவர் சென்னையில் சேவா சதன் என்ற அமைப்பை நிறுவி அதில் கைம்பெண்களுக்குத் தொழிற்பயிற்சி அளித்து வேலைவாய்ப்பினைப் பெருக்கினார்.

பெண்களிடையே மலர்ந்த மற்றொரு சமூகச் சீர்திருத்தத் தலைவி அன்னை தெரெசா ஆவார். அவர் அந்நிய நாடான யுகோஸ்லாவியாவைச் சேர்ந்தபோதிலும் நம் இந்திய மக்களுக்கு உழைக்கத் தம்மை அர்ப்பணித்துவிட்டார். உண்மையான கிருத்துவர்போலவே தொழுநோயாளிகளுக்குச் சேவை செய்யும் பணியை அன்புடன் ஏற்றிருக்கிறார்.

அன்னை தெரெசாவின் தன்னலமற்ற பணியைப் பாராட்டி இந்திய அரசு அவருக்கு 'நேரு விருதை' அளித்திருக்கிறது. அவர் தம்முடைய சேவைக்குக் கிடைக்கின்ற எல்லாப் பரிசு களையும் பணத்தையும் ஏழைகள், குருடர், உறுப்புக் குறைந்தோர், பிணியாளர் முதலியோரின் நல்வாழ்வுக்காகச் செலவழிக்கின்றார். துன்புறும் மனித இனத்திற்குச் சிறந்த சேவை செய்வதற்காக அவருக்கு அண்மையில் 'நோபல் பரிசு' வழங்கப்பட்டது. நமது இந்திய அரசும் அவ்வம்மையாருக்கு மிக உயர்ந்த விருதான 'பாரத ரத்னா' என்ற விருதை அளித்துக் கௌரவித்திருப்பதில் வியப்பே இல்லை.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் ஐந்து அல்லது ஆறு வரிகளில் விடை எழுது :

1. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சமூகச் சீர்திருத்தவாதிகள் சந்திக்க நேர்ந்த முக்கியப் பிரச்சினைகள் யாவை?

2. காந்திஜி தீர்க்க விரும்பிய ஏதாவது மூன்று முக்கியச் சமூகப் பிரச்சினைகளைக் கூறுக.

3. காந்திஜியின் ஆதாரக் கல்வி என்பது யாது ?

4. கந்துகூரி வீரேசலிங்கம் அவர்கள் தீர்க்க விரும்பிய சமூகப் பிரச்சினைகள் யாவை ?

5. பண்டித ரமாபாய் அம்மையார் எந்தச் சமூகப் பிரச்சினைகளுக்கு எதிராகப் பிரசாரம் செய்தார் ?

6. கேரளாவின் 'ஈழவர்' இனத்திற்கு நாராயண குரு அளித்த அறிவுரை யாது ?

7. டாக்டர் முத்துலட்சுமி அம்மையார் வெற்றிகரமாகப் போராடிய இரண்டு முக்கியச் சமூகச் சீர்கேடுகள் யாவை ?

8. இராஜாஜியின் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் நடைபெற்ற சமூகப் பணிகள் யாவை ?

9. சமூகச் சீர்திருத்தவாதியான பெரியார் ஈ. வே. ராவை எவ்வாறு தமிழக அரசு கௌரவித்தது ?

10. சிறுகுறிப்பு வரைக: சகோதரி சுப்புலட்சுமி அம்மையார்.

11. தெரெசா அம்மையாருக்கு இந்திய அரசு 'பாரத ரத்னா' விருதை வழங்கியதேன் ?

II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகள்கொண்டு பூர்த்தி செய்க:

1. இந்திய தேசியக் காங்கிரசின் தலைவராகக் காந்தி பொறுப்பேற்ற ஆண்டு ———

2. பெரியார் ஈ. வே. ரா. அவர்களுக்கு 'வைக்கம் வீரர்' என்ற பட்டத்தைத் தந்தது ——— ———.

3. மிகச் சிறந்த முதல் தெலுங்கு நவீனம் (நாவல்) ———. அதை எழுதியவர் ———.

4. பண்டித ரமாபாய் அம்மையாரால் திக்கற்ற மகளிர்க்கு உதவ புனேயில் ஏற்படுத்தப்பட்ட நிறுவனம் அல்லது அமைப்பு ———.

5. உயர்வர்கப் பூசாரிகள் அல்லாத புதிய வழிபாடு செய்யும் ஆலயத்தை அமைத்த சீர்திருத்தப் பெரியார் ———.

6. அனாதைகளுக்கும் விதவைகளுக்கும் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் செய்த சிறந்த சேவையின் சின்னமாக அவரால் சென்னையில் நிறுவப் பட்ட அமைப்பு ———.

7. நாட்டில் சட்டத்தை மீறி காந்திஜியின் அடிச்சுவட்டில் நடந்த உப்புச் சத்தியாக்கிரகப் பயணத்திற்கு இராஜாஜி சென்ற இடம் ———

III. பின்வரும் வினாக்களுக்கு அல்லது வாக்கியங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நான்கு மாற்று விடைகளில் சரியானதைத் தேர்ந்தெடுத்தெழுதுக :

1 தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஹரிஜனங்கள் என்ற பெயரை முதன்முதலாக அளித்த பெருமையை உடையவர்

(அ) இராஜாஜி ( )
(ஆ) பெரியார் ஈ வே ரா
(இ) காந்திஜி
(ஈ) விவேகானந்தர்

2 சென்னை மாகாணத்தில் முதன்முதலாக மதுவிலக்கைப் புகுத்தியவர்.

(அ) காமராஜ் ( )
(ஆ) பக்தவச்சலம்
(இ) எம். ஜி. இராமச்சந்திரன்
(ஈ) இராஜாஜி

IV. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் பதினைந்து வரிகளுக்கு மேற்படாமல் விடையளி :

1. சமூகச் சீர்திருத்தவாதியாக பெரியார் ஈ. வே ராவை மதிப்பீடு செய்க

2. பண்டித ரமாபாய் எவ்வாறு சமூகச் சீர்திருத்த வாதியாகப் பெயர் பெற்றார்?

3. ஒரு சமூகச் சீர்திருத்தவாதியாகக் காந்திஜியைப்பற்றி ஒரு கட்டுரை வரைக

# 16. இந்தியாவின் சுதந்தரப் போராட்டம்

## அறிமுகம்

இந்தியாவில் மக்கள் பலவித மதத்தினராயினும், பலவித மொழிகள் பேசுபவராயினும் 'அனைவரும் இந்நாட்டுக் குடிமக்கள், அனைவரும் இந்தியர்' என்ற ஒன்றுபட்ட எண்ணம் ஒவ்வொருவரிடமும் உள்ளது இந்திய தேசியப்பற்றினால் ஏற்பட்ட உணர்வு இது. இந்தியாவில் ஆங்கிலேயர் ஏகாதிபத்தியத் தினால், இந்தியா முழுவதுமே ஒன்றுசேர்ந்து பல்வேறு திசை களிலும் உள்ள மக்கள் ஒருங்கிணைந்தனர். இவ்வாறாக 'ஒரே நாடு, ஒரே சமுதாயம்' என்ற ஒன்றுபட்ட உணர்வு அனைவ ரிடமும் எழுந்ததெனலாம். ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் விளை வாக, நாடு முழுவதுமே விழித்துக்கொண்டது. அரசியல் ஒற்றுமை யும் தேசியப்பற்றும் ஏற்பட்டது. இவ்விழிப்புணர்ச்சி, அயல் நாட்டின் அடிமைத்தளையிலிருந்து நாடு விடுதலைபெற, சுதந்தரப் போராட்டம் நடத்த வழிவகுத்தது. இச்சுதந்தரப் போராட்டத்தில் குதித்த தென்னிந்திய மாவீரர் சிலர் முறையே புலித்தேவனும், கட்டபொம்மனும், திவான் வேலுதம்பியும் ஆவர்.

இச்சுதந்தரப் போராட்டம் 1857இன் தொடக்கத்திலேயே ஆரம்பித்துவிட்டது. ஆங்கிலேயரின் ஏகாதிபத்தியத்தில் இந்தியர் அனைவரும் பெரும் இன்னலுற்றனர். டல்ஹௌசிப் பிரபுவின் 'அவகாசியிலிக் கொள்கை' எரிகிற கொள்ளியில் எண்ணெய் ஊற்றியதுபோல் ஆயிற்று. எங்கும் இராணுவப் படைகள் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தன. ஆயினும், அநேக சிற்றரசர்கள் தாங்கள் அடைந்த செல்வம் எங்கே பறிபோய்விடுமோ என்ற பயத்தில் இக்கிளர்ச்சியில் கலந்துகொள்ளாமல் ஒதுங்கியே இருந்தனர். வழிநடத்திச் செல்ல சிறந்த தலைவன் இல்லாமை யால், அச்சுதந்தரப் போராட்டம் தன் முக்கியத்துவத்தை இழந்தது. இப்புகழ்பெற்ற கிளர்ச்சி திறமையும், ஒழுங்கும், கட்டுப்பாடும் உள்ள ஆங்கில அரசாங்கத்தால் ஒடுக்கப்பட்டது. இதுவே இந்தியா சுதந்தரம்பெற நடைபெற்ற கன்னி முயற்சி யாகும். எனினும், இப்புரட்சித் தீ முழுவதும் அணைக்கப்பட வில்லை; புகைந்துகொண்டே இருந்தது. இதனை இந்தியாவின் முதற் சுதந்தரப்போர் என்போம்.

**சுதந்தரப் போராட்டத்தின் முதல் நிலை (கி. பி. 1885-1919)**

ஆங்கிலேயரின் அடக்குமுறையும் பிரித்தாளும் கொள்கையும் இந்திய மக்களிடையே சுதந்தரவேட்கையைத் தூண்டிவிட்டன. அதன் விளைவாக முதன்முதலாக ஒரு ஸ்தாபனம் கி பி 1885இல் சுதந்தரப் போராட்டத்திற்காக ஆரம்பிக்கப்பட்டது. இதனை ஆரம்பித்தவர் ஆலன் ஆக்டெனியன்ஹ்யூம், வில்லியம் வெட்டர்பரன் என்ற ஆங்கிலேயரும் ஆவர். இதனுடைய மற்ற இந்திய தலைவர்கள் தாதாபாய் நௌரோஜி, சுரேந்தரநாத் பானர்ஜி, பெரோஸ்ஷா மேத்தா, கோபாலகிருஷ்ண கோகலே ஆகியோர் ஆவர். பிரிட்டிஷ் இந்திய ராணுவச் செலவைக் குறைத்தல், தலசுயாட்சி மன்றங்களில் அதிக பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுதல், கல்வி வாய்ப்புகள் விரிவாக்குதல், சிவில், இராணுவ நிர்வாகத்தில் இந்தியருக்கு உயர் பதவிகள் கொடுத்தல் ஆகியவற்றை கோரிப் பெறுவதிலேயே இந்திய தேசியக் காங்கிரசு ஆரம்ப காலத்தில் திருப்தியடைந்தது.

**காங்கிரசு தீவிரவாதிகள்**

தேசிய உணர்வு நாளுக்குநாள் வளர்ந்து எங்கும் பரவிக் கொண்டு இருந்தமையால் தீவிர சீர்திருத்தவாதிகளிடையே முதல் இருபது ஆண்டுகளாகக் காங்கிரசின் முயற்சியால் ஒன்றும் நடைபெறவில்லை என்ற அதிருப்தி ஏற்பட்டது. அவர்கள், காங்கிரசு மிதவாதப் போக்கை விடுத்துத் தீவிர நடவடிக்கை களில் ஈடுபடவேண்டுமென்று வற்புறுத்தினர்

**வங்கப் பிரிவினை (1905)**

இந்நிலையில், கர்சன் பிரபு வங்காளத்தை இரு பிரிவாக்க வேண்டுமென்று தீர்மானித்தார். அவரின் எண்ணப்படியே எத்தனையோ எதிர்ப்புக்கிடையே வங்காளம் இரு கூறாகப் பிரிக்கப்பட்டது. இந்த வங்காளத்தின் பிளவு தேசியப் போராட்டமென்னும் சிறுபொறியைப் பெரு நெருப்பாகக் கொழுந்து விட்டெரியச் செய்தது. இது தேசிய இயக்கத்திற்கு ஒரு திருப்பு முனையாக அமைந்தது எனலாம். இந்தத் தேசியப் பற்று எனும் விளக்கு வங்காளத்தில் மேலும் ஒளிவிட்டுத் திகழ்ந்து மற்றப் பகுதிகளுக்கும் அது பரவியது. இறுதியில் தேசியப் போராட்டமாக உருமாறியது. இந்த வங்கப் பிரிவினை தீவிரவாதிகளின் இயக்கத்திற்கும் எழுச்சிக்கும் காரணமாய் அமைந்தது. அந்நியப்பொருள்களை விலக்கக் கோரி ஹர்த்தால்கள், பொதுக்கூட்டங்கள் ஆகியன நடைபெற்றன. அரசாங்கம் மிகக் கொடூரமாக இவ்வெழுச்சியை ஒடுக்கியது.

மக்களின் பொதுக்கூட்டங்கள் தடியடியினால் கலைக்கப்பட்டன; பெருந்தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர். பத்திரிகை களுக்கு மிகக் கடுமையாக அபராதம் விதிக்கப்பட்டது. இந்த அடக்குமுறைகள் மக்களிடையே தேசிய உணர்வை மேலும் நன்றாகப் பிரகாசிக்கும்படி தூண்டிவிட்டன.

### காங்கிரசில் பிளவு

வங்கப் பிரிவினையின் காரணமாகச் சுதேசி இயக்கம், அந்நியப் பொருள் பகிஷ்கரிப்பு ஆகியவை ஏற்பட்டன. 'வந்தே மாதரம்' (இந்தியத் தாய்க்குத் தலைவணங்குகிறேன்) என்ற முழக்கம் எங்கும் ஒலித்தது. இவ்வியக்கம் எங்கும் மிக வேகமாகப் பரவியது. தென்னிந்தியாவில் தேசிய உணர்ச்சியை ஊட்டிய வர்கள் சுப்ரமணிய பாரதியார் என்ற தேசியக் கவிஞரும், வ.உ. சிதம்பரம்பிள்ளை என்ற தேசபக்தரும் ஆவார்கள்.

சிறிதுசிறிதாகக் காங்கிரசு தீவிர போக்குக்கு மாறியது. தீவிரவாதிகளான லாலா லஜபதிராயும், லோகமான்ய பால கங்காதரதிலகரும் இன்னும் தீவிரமாகச் செயல்படவேண்டும் என்று கோரினர். பலமான வற்புறுத்தலின்மூலம்தான் அரசியல் உரிமைகள் பெறமுடியும் என்பது அவர்கள் முடிவு. திலகரின் 'சுயராஜ்ஜியம் நமது பிறப்புரிமை' என்ற முழக்கம் நாடு முழு வதும் எதிரொலித்தது. சுரேந்திரநாத் பானர்ஜி, பெரோஸ் ஷா மேத்தா, கோகலே முதலிய தலைவர்கள் மிதவாதப் போக்கு உடையவர்களாய் விளங்கினர். ஆகவே, காங்கிரசில் மிதவாதிகள், தீவிர வாதிகள் என இருபிரிவுகள் 1907இல் சூரத் மாநாட்டில் ஏற்பட்டது.

### முஸ்லிம் லீக் (1906)

இந்நிலையில் முஸ்லிம்களின் கோரிக்கைகளைக் கேட்பதற் காக நவாப் சலிமுல்லா என்பவர் கி.பி. 1906இல் அகில இந்திய முஸ்லிம் லீக் என்ற கூட்டமைப்பை ஏற்படுத்தினார். இந்த முஸ்லிம் லீக் வங்கப் பிரிவினையை ஆதரித்து அந்நியப்பொருள் பகிஷ்கரிப்பை எதிர்த்து ஆங்கிலேய அரசாங்கத்தை ஆதரித்தது.

### மிண்டோ-மார்லி சீர்திருத்தங்கள் (1909)

அதே சமயத்தில், ஆங்கில அரசாங்கம் காங்கிரசின் தீவிர வாதிகளை ஒடுக்க முற்பட்டது. மிதவாதிகளின் நட்பைப்பெற மிண்டோ-மார்லி சீர்த்திருத்தங்களை வெளியிட்டது. இச்சீர் திருத்தம் இதனை வழங்கிய இந்தியாவின் அரசப் பிரதிநிதியாய் இருந்த மிண்டோ பிரபு, இங்கிலாந்தில் இந்திய மந்திரியாய்

இருந்த மார்லிப் பிரபுவின் பெயரால் அழைக்கப்பட்டது. வங்கப் பிரிவினையை இச்சீர்திருத்தம் இரண்டு ஆண்டுகளுக்குப்பின் திருத்தியமைத்தது. கவர்னர் ஜெனரலின் சட்டசபையில் இந்தியர் ஒருவருக்கு ஓர் இடம் ஒதுக்கிவைக்கப்பட்டது. இச்சீர்திருத்தம் மத்திய, மாநில சட்டசபைகளில் சில மாறுதல்களை ஏற்படுத்தியது. இதில் அரசாங்க உத்தியோக மில்லாத சில உறுப்பினர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் சில தொகுதிகள் ஒதுக்கிவைக்கப்பட்டன. முஸ்லிம்களின் 'தனித் தொகுதி' வேண்டும் என்ற கோரிக்கைக்காக வகுப்புவாரி பிரதி நிதித்துவமுறையைப் புகுத்தியது இச்சீர்திருத்தம். இவ்விதம் 'தனித் தொகுதி' முறையை அறிவித்ததால், பின்னாளில் இந்தியாவின் பிரிவினைக்கு இது வித்திட்டது எனலாம்.

முதலில் மிண்டோ-மார்லி சீர்திருத்தத்தை வரவேற்ற மிதவாதிகள் இந்தப் பிரித்தாளும் கொள்கையை வெறுத்தனர். இதனால் பிரிந்த மிதவாதிகளும் தீவிரவாதிகளும் 'லக்னோ' காங்கிரசு கூட்டத்தில் 1916இல் மீண்டும் ஒன்றுசேர்ந்தனர்.

## இக்கிய முன்னணி (1916)

காங்கிரசின் இரு பிரிவுகளும் ஒன்றுசேர்ந்தது மட்டு மல்லாமல், முஸ்லிம் லீக்கும் காங்கிரசுடன் நட்புக் கொண்டு ஒத்துழைத்தது. இந்திய வரலாற்றில் கி. பி. 1916ஆம் ஆண்டு ஒரு மறக்கமுடியாத ஆண்டாகக் கருதப்படுகிறது. இவ்வாண்டில் காங்கிரசு முஸ்லிம்லீக் ஒற்றுமை ஏற்பட்டதுமல்லாமல், டாக்டர் அன்னிபெசன்ட் அம்மையாரின் முயற்சியால் 'ஹோம்-ரூல் இயக்கம்' தோற்றுவிக்கப் பட்டது. லோகமான்ய திலகர் இவ்வியக்கத்தைப் பெரிதும் ஆதரித்தார் அன்னிபெசன்ட் அம்மையார் 'சுய ஆட்சியை' வலியுறுத்தியபோது லோக மான்ய திலகர் சுயராச்சியம் அல்லது முழுமையான சுதந்தரம் வேண்டும் என்று போராடினார்.



படம் 32.
அன்னிபெசன்ட் அம்மையார்

### போராட்டத்தின் இரண்டாம் நிலை (கி.பி. 1919-39)

சுதந்தரப் போராட்டத்தின் இரண்டாம் நிலையின் தொடக்கத்தில் முதல் உலகப்போர் (1914-48) காங்கிரசையும் முஸ்லிம் லீக்கையும் ஒன்றுசேர்த்தது. இந்தியா, இப்போரில் தன் இதயப் பூர்வமான முழு ஒத்துழைப்பையும் கொடுத்தது.

### மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் (1919)

எட்வின் சாமுவெல் மாண்டேகு என்பவர் கி.பி. 1917இல் வரலாற்றுச் சிறப்புமிக்க அறிக்கையை ஆங்கில பாராளு மன்றத்தில் அறிவித்தார். இஃது அரசாங்க நிர்வாகத்தில் இந்தியர் களுக்கு மேலும் அதிக பொறுப்புகளையும், பொறுப்பாட்சி யையும் படிப்படியாக ஏற்பட வழிவகுத்தது. இந்த மான்டேகு செம்ஸ்போர்ட்டின் அறிக்கையே பின்பு 1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டமாயிற்று.

இதன்படி சட்டசபைகள் விரிவாக்கப்பட்டன. ஒவ்வொரு மாகாணமும் அதன் கவர்னராலும் சட்டசபையாலும் நிர்வகிக்கப்பட்டது. அரசாங்கம் நிர்வாக உறுப்பினர்களாலும் அமைச்சர்களாலும் நடத்தப்பட்டது. மாநில நிர்வாகத் துறையில் சில துறைகள் நிர்வாகச் சபையினரின் அதிகாரத்தின் கீழ் இருந்தன. ஆனால், அவர்கள் மாகாண சட்டசபைக்குப் பொறுப்பாளிகள் அல்லர். இன்னும் சில துறைகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்களின் நிர்வாகத்தின்கீழ் வந்தன. ஆனால், அவர்கள் சட்டசபைக்குப் பொறுப்புள்ளவர்கள். இதனால் ஏற்பட்ட இரட்டை ஆட்சியையும், வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தையும் காங்கிரசு வன்மையாக எதிர்த்துக் குரல் கொடுத்தது.

### ஜாலியன் வாலாபாக் படுகொலை

மாண்டேகு-செம்ஸ்போர்ட் சீர்திருத்தத்தை வன்மையாக எதிர்த்தவர்களை ஆங்கில அரசாங்கம் எந்தவித விசாரணை யின்றியும் எவ்வித சட்டமுறையின்றியும் தண்டித்தது. தேசிய உணர்ச்சியை அடக்குவதற்கு ரௌலட் சட்டம் நிறைவேற்றப் பட்டது. இதனால் நாடெங்கும் எதிர்ப்பும் கிளர்ச்சியும் வெகுவிரைவாகப் பரவின. காந்திஜியும் இதனை எதிர்த்துத் தம் சாத்வீகப் போரைத் துவக்கினார். ஆங்கில அரசாங்கம் இந்தப் போராட்டத்தைத் தம் இரும்புக் கரங்களால் ஒடுக்கியது. 'ஜாலியன் வாலாபாக்' என்ற இடத்தில் அமைதியான முறையில் நடைபெற்றுக் கொண்டிருந்த ஒரு பொதுக் கூட்டத்தின்மீது ஜெனரல் டையர் என்பவர் 'ரௌலட் சட்டம்' கொடுத்த

துணிவில், ஆயுதமின்றி அமைதியாய் கூடியிருந்த மக்களைச் சுட்டுத்தள்ளும்படி வீரர்களுக்குக் கட்டளையிட்டார். வெளியேறுவதற்கு வழியின்றி தவித்த பலநூறு மக்கள், படுகொலை செய்யப்பட்டனர். ஆயிரத்துக்கும் மேற்பட்ட குற்றமற்ற ஆண், பெண், குழந்தைகள் படுகாயமுற்றனர். பஞ்சாப் முழுவதும் இத்தகு கொடுங்கோலாட்சி நிலவியது. இந் நிகழ்ச்சி இந்திய வரலாற்றில் 'பஞ்சாப் படுகொலை' எனப்படுகிறது.

**கிலாபத் இயக்கம்**

முதல் உலகப்போரில் துருக்கி தோல்வியுற்றது. துருக்கி சுல்தான் தங்கள் கலிபாவாக இருந்தமையால், முஸ்லிம்கள் ஆங்கில அரசை வெறுத்தனர். ஆங்கிலேயர்களின் முதல் எதிரி களாக மாறினர். அலிச் சகோதரர்களான முகம்மது அலி, ஷவுகத் அலி என்பவர்களால் காந்திஜியின் ஆதரவுடன் 'கிலாபத் இயக்கம்' ஒன்று ஆரம்பிக்கப்பட்டது.

**மகாத்மா காந்தியடிகள் காங்கிரசின் தலைமைப் பொறுப்பை ஏற்றல்**

1919இல் ஏற்படுத்தப்பட்ட 'ரௌலட் சட்டம்' மக்களின் உரிமைகளைப் பெரிதும் பாதித்தது. இந்தச் சட்டத்தை எதிர்த்து, நாடு முழுவதும் எதிர்ப்பு பரவியது. இத்தருணத்தில் மகாத்மா காந்தி காங்கிரசின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். திலகர் 1920இல் இறந்தபின் காந்திஜியே காங்கிரசின் ஒரே வழிகாட்டி யாகத் திகழ்ந்தார். ஆங்கிலேயர்களின் வருந்தத்தக்க வன் முறைகள், காந்திஜியைச் சுதந்தரப் போராட்டக் களத்தில் குதிக்கச்செய்தன. நம் தாய்த்திரு நாட்டின் அடிமைத்தளையை உடைத்தெறிய, தம் உயிரையும் உள்ளத்தையும் அர்ப்பணித் தார். 'கிலாபத் இயக்கம்' இந்து முஸ்லிம்களுக்கு இடையே ஒற்றுமையை ஏற்படுத்த நல்ல சந்தர்ப்பத்தை அளித்தது. இரண்டு மதத்தினரிடையே பிறந்த இந்தச் சகோதரத்துவ ஒற்றுமையை இதுவரை யாருமே கண்டதில்லை. இவ்விரு இனத்தவரும் சேர்ந்து சுதந்தரப் போராட்டத்தில் முழுமூச்சுடன் ஈடுபட்டனர்.

காந்திஜி 'சத்யாகிரகப்போர்' என்ற ஒரு புதுமுறையைப் பின்பற்றினார். இப்போர் உண்மை, அஹிம்சை, அறம் ஆகிய வற்றை அடிப்படையாகக் கொண்டது. 'ஹிம்சையை அஹிம்சை யால்தான் வெல்ல முடியும்' என்று திண்ணமாக அவர் நம்பினார். காந்திஜியின் சத்தியாகிரகப் போர் (1) 1920இல் ஏற்படுத்தப் பட்ட ஒத்துழையாமை இயக்கம் (2) 1930இல் ஏற்படுத்தப்பட்ட சட்டமறுப்பு இயக்கம் (3) 1942இல் நடத்திய 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் என மூன்று நிலைகளை உடையது.

**ஒத்துழையாமை இயக்கம் (1920)**

ஒத்துழையாமை இயக்கத்தின்படி சட்டசபையிலிருந்து உறுப்பினர்கள் பதவியைத் துறந்தனர்; பள்ளிகளைவிட்டு மாணவர்கள் வெளியேறினர்; நீதிபதிகள் தங்கள் பதவிகளைத் துறந்தனர்; வாக்காளர்கள் தேர்தலில் கலந்து கொள்ளவில்லை. சட்டசபையிலும், நீதிமன்றங்களிலும், பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் ஆக மும்முனையிலும் தங்கள் ஒத்துழையாமையை மக்கள் தெரிவித்தனர்; எங்கும் அர்த்தால் நடந்தன; பலரும் சிறையிலடைக்கப்பட்டனர். பிரமுகர்கள் பலரும் தங்கள் ஆடம்பர வாழ்க்கையைத் துறந்து, மற்றப் பாமர மக்களோடு ஒன்றாக வாழ்வதில் மகிழ்ச்சியடைந்தனர்.

கி. பி. 1922இல் 'சௌரி சௌரா' என்னுமிடத்தில் சிலர் வன்முறையில் ஈடுபடவே காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்திவைத்தார்.

**சுயராஜ்யக் கட்சி**

காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கம் நிறுத்தப்பட்டமையால், சுதந்தரப் போராட்டத்தைத் துரிதப்படுத்த மோதிலால் நேருவின் உதவியுடன் சி. ஆர். தாஸ் என்பவர் சுயராஜ்யக் கட்சியை அமைத்தார். தேர்தல்களில் போட்டியிட்டு, தலைவர்கள் சட்டசபையில் நுழைந்து, மாண்ட்போர்டு திட்டத்தை உள்ளிருந்தபடி உடைத்தெறிவதே இதன் குறிக்கோளாகும். இவ்வாறே தேர்தல்களில் வெற்றி பெற்று சுயராஜ்யக்கட்சியின் அங்கத்தினர்கள் ஆங்கில அரசாங்கத்திற்கு எதிராகத் தொல்லைகள் பல கொடுத்து, சுதந்தரப் போரட்டத்திற்கு வலுவூட்டினர். 1925ஆம் ஆண்டு சி.ஆர். தாஸ் அவர்களின் மரணத்திற்குப்பின்னர் சுயராஜ்யக் கட்சியும் மறைந்தது.

**சைமன் கமிஷன் (1927)**

இவ்வாறு சுதந்தரப் போராட்டம் உச்சநிலையில் இருக்கையில் சர் ஜான் சைமன் என்பவரின் தலைமையின்கீழ்க் கி. பி. 1927இல் மாண்ட்போர்ட் திட்டத்தின் செயலாக்கத்தையும், மேலும் செய்யவேண்டிய சீர்திருத்தங்களைப் பற்றி ஆராயவும் இந்தியாவிற்கு ஒரு குழு அனுப்பப்பட்டது. இக்குழுவில் இந்தியர் எவரும் இல்லாததால் இக்கமிஷனை இந்தியர்கள் புறக்கணித்தனர். இக்கமிஷன் மாண்ட்போர்ட் சீர்திருத்தங்கள் தோற்றுவிட்டன என்றும் அடுத்து இந்திய அரசியல் முறையில் கொண்டு வரவேண்டிய சீர்திருத்த மாற்றங்களைப் பரித்துரைசெய்ய ஒரு வட்டமேசை மாநாடு கூட்டப்பட வேண்டும் என்றும் கூறியது.

### லாகூர் காங்கிரசும் முழுச் சுதந்தரப் போராட்டமும்

அவ்வமயம் கி. பி. 1929ஆம் ஆண்டில் லாகூரில் நடந்த காங்கிரசு மாநாடு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். இம்மாநாட்டில் ஜவஹர்லால் நேரு பூரண சுயராச்சியம் அல்லது முழுச் சுதந்தரமே காங்கிரசின் லட்சியம் என்று கூறினார். எனவே, முதல் முறையாக 1930ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 26ஆம் நாள் சுதந்தர நாளாக இந்திய நாடு முழுவதும் கொண்டாடப்பட்டது.

### சட்டமறுப்பு இயக்கம் (1930)

வட்டமேசை மாநாடு பயனில்லாமல் போகவே நாட்டிற்கு முழுச் சுதந்தரத்தைப்பெற காந்திஜி சட்டமறுப்பு இயக்கத்தை 1930இல் தொடங்கினார். காந்திஜி ஆங்கிலேயர் உப்புக்கு வரி விதித்ததை எதிர்த்து 'தண்டி' என்னும் இடத்திற்குச் சென்று கடல் நீரிலிருந்து உப்பு தயாரித்தார். ஆகவே, அந்த ஆண்டு சுதந்தர இயக்கத்தின் மிக முக்கியமான மற்றோர் ஆண்டாகக் கருதப்படுகிறது.

### வட்டமேசை மாநாடு

இந்தியாவின் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு வேண்டிய வழிமுறைகளை வகுப்பதற்காக முதல் வட்டமேசை மாநாடு லண்டனில் 1930ஆம் ஆண்டு நடைபெற்றது. ஆனால், இந்த வட்டமேசை மாநாட்டினால் எந்தவித நல்ல பலனும் ஏற்பட வில்லை. காங்கிரசு இந்த முதல் வட்டமேசை மாநாட்டைப் புறக்கணித்தது.

### காந்தி-இர்வின் ஒப்பந்தம் (1931)

எங்கும் கோபம் கொப்பளித்துக் கொண்டிருக்கையில், இந்தியர்களுடன் சமரசமே சிறந்த வழி என்று அப்போதைய வைசிராயாக இருந்த இர்வின் பிரபு தீர்மானித்தார். இதன் விளைவாகக் காந்தி-இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டது. இதனால் அரசியல் கைதிகள் பலர் விடுவிக்கப்பட்டனர். காந்திஜி 1931இல் இரண்டாம் வட்டமேசை மாநாட்டிற்கு அழைக்கப்பட்டார். அதனால் எந்தவிதப் பலனும் ஏற்படவில்லை. ஆகவே, நாடு திரும்பிய காந்திஜி சட்டமறுப்பு இயக்கத்தை மீண்டும் தொடங் கினார். மூன்றாவது வட்டமேசை மாநாடும் காங்கிரசினர் இல்லாமலே நடந்தது.

### இந்திய அரசியல் சட்டம் (1935)

மூன்று வட்டமேஜை மாநாடுகளின் விளைவாக ஏற்பட்ட இந்திய அரசியல் சட்டத்தின் இரண்டு முக்கிய ஷரத்துகள் இங்கு

கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவை: (1) பிரிட்டிஷ் இந்திய மாநிலங்களும், இந்திய சுதேச அரசுகளும் இணைந்த அனைத் திந்திய கூட்டாட்சி அமைக்கப்பட வேண்டும். (2) மாகாண சுய ஆட்சி வழங்குதல் முதலியனவாம். இச் சட்டத்தின்படி 1937ஆம் ஆண்டு தேர்தல்கள் நடைபெற்றன. தேர்தல்களில் காங்கிரசு பெருவாரியாக வெற்றிபெற்றது. பல மாகாணங்களில் மந்திரி சபைகளை அமைத்தது.

முஸ்லிம்கள் காங்கிரசுடன் இணைந்து அமைச்சரவை அமைக்க வேண்டுமென விரும்பினர். ஆனால் காங்கிரசு, தங்கள் கொள்கையை ஏற்காத எவரையும் தங்களுடன் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லை என அறிவித்தது. அதனால் இவ்விரு வகுப்பினரிடையேயும் பிளவு ஏற்பட்டது. அப்போதைய முஸ்லிம் லீக் தலைவர் முகம்மது அலி ஜின்னா முஸ்லிம் லீக்கை காங்கிரசிடமிருந்து பிரித்துச் சென்றார்.

## சுதந்தரப் போராட்டத்தின் இறுதிநிலை (1939—47)

இரண்டாவது உலகப் போரில் அதன் விருப்பமில்லாமலேயே இந்தியா கலந்துகொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது. பிரிட்டிஷ் அரசு இப்போரினை, ஜனநாயகத்திற்காகக் கொடுங்கோன்மையை எதிர்க்கும் போர் என வர்ணித்தது. காங்கிரசு காரிய கமிட்டி அதன் போர்க்குறிக்கோள்களில் இந்திய சுதந்தரத்தையும் ஒன்றாகச் சேர்க்க வேண்டுமென்று வற்புறுத்தியது. ஆனால், பிரிட்டிஷ் அரசு இதுபற்றி எந்த உறுதி மொழியும் தர மறுக்கவே 1939ஆம் ஆண்டு காங்கிரசு அமைச்சரவைகள் ராஜினாமா செய்தன.

இதே சமயத்தில் கி. பி. 1940ஆம் ஆண்டு ஜின்னாவின் தலைமையில் முஸ்லிம் லீக் தாங்கள் சிறுபான்மையினர் அல்லர் என்றும் தாங்கள் ஒரு தனி நாட்டைச் சேர்ந்தவர்கள் என்றும் அறிவித்தது. தங்களுக்குப் பாகிஸ்தான் என்ற பெயரில் 'தனி இராச்சியம்' வேண்டுமென ஒரு புதுப் பிரச்சனையைக் கிளப்பியது.

## ஆகஸ்டு அறிக்கை (1940)

இரண்டாம் உலகப்போரின் நடைமுறை பிரிட்டிஷாருக்குப் பிரதிகூலமாக அமைந்தது. காங்கிரசு, தங்கள் 'தாற்காலிக அரசாங்கம்' மத்திய ஆட்சியில் ஏற்படவேண்டுமென்ற கோரிக்கை நிறைவேற்றப்பட்டால் தங்கள் பூரண ஒத்துழைப்பை கொடுப்பதாகக் கூறினர். வைசிராய் இதனை மறுத்தார்.

இந்நிலையில் 1940இல் வைசிராய் லின்லித்கோ பிரபு தம் ஆகஸ்டு அறிக்கையை வெளியிட்டார். அதில் (1) புதிய அரசியல் அமைப்பு அமைக்க பிரதிநிதிக் குழு ஒன்றை நியமித்தல் வேண்டும். (2) கவர்னர் ஜெனரல் நிர்வாகச் சபையில், இந்திய உறுப்பினர்கள் அதிகமாக இடம் பெறலாம். (3) பிரிட்டிஷ் இந்தியர்கள் அடங்கிய போர் ஆலோசனைக்குழு ஒன்று நியமிக்கப்படும் என்றும் குறிப்பிடப்பட்டது. ஆனால், இது நிராகரிக்கப்பட்டு காந்திஜி தனிநபர் சத்தியாகிரக இயக்கத்தைத் தொடங்கினார்.

### கிரிப்ஸ் திட்டம் (1942)

இரண்டாம் உலகப்போர் நடந்த இச்சமயத்தில் (1942) ஜப்பான் இந்தியாவின் கதவுகளைத் தட்டியது. அவர்கள் இந்தியாவிற்குள் நுழைந்துவிடுவார்கள் என்ற அச்சம் எங்கும் நிலவியது. ஆகவே, ஆங்கிலேய பாராளுமன்றம் சர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் என்பவரை இந்தியர்களுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள அனுப்பியது. இத்திட்டத்தில் உலகப்போர் முடிந்தவுடன் இந்தியாவிற்கு டொமினியன் அந்தஸ்து அளிக்கப் படும் என்று கூறப்பட்டிருந்தது. ஆனால், உடனே அரசாங் கத்தில் ஏற்படவிருக்கும் மாறுதல்கள்பற்றி ஒன்றும் குறிப்பிடப் படவில்லை. ஆகவே, உடனே டொமினியன் அந்தஸ்து தராதத னால் காங்கிரசும், பாகிஸ்தானைப்பற்றிய எந்தவிதக் குறிப்பும் கிரிப்ஸ் திட்டத்தில் இல்லாததால் முஸ்லிம் லீக்கும் அதனை ஏற்க மறுத்தது. அதனால் கிரிப்ஸ் திட்டம் தோல்வியுற்றது.

### 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் (1942)

உலகப் போர்மேகம் பிரிட்டனைச் சூழ்ந்துகொண்டு அதனை பயமுறுத்திக்கொண்டிருந்த நிலையில் இந்தியாவும் தன் பங்குக்கு அவர்களைச் சுதந்தரம் கோரி நெருக்கியது. காந்திஜி முதற் கொண்டு காங்கிரசு தலைவர்கள் அனைவரும் ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு வெளியேறினால்தான் ஜப்பானின் தாக்குதலை தடுத்து நிறுத்தமுடியும் என்று நம்பினார்கள். ஆகவே கிரிப்ஸ் தூதுக்குழுவின் தோல்வியினால் ஏமாற்றமடைந்த காங்கிரசு சட்டமறுப்பு இயக்கத்தை முழுமையாக 1942இல் ஆகஸ்டு மாதம் தொடங்கினர். 'வெள்ளையனே வெளியேறு' என்ற முழக்கம் எங்கும் எழுந்தது. ஆங்கில அரசாங்கம் தம் இரும்புக் கரங்களால் இந்தப் புரட்சியை அடக்கி ஒடுக்கிவிட்டது. ஆனால், அவர்களின் இக்கொடுமை நிறைந்த செயல் தேசிய உணர்ச்சி, நாட்டுப்பற்று ஆகிய பெருநெருப்பை விசிறிவிட்டாற் போல் ஆயிற்று.

**நேதாஜி சுபாஷ் சந்திரபோசும்—இந்திய தேசியப் படையும்**

இந்திய சுதந்தரப் போராட்டத்தின் சரித்திரத்தில் இந்திய தேசியப் படைபற்றிய விவரம் இல்லையெனில் அஃது முழுமை யுடையாது எனலாம். சிறையிலிருந்து தப்பித்துச்சென்ற நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் என்ற பெருந்தலைவர் இந்திய தேசியப் படையை மலேயாவில் நிறுவினார். ஜப்பானியர்களிடம் இருந்த இந்திய சிறைக் கைதிகளை ஒன்றுதிரட்டி இந்திய தேசியப்படை ஒன்றை ஏற்படுத்தினார். இந்த இந்திய தேசியப்படை ஜப்பானியர்களுடன் சேர்ந்துகொண்டு டெல்லியை நோக்கி 'டில்லிசலோ' என்ற முழக்கத்துடன் போரிட்டது. டில்லிக்கு இப்படையுடன் முன்னேறிச்சென்று இந்தியாவை பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கவேண்டுமென்பது அவர் நோக்கம். ஆனால், இருஆண்டுகளுக்கு பின்பு அது பிரிட்டிஷ் படையினரால் தோற்கடிக்கப்பட்டது.

**சிம்லா மாநாடு (1945)**

ஆங்கிலேயர்களுக்கு அனுகூலமாக இரண்டாம் உலகப்போர் முடிந்தது. ஆகவே, இந்தியர்களுக்கு இன்னும் அதிக பொறுப்புகள் கொடுக்கவேண்டுமென்று அப்போதைய வைசிராய் வேவல் பிரபு இந்தியர்களுடன் ஓர் உடன்பாடு செய்துகொள்ள சிம்லாவில் ஒரு மாநாட்டைக் கூட்டினார். ஆனால் காங்கிரசிற்கும் முஸ்லிம் லீக்கிற்கும் இடையே உடன்பாடு ஏற்படாததால் இந்த மாநாடு தோல்வியுற்றது. முஸ்லிம் லீக் 'பாகிஸ்தான்' என்ற தனி நாட்டைக் கேட்க, காங்கிரசு அதனை மறுக்க நாட்டில் இக்கட்டான நிலை தொடர்ந்து நிலவியது.

**காபினெட் குழு (1946)**

இந்தச் சமயத்தில் இங்கிலாந்தில் நடைபெற்ற தேர்தலில் தொழிற்கட்சி பெருவாரியாக வெற்றிபெற்றது. லேபர் பிரதம மந்திரி கிளமென்ட் அட்லி என்பவர் ஒரு காபினெட் தூதுக் குழுவை 1946இல் இந்தியாவிற்கு அனுப்பிவைத்தார். இந்தியா விற்கு சுதந்தரம் கொடுப்பதே அதன் தலையாய நோக்கமாகும்.

இந்தக் காபினெட் தூதுக்குழு இந்தியா முழுவதற்கும் கூட்டாட்சி முறையினாலான அரசியல் அமைப்பு ஏற்படுத்த வேண்டும் என்று சிபாரிசு செய்தது. அரசியல் நிர்ணய சபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அங்கம் வகிக்கவேண்டும் என்றும் அறிக்கை வெளியிட்டது. அதுவரையில் ஓர் இடைக் கால அரசு ஏற்படுத்தவேண்டும் என்பதும் அத்திட்டத்தின் ஓர் அம்சமாகும்.

ஆயினும், காங்கிரசு, முஸ்லிம் லீக் இடையே தொடர்ந்து முரண்பாடு இருந்து வந்தது. காங்கிரசு இடைக்கால அரசு நிறுவுவதை ஆதரித்தது. ஆனால் முஸ்லிம் லீக் அதில் கலந்துகொள்ள மறுத்தது. எனினும் இடைக்கால அரசு பண்டித ஜவஹர்லால் நேரு தலைமையில் நிறுவப்பட்டது. முதலில் சேரமறுத்த முஸ்லிம் லீக் பின்பு அதில் சேர்ந்து கொண்டது. ஆனால் அரசியல் நிர்ணய சபைக்குத் தங்கள் பிரதிநிதிகளை அனுப்ப மறுத்தது. ஜின்னாவின் முஸ்லிம் லீக் தலைவர்கள் தங்களுக்குச் 'சுயராச்சியம்' வேண்டும், என்று தொடர்ந்துபோராடிக் கொண்டு இருந்தனர். அரசியல் நிர்ணயசபை டாக்டர் ராஜேந்திர பிரசாத் என்பவர் தலைமையில் அமைக்கப்பட்டது.



படம் 33.
முகமது அலி ஜின்னா

## மௌண்ட்பேட்டன் திட்டம் (1947)

இந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரி அட்லி, பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் ஆங்கிலேயர் இந்தியாவை விட்டு 1948இல் ஜூன் மாதம் வெளியேறுவர் என்ற தம் எண்ணத்தை அறிவித்தார். மௌண்ட் பேட்டன் பிரபு என்பவர் அதிகார மாற்றத்திற்கு ஆவன செய்வதற்காக வைசிராயாக நியமிக்கப்பட்டார். அவர் காங்கிரசிற்கும் முஸ்லிம் லீக்கிற்குமிடையே சமரசம் ஏற்பட தன்னால் இயன்ற வரை முயன்றார். ஆனால் அம்முயற்சி வீணாயிற்று. பாகிஸ்தான் பிரிவினை நடந்தாலொழிய இந்த அரசியல் போராட்டம் முடிவுறாது என்று முடிவு



படம் 34.
மௌண்ட்பேட்டன்

செய்தார். ஆகவே 1947 ஜூன் 3ஆம் தேதி தம் திட்டத்தை வெளியிட்டார். அவரின் திட்டப்படி கிழக்கு வங்காளம், மேற்குப் பஞ்சாப், வடமேற்குஎல்லைப்புற மாநிலம், சிந்து, பலுசிஸ்தானம்




படம் 35. சுதந்தரமடைந்தபோது இந்தியா

ஆகியவை பாகிஸ்தானாகவும் மற்றப் பகுதிகள் இந்திய யூனியனாகவும் பிரிக்கப்படும் என்று அறிவித்தார். இரண்டும்

'டொமினியன்களாக' இருக்கவேண்டும் என்றும் அறிவித்தார். இவ்வாறாக நாட்டை இருபிரிவுகளாகப் பிளவுபடுத்தி இந்தியாவிற்குச் சுதந்தரம் கொடுக்கப்பட்டது.




படம் 36. இன்றைய இந்தியா

ஆங்கில அரசாங்கம் இந்திய சுதந்தரச் சட்டத்தை 1947ஆம் ஆண்டு ஜூலை மாதம் 5ஆம் தேதி வெளியிட்டது. இரண்டிற்கும் சுதந்தர அரசுரிமை வழங்கப்பட்டது. இந்தியா

சுதந்தரம் அடைந்தது மட்டுமல்லாமல் இந்தியா, பாகிஸ்தான் என்று இரு பிரிவுகள் ஏற்பட்டன.

1947ஆம் ஆண்டு 14ஆம் நாள் பாகிஸ்தான் அரசுரிமைப் பெற்று சுதந்தரம் அடைந்த நாடாகவும் 1947ஆம் ஆண்டு 15ஆம் நாள் இந்திய யூனியன் சுதந்தரம் பெற்ற நாடாகவும் மாறியது.

**மகாத்மா காந்தி நாட்டுக்குச் செய்த தொண்டுகள்**

இந்திய தேசிய இயக்கத்தில் குதிப்பதற்கு முன்பாகவே 22 ஆண்டுகள் (1893-1915) காந்திஜி தென் ஆப்ரிக்காவில் இருந்த இந்தியர்களின் உரிமைக்காகக் கடுமையாக உழைத்தார். தென் ஆப்ரிக்காவில் இருந்தபோது அகிம்சைப் போரை துவக்கிச் சத்தியாகிரகம் செய்து வெற்றிபெற்றார். அதே 'சத்தியாகிரகம்' என்னும் ஆயுதத்தை விரோதமும் வெறியும் தலைவிரித்தாடிய நாட்டில் பயன்படுத்துவது மிகக் கடினமாயிருந்தது. அனைவரையும் கவர்ந்திழுத்து ஒன்று சேர்த்த பெருமை காந்தி ஒருவரையே சாரும். அவரின் பெருமுயற்சியால்தான் தென் ஆப்ரிக்காவில் இந்தியர்கள் தங்கள் உரிமைகளைப் பெற்றனர்.

இந்தியாவிற்குச் சுயராஜ்யம் பெற்றுத்தரவேண்டுமென்று காந்திஜியை இந்திய தேசியக் காங்கிரசு வேண்டிக்கொண்டது. ஆனால் அது மிகச் சுலபமானதல்ல. மலைப்பூட்டும் மிகப் பெரிய காரியம் அது. அப்போது நாட்டில் வெவ்வேறு பிரிவு களைச் சார்ந்த சுமார் 300 மில்லியன் மக்கள் வாழ்ந்து வந்தனர். இவ்வாறு வேறுபாடுகள் பல உள்ள இந்திய மக்கள் அனைவரையும் ஒன்றுதிரட்டி, அந்நியரின் ஆட்சியிலிருந்து விடுதலை வாங்கித்தருதலே காந்திஜியின் மிகப்பெரிய காரியமாக இருந்தது. ஆகவே சுதந்தரப் போராட்டக்களத்தில் குதித்த காந்திஜி அந்நியரின் அடிமைத்தளையை உடைத்தெறியும் வரையில் தம் உயிரையும் உள்ளத்தையும் அர்பணித்துப் பாடு பட்டார். கோடிக்கணக்கான இதயங்களும் காந்திஜின் இந்த அறப்போராட்டத்தில் மகிழ்ச்சியுடன் இறங்கின. காந்திஜி தம் புது ஆயுதமான 'ஒத்துழையாமை இயக்கத்தை' அல்லது சத்தியாகிரகம் என்னும் அந்த ஆயுதத்தை இந்தியாவிற்கு மட்டு மன்றி உலகத்திற்கே அறிமுகப்படுத்தினார்; கத்தியின்றி, இரத்த மின்றி சுதந்தரப் போரில் பெரு வெற்றிபெற்றார்; அணுயுகத்தில் இஃது ஒரு மகத்தான அமைதிப்போர் ஆகும். போருக்குப் பதிலாக ஒரு புது ஆயுதத்தை நமக்கும் உலகிற்கும் அளித் துள்ளார். இதுவே மகாத்மா நம் இந்தியாவிற்குச் செய்த பெருந்தொண்டாகும். பிற்காலத்தில் மார்ட்டின் லூதர் காந்திஜி

யின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அமெரிக்க நீக்ரோக்களின் உரிமைகளுக்காக பாடுபட்டார்.

படித்த இந்தியரே பங்குகொண்ட நிறைந்த இந்திய தேசியக் காங்கிரசு காந்திஜியின் முயற்சியால் பலம் வாய்ந்த மாபெரும் மக்கள் இயக்கமாக மாறியது எனலாம்.

மகாத்மா காந்தி நம் நாட்டின் விடுதலைக்காக மட்டும் பாடு படவில்லை. தீண்டாமை, அறியாமை, ஏழ்மை ஆகிய சமூகக் கொடுமைகளிலிருந்தும் நாடு விடுதலைபெறவும் பாடுபட்டார். மக்களின் மனத்தில் விழிப்புணர்ச்சியைத் தூண்டி இத்தகைய சமூக கறைகள்நீங்க வழிவகுத்தார். அதில் வெற்றியும் பெற்றார்.

இதைத்தவிர எளிமையான வாழ்க்கையையும் அவர் ஆதரித்தார். தேவைக்குமேல் செலவழிப்பவரும் தேவைக்கு மேல் பொருள் விரும்புபவரும், நாட்டின் சொத்தை அபகரிக்கும் திருடர்களுக்குச் சமம் என்பது காந்திஜியின் எண்ணம். தொழிற் சாலையில் முதலாளிகள் ஏதுமறியா தொழிலாளிகளைப் பிழிந் தெடுக்கும் கொடுமையைக் காந்திஜி வன்மையாகக் கண்டித்தார்., காந்திஜியின் இராட்டை, மாட்டுவண்டிப் பயணம், கிராம முன்னேற்றம் முதலிய கொள்கைகள் இன்னும் மக்கள் பலரைக் கவர்ந்து நிற்கின்றன. காந்திஜியினுடைய செயல்முறைகள் கிராமத் தொழில்களுக்கும் கதர் உற்பத்திக்கும் ஆக்கத்தையும் ஊக்கத்தையும் தந்தன.

எல்லா மக்களுடைய உயர்வையும் நலனையும் கருதும் சர்வோதய சமுதாயத்தை மலரச் செய்ய காந்திஜி மிகவும் விரும்பினார். மக்கள் அனைவரும் சகோதரத்தன்மையோடும் உணர்ச்சியோடும் வாழ அவர் தம்மால் இயன்ற அனைத்தையும் செய்தார். ஒருவரை ஒருவர் பகைத்துக்கொண்டு வாழும் சீர்கேட்டை நிறுத்த விரும்பினார். எல்லாவிதத்திலும் காந்திஜி உலகின் மிகப்பெரிய தலைவர்களுள் ஒருவராவார். தற்கால விடுதலைப் போர்களில் அவருடைய செல்வாக்கை நாம் இன்னும் நிறைய காணலாம். எனவே, இருபதாம் நூற்றாண்டின் மாபெறும் இந்தியரான அவர் இந்திய தேசத்தின் தந்தை என அழைக்கப்படுவது மிகப் பொருத்தமே.

## பயிற்சி

**I. கீழ்க்கண்ட வினாக்களுக்கு ஐந்து அல்லது ஆறு வரிகளுக்கு மிகாமல் பதிலளி:**

1. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முக்கியச் சுதந்தரப் போராட்ட வீரர்கள் யாவர்?

2. 1857இல் நடந்த சுதந்தரக் கிளர்ச்சிக்கு மூன்று முக்கியக் காரணங்களைக் கூறு.

3. இந்திய தேசியக் காங்கிரசைத் தோற்றுவித்தவர்கள் யார் யார்?

4. 1907இல் நடந்த 'சூரத்' காங்கிரசு கூட்டத்தின் முக்கியத்துவம் என்ன?

5. இந்திய பாகிஸ்தான் பிரிவினைக்கு எவ்வாறு 1909ஆம் ஆண்டு மிண்டோ-மார்லி சீர்திருத்தங்கள் வித்திட்டன என்பதை எடுத்துக்காட்டுக.

6. இந்திய தேசியக் காங்கிரசு 'மாண்டேகு-செம்ஸ்போர்ட்' சீர்த்திருத்தங்களின் எப்பகுதிகளை ஆட்சிசெய்தது?

7. கிலாபத் இயக்கத்தைப் பற்றி சிறுகுறிப்பு வரைக.

8. சைமன் கமிஷன் ஏன் புறக்கணிக்கப்பட்டது?

9. இந்திய நாட்டு மக்களின் வாழ்க்கையில் ஒவ்வோர் ஆண்டும் ஜனவரி மாதம் 26ஆம் தேதி எவ்வாறு முக்கிய நாளாக மாறியது?

10. 'உப்பு சத்தியாகிரகம்' அல்லது தண்டியாத்திரைபற்றி சிறு குறிப்பு வரைக.

11. 1942ஆம் ஆண்டின் கிரிப்ஸ் திட்டத்தை ஏன் காங்கிரசு நிராகரித்தது.

12. ஆகஸ்டு புரட்சியைப் பற்றி சிறு குறிப்பு வரைக.

13. இந்தியா விரைவாகச் சுதந்தரம் பெற எவ்வாறு நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் உதவினார்?

14. மௌண்ட் பேட்டன் திட்டத்தைப்பற்றி சிறு குறிப்பு வரைக.

II. பின்வரும் வாக்கியங்களிலுள்ள கோடிட்ட இடங்களைத் தகுந்த விடை கொண்டு பூர்த்தி செய்க:

1. லாப்ஸ் கொள்கை அல்லது அவகாசியிலிக் கொள்கையைக் கடைபிடித்த கவர்னர் ஜெனரல் ———.

2. இந்திய தேசியக் காங்கிரசின் முதல் கூட்டம் ——— ஆண்டில் ——— நகரத்தில் நடைபெற்றது.

3. வங்காளப் பிரிவினையின்போது கவர்னர் ஜெனரலாக இருந்தவர் ———.

4. முஸ்லிம் லீக் ——— ஆண்டு ——— என்பவரால் தொடங்கப்பட்டது.

5. வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தை முதன் முதலில் இந்தியாவில் புகுத்திய சட்டம் ———.

6. காந்திஜி வெள்ளையனே வெளியேறு என்ற இயக்கத்தைத் தொடங்கிய ஆண்டு ———.

7. இந்தியா சுதந்தரம் பெற்ற நாள் ———.

8. இந்தியா சுதந்தரம் அடைவதற்குக் காரணமாய் இருந்த பிரிட்டிஷ் பிரதமர் ———.

III. பின்வரும் வினாக்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நான்கு மாற்று விடைகளுள் சரியானதைத் தேர்ந்தெடுத்தெழுது:

1. 'சுதந்தரம் எனது பிறப்புரிமை' என்ற உரிமைக் குரலை எழுப்பியவர்.

(அ) லாலா லஜபதிராய் ( )
(ஆ) பாலகங்காதர திலகர்
(இ) மகாத்மா காந்தி
(ஈ) ஜவஹர்லால் நேரு

2. பாகிஸ்தான் அமைப்பிற்குக் காரணமாயிருந்த தலைவர்.

(அ) நவாப் சலீமுல்லா ( )
(ஆ) மௌலானா அபுல்கலாம் ஆஸாத்
(இ) அலி சகோதரர்கள்
(ஈ) முகம்மது அலி ஜின்னா

3. காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்த ஆண்டு.

(அ) 1920 ( )
(ஆ) 1930
(இ) 1940
(ஈ) 1942

4. சுயராச்சியக் கட்சியைத் தொடங்கியவர்.

(அ) சி. ஆர். தாஸ் ( )
(ஆ) திலகர்
(இ) கோபாலகிருஷ்ண கோகலே
(ஈ) ரானடே

5. இந்திய தேசியக் காங்கிரசு பூர்ண சுதந்தரத்தை தனது இலட்சியமாக அறிவித்த ஆண்டு.

(அ) 1885 ( )

(ஆ) 1907

(இ) 1929

(ஈ) 1942

IV. **பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் பதினைந்து வரிகளுக்குள் விடை கொடுக்க :**

1. 1885ஆம் ஆண்டிலிருந்து 1919ஆம் ஆண்டுவரை நடந்த இந்திய விடுதலைப் போராட்டத்தைச் சுருக்கமாக விவரி.

2. மகாத்மா காந்திஜியின் தலைமையில் 1919ஆம் ஆண்டிலிருந்து 1947ஆம் ஆண்டுவரை நடந்த இந்திய விடுதலைப் போராட்டத்தைப் பற்றி எழுதுக.

3. இந்தியாவிற்குக் காந்திஜி செய்த சேவையைக் குறிப்பிடுக.

4. சிறு குறிப்பு வரைக.

(அ) சுதேசியியக்கம்

(ஆ) ஜாலியன் வாலாபாக் படுகொலை

(இ) காபினெட் தூதுக்குழு

## செய்முறைப் பயிற்சி

இந்தியாவின் படம் வரைந்து இந்தியா சுதந்தரம் பெற்ற போது இருந்த பாகிஸ்தான், இந்தியா எல்லைகளைக் குறிக்க.

# 17. சுதந்தர இந்தியாவின் சாதனைகள்

## அறிமுகம்

ஏற்கெனவே இந்தியா 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி சுதந்தரம் பெற்றது என்பதை நாம் அறிவோம். அன்றிலிருந்து இன்றுவரை இந்தியாவின் சாதனைகள் மகத்தானவையாயும் வியக்கத்தக்கவையாயும் உள்ளன. இவை பல்வேறு துறைகளில் நிகழ்ந்துள்ளன. ஓர் இந்தியனுடைய சராசரி வயது 27 இலிருந்து 50 ஆண்டுகள் வரை உயர்ந்திருக்கிறது. இச்சாதனை நடுவண் அரசும் மாநில அரசுகளும் உடல் நலம் பொதுநலம் முதலிய துறைகளில் எடுத்துக்கொண்ட பல்வேறு நடவடிக்கைகளின் விளைவே. அறியாமையை அகற்றும் பிரச்சினை மற்றொரு முக்கியப் பிரச்சினையாக இருந்தது. சுதந்தரத்திற்குமுன் இந்திய மக்கள்தொகையில் 10 விழுக்காடு பேர்களுக்குத்தான் எழுதப் படிக்கத் தெரியும். இப்பொழுது இந்நிலைமாறி எழுதப் படிக்கத் தெரிந்தோர் தொகை 30 விழுக்காடுகளுக்குமேல் உயர்ந்திருக்கிறது. அநேகமாக ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளியும், மருத்துவமனையும் உள்ளன. கிராமங்களில் மின்சார வசதியும், வானொலி வசதியும் அமைந்திருக்கின்றன. மக்களைக் களிப்பூட்ட பல கிராமங்களில் திரை அரங்கங்களும் ஏற்பட்டுள்ளன. நல்ல பாதைகள் அமைக்கப்பட்டுள்ளன. நாடு முழுவதும் இரயில் பாதைகள் வலைவலையாகப் பின்னிச்செல்கின்றன. சூபர்சானிக் ஜெட் விமானங்கள் நாட்டிலுள்ள முக்கிய நகரங்களை இணைக்கும் வகையிலும் வெளிநாடுகளோடு தொடர்புகொள்ளும் நிலையிலும் வானத்தில் பேரிரைச்சலுடன் பறக்கின்றன.

சுதந்தரம் பெற்ற பின்னர் நாம் நமது நாட்டிலேயே இரயில் என்ஜின்கள், மோட்டார்கள், கப்பல்கள், வான ஊர்திகள், பலவித கனரக இயந்திரங்கள், எலக்ட்ரானிக் பொருள்கள், மருந்துகள் முதலியவற்றை உற்பத்திசெய்யக் கற்றிருக்கிறோம். நமது பெட்ரோலியத் தொழில் விரைவாக வளர்ந்து வந்திருக்கிறது. இதன் உற்பத்தியில் நாம் பத்தாவது இடத்தைப் பெற்றிருக்கிறோம். ஆயிரக்கணக்கான தொழிற்சாலைகளும் பல புதிய தொழில் நகரங்களும் தோன்றியிருக்கின்றன. நாம் வெற்றிகரமாக அணுசக்தி சோதனையையும் செய்திருக்கிறோம்.

ஆனால், அணுசக்தியை அமைதியான ஆக்க வேலைகளுக்கே உபயோகிக்க வேண்டும் என்று உறுதி கொண்டிருக்கிறோம். 'அமைதிக்கே அணு' என்பது நம் குறிக்கோள். நமது செய்தி கொடுக்கும் விண்வெளிச் செயற்கைக் கோள்களும் வானத்தில் சென்றிருக்கின்றன. ஆரியபட்டா நமது விஞ்ஞான முன்னேற்றத்தின் நல்ல சான்றாகும். மின்சார சக்தியை உண்டாக்கவும் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கவும் ஆறுகளின் ஊடே நாட்டின் பல்வேறு பாகங்களில் பெரிய அணைகளைக் கட்டியிருக்கிறோம். நாட்டின், பல்வேறு பாகங்களில் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள், ஆராய்ச்சி மையங்கள் முதலியவற்றையும் ஏற்படுத்தியிருக்கிறோம். பலகோடி மக்களுக்கு மருத்துவமனைகளும் நலவாழ் மையங்களும் பல வகையில் உதவிபுரிகின்றன.

## சமஸ்தானங்கள் இணைப்பு

இந்தியர் சுதந்தரம் அடைந்த உடனே முதலாவதாகத் தீர்வு காணவேண்டிவந்த பிரச்சினை இந்திய சமஸ்தானங்களை இணைப்பதேயாம். இந்தியா முழுவதும் பெரியதும் சிறியதுமான சமஸ்தானங்கள் 562 சுதேச மன்னர்கள் ஆட்சியின்கீழ் இருந்தன. ஒரு சில ஹைதராபாத், மைசூர், காஷ்மீர் போன்ற மிகப் பெரிய சமஸ்தானங்கள், பிற மிகச் சிறியவை. இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சி நீங்கி இந்தியா சுதந்தரம் பெற்றவுடன் இந்தச் சமஸ்தானங்களும் சுதந்தரம் பெற்றன. மௌண்ட்பேட்டன் பிரபு தம்முடைய பேரறிக்கையில் அவை பாகிஸ்தானுடனோ, இந்தியாவுடனோ தங்கள் விருப்பத்திற்கேற்ப சேர்ந்துகொள்ளலாம் என்றார். ஒரு சில சமஸ்தானங்கள் இந்தியாவுடனோ, பாகிஸ்தானுடனோ சேர்ந்துகொள்ள சம்மதித்தன. ஆனால் ஹைதராபாத் போன்ற சில சமஸ்தானங்கள் சுதந்தரமாகவே இருக்க விரும்பின. அவை அவ்வாறு சுதந்தரமாகத் தனித்து இயங்கினால் இந்தியாவில் ஐக்கியமும், பாதுகாப்பும், சீரான வளர்ச்சியும் பாதிக்கப்படும். எனவே, அவை ராஜதந்திர முறையில் அவைகள் அமைந்திருக்கும் புவியியல் இடத்திற்கு ஏற்ப பாகிஸ்தானுடனோ, இந்தியாவுடனோ இணையும்படி செய்யப்படவேண்டும்.

அப்போது இந்தியாவின் உள்துறை அமைச்சராய் இருந்த சர்தார் வல்லபபாய்பட்டேல் இம் மிகக் கடினமான ஆனால் முக்கியமான காரியத்தைச் செய்ய முன்வந்து வெற்றிகரமாகச் செய்து முடித்தார்.

மன்னர்களின் சுதேச சமஸ்தானங்கள் மூன்று வகைகளில் இணைக்கப்பட்டன. (1) பல சமஸ்தானங்கள் தங்களுக்கு அருகில் உள்ள மாநிலங்களில் 1948-49ஆம் ஆண்டு இணைந்தன. இவைகள் 'ஏ' பிரிவு இராஜ்யங்கள் எனப்பட்டன. (2) இதே கால கட்டத்தில் பல சுதேச சமஸ்தானங்கள் ஒன்றோடொன்று இணைந்து சமஸ்தான ஐக்கியங்கள் ஆயின. இவை 'பி' பிரிவு இராஜ்யங்கள் என அழைக்கப்பட்டன. இவற்றில் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் 'இராஜ பிரமுகர்' என்று அழைக்கப்பட்டார். அவரே இந்த இராஜ்யத்தின் நிர்வாக அதிகாரி. (3) வேறு ஒருசில சமஸ்தானங்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு நடுவண் அரசின் நிர்வாகத்தின்கீழ் வந்தன. இவை 'சி' பிரிவு இராஜ்யங்கள் ஆகும். இந்தியாவின் அரசியல் அமைப்பு 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ந் தேதி நடைமுறைக்கு வந்தது. அப்போது கவர்னர்களால் ஆளப்பட்ட 'ஏ' பிரிவு இராஜ்யங்களும், எட்டு இராஜப் பிரமுகர்களால் ஆளப்பட்ட 'பி' பிரிவு இராஜ்யங்களும், பத்து நடுவண் அரசின் நிர்வாகத்திற்கு உட்பட்ட 'சி' பிரிவு இராஜ்யங்களும் அமைந்திருந்தன.

### சமஸ்தானங்களை இணைத்தல்

அநேக மத்திய இந்திய சமஸ்தானங்கள் அருகேயிருந்த ஒரிஸ்ஸாவும் மத்திய மாகாணம் முதலியவற்றோடு இணைந்தன. தக்காணத்திலுள்ள சில சமஸ்தானங்களும் குஜராத்தில் உள்ள சமஸ்தானங்களும் பம்பாய் மாகாணத்துடன் இணைந்தன.

புதுக்கோட்டை சமஸ்தானம் தமிழகத்தில் திருச்சிராப்பள்ளியிலும், சான்டோர் பெல்லாரியோடும், பங்கனப்பள்ளி கர்நூலோடும் இணைந்தன. இவை அப்போதைய சென்னை மாகாணத்தோடு இணைந்தன.

### கூட்டிணைப்பு

பல சிறிய சிறிய சமஸ்தானங்கள் நிர்வாகத்தை முன்னிட்டு இணைக்கப்பட்டு ஒரே சமஸ்தானமாக ஆயின. பின்வருபவை இத்தகைய சமஸ்தான இணைப்புக்கு எடுத்துக்காட்டாகும். மத்திய மாகாணங்கள், கத்திய்வார், ராஜஸ்தான், குவாலியர், இந்தூர், மாளவம் முதலியன இப்பிரிவில் அடங்கும். 'பெப்சு' பாடியாலர், கிழக்குப் பஞ்சாப் ஐக்கியம், திருவாங்கூர் கொச்சின் ஐக்கியம் ஆகியவை 'பி' பிரிவு சமஸ்தானங்கள் ஆகும்.

### மத்திய நிர்வாகம்

மத்திய நிர்வாகத்தின்கீழ் ஒருசில சமஸ்தானங்கள் வந்தன. அவையாவன: இமாசலப் பிரதேஷ், மணிப்பூர், திரிபுரா

முதலியன. 1949ஆம் ஆண்டிற்குள் பெரும்பாலான சமஸ்தானங்கள் இணைக்கப்பட்டுவிட்டன. இது அவ்வளவு எளிதான சாதனை இல்லை. இதனை உண்மையிலேயே ஓர் இரத்தம் சிந்தாப் புரட்சி என்று கூறவேண்டும். இருப்பினும் ஹைதராபாத், ஜுனாகாத், ஜம்மு காஷ்மீர் சமஸ்தானங்கள் இந்திய அரசுக்குப் பெரிய இணைப்புப் பிரச்சினையை உண்டாக்கின. இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திட மறுத்தன.

**பிரச்சினை மிக்க சமஸ்தானங்கள் (ஹைதராபாத்):** ஹைதராபாத் இந்திய அரசுக்கு ஒரு பிரச்சினை மிக்க பெரிய சமஸ்தானமாயிற்று. அதோடு உடன்பாடு செய்வது மிகவும் கஷ்டமான காரியமாய் இருந்தது. இச்சமஸ்தானம் பெரும்பாலான இந்து மக்களை ஆண்ட ஒரு முஸ்லிம் மன்னரைக் கொண்ட (நைசாம்) சமஸ்தானமாகும். ஹைதராபாத் நைசாம் அச்சமஸ்தானம் சுதந்தரம் உள்ள சர்வாதிகார நாடு என்றும் இந்தியாவின் அரசாங்க ஆதிக்கத்தின்கீழ் வர இயலாதென்றும் அறிவித்துவிட்டார். நாட்டின் பாதுகாப்பு, உள்நாட்டு அமைதி இவற்றைக் கருதி இந்த நிலையை இந்திய அரசு ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை. இதற்கிடையில் வெறிபிடித்த ரசாக்கர்கள் என்னும் கூட்டத்தார் தங்கள் தலைவன் காசிம் ரஸ்வி என்பவன்கீழ்க் கொள்ளையடித்தல் தீயிடல் முதலிய வன்முறைச் செயல்களில் இறங்கினார்கள். இந்தச் சூழ்நிலையில் இந்திய அரசு செப்டம்பர் மாதம் 13ஆம் தேதி போலீஸ் நடவடிக்கை எடுக்கவேண்டி வந்தது. இது வெற்றிகரமாக முடியவே ஹைதராபாத் ஓர் இராணுவ கவர்னரின் கீழும் சிவில் நிர்வாக அதிகாரியின் கீழும் வந்தது. 1949ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் அங்கே மக்கள் பிரதிநிதிகள் அடங்கிய அரசாங்கம் ஏற்பட்டது, முதலமைச்சர் அவை அமைக்கப்பட்டது. இவ் அமைச்சர் அவை 1949ஆம் ஆண்டு இந்தியாவின் அரசியல் அமைப்பை ஒப்புக்கொண்டது. இந்திய அரசாங்கத்திற்குச் சதையில்குத்தும் முள் போல அமைந்திருந்த மற்றொரு சமஸ்தானம் ஜம்மு காஷ்மீராகும். இங்கே முஸ்லிம்கள் பெரும்பான்மையாய் இருந்தபோதிலும் ஓர் இந்து அரசர் இதனை ஆண்டார். இதைச் சுற்றிலும் எல்லைப்புறத்தில் திபெத், சீனா, ருஷ்யா, ஆப்கானிஸ்தானம், பாகிஸ்தான், இந்தியா முதலியவை அமைந்து ஒரு பதட்டமான சூழ்நிலை ஏற்பட வகையிருந்தது. பாகிஸ்தான் இச்சமஸ்தானம் தன் செல்வாக்கில் இருக்கவேண்டுமென விரும்பியது. ஜம்மு, காஷ்மீர் மன்னரையும் மக்களையும் தங்களோடு இணைவதற்கு விருப்பமா என்பதைக் கேட்காமல் பாகிஸ்தான் வேறு வழிகளைக் கடைபிடித்தது.

வடமேற்கு எல்லைப்புறத்திலிருந்த மலைவாசிகள், பாகிஸ்தான் தூண்டுதலால் ஜம்மு, காஷ்மீர், சமஸ்தானத்தின் மீது படையெடுத்தனர். எனவே, அச்சமஸ்தானத்தின் மன்னருக்கு இந்தியாவின் உதவியை நாடுவதைத்தவிர வேறு வழியில்லை என்றநிலை ஏற்பட்டது. ஆனால், இந்திய அரசோ இந்தியாவோடு இணையாத சமஸ்தானத்திற்கு எவ்வாறு உதவுவது என்று தயங்கவேண்டிய நிலையில் இருந்தது. எனவே, அச்சமஸ்தானத்தின் மன்னரும் மக்கள் தலைவர்களும் இந்தியாவோடு இணைவதை ஒத்துக்கொண்டார்கள். ஆகையால் அவர்களுக்கு உதவிசெய்யும் நோக்கத்தோடு படையெடுத்த பகைவரைவிரட்ட இந்திய அரசாங்கம் முன்வந்தது. ஆனால், இந்நடவடிக்கை எடுப்பதற்கு முன்பாகவே காஷ்மீரின் ஒரு பகுதியைப் படையெடுப்பாளர் ஆக்கிரமித்துக்கொண்டு விட்டனர். இந்தப் பகுதி அஸாத் காஷ்மீர் என்ற பெயருடன் பாகிஸ்தானின் செல்வாக்கின் கீழும் கட்டுப்பாட்டின் கீழும் வந்தது. அமைதி மீண்டும் நிலைநாட்டப்பட்டபோது இச்சமஸ்தானத்தின் தலைவர்கள் அரசியல் நிர்ணயசபையைக் கூட்டி அதன் வாயிலாக நிரந்தரமாக இந்தியாவோடு இணைய உறுதி செய்துகொண்டு விட்டார்கள். இவ்வாறு காஷ்மீர் இந்தியாவோடு இணைவதில் பெரும் பங்கு கொண்டவர் காஷ்மீர் சிங்கம் என அழைக்கப்பட்ட ஷேக் அப்துல்லா என்பவர் ஆவார்.

ஜுனாகாத்: சமஸ்தான இணைப்பின் மற்றொரு பிரச்சினை சமஸ்தானமாக அமைந்தது ஜுனாகாத் ஆகும். இது சௌராஷ்டிராவில் அமைந்தது; ஒரு முஸ்லிம் நவாப்பால் ஆளப்பட்டது. மக்களோ பெரும்பான்மையானவர்கள் இந்துக்கள். இருப்பினும் மன்னர் ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி பாகிஸ்தானோடு சேர்ந்துவிட்டதாக அறிவித்துவிட்டார். இந்த முடிவு சௌராஷ்டிராவின் பாதுகாப்பிற்கு ஆபத்து விளைவிக்கும் என்று கருதப்பட்டது. இந்தச் சிறிய சமஸ்தானத்தோடும், பாகிஸ்தானத்தோடும் நடந்த பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்தன. எனவே, குழப்பமும், அமைதியின்மையும் ஏற்படுவதைத் தடுப்பதற்காகக் கத்தியவாரில் ஒரு சிறு படையை ஆயத்தமாக வைத்திருக்க இந்திய அரசு முடிவு செய்தது. இதைப் பொறுக்க முடியாத நவாப் பின்னர் அவருடைய திவான் ஆகிய இருவரும் பாகிஸ்தானுக்கு ஓடிவிட்டனர். பின்பு ராஜ்கோட்டில் ஒரு பிராந்திய கமிஷனரின் தலைமையில் இந்தச் சமஸ்தானத்தின் நிர்வாகம் நடைபெற்றது. மக்கள் கருத்தறிய ஒரு வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. இவ்வாக்கெடுப்பின் பயனாகப் பெரும்பாலான மக்கள் இச்சமஸ்தானம் இந்தியாவோடு சேரவேண்டும் என்று

தீர்ப்பளித்தார்கள். இது 1948இல் நடந்தது. பின்னர் 1949ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஜுனாகாத் சமஸ்தானம் கத்தியவார் இராஜ்யத்தோடு இணைந்துவிட்டது.

**பிரஞ்சுப் போர்த்துக்கீசிய பிரதேசங்கள் இணைப்பு:** சந்திர நாகூர், பாண்டிச்சேரி இவை இரண்டும் இந்தியாவில் இருந்த பிரெஞ்சுக் குடியேற்றங்கள் ஆகும். எனவே, இந்தியா சுதந்தரம் அடைந்த பின்பு பிரெஞ்சு அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தைகள் நடத்தப்பட்டன. இக்குடியேற்றங்களை மக்கள் விரும்பினால் இவை இந்தியாவோடு ஐக்கியப்படுவதைப் பற்றி தனக்கு அட்சேபணை ஏதும் இல்லை என்று பிரெஞ்சு அரசு சொல்லி விட்டது. இதன் பலனாக இவ்விரு குடியேற்றங்களின் மக்களும் இந்தியாவோடு இணைவதை விரும்பியதால் 1954ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதலாம் தேதி இக்குடியேற்றங்கள் இந்திய அரசாங்கத்துக்குச் சட்டபூர்வமாக மாற்றப்பட்டன.

**கோவா, டையு, டாமன்:** இந்த மூன்று குடியேற்றங்களும் இந்திய மண்ணிலிருந்த போர்த்துக்கீசிய குடியேற்றங்களாகும். தொடக்கத்தில் போர்த்துக்கீசிய அரசுக்கு இவற்றின்மீது தனக்கிருந்த உரிமையை விட்டுக்கொடுக்கவோ இவற்றிற்குச் சுதந்தரம் அளிக்கவோ விருப்பமில்லை. எனவே, இதற்காகப் போராடிய கோவா, காங்கிரசு ஸ்தாபனம் கடுமையாக ஒடுக்கப் பட்டது. எனவே, அதன் தலைவர்கள் இந்தியாவிற்கு வந்து ஒரு தற்காலிக அரசாங்கத்தை நிறுவினார்கள். நீண்டநாள் பொறுத்துப்பார்த்துப் பின்னர் இந்திய அரசாங்கம் இது சம்மந்தமாக நடவடிக்கை எடுக்க முடிவுசெய்தது. ஏனெனில் இவை இந்தியாவைச்சேர்ந்த பகுதி ஆகும். 1961ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 18ஆம் தேதி இந்திய ராணுவத்தின் உதவியுடன் இவ்விடங்கள் கைப்பற்றப்பட்டன. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் திருத்தம் செய்யப்பட்டு இவையும் இந்திய யூனியன் பிரதேசங்கள் ஆக்கப்பட்டன.

**மொழிவாரி மாகாணங்கள்:** இந்தியா சுதந்தரம் பெற்ற பிறகு மொழி அடிப்படையில் மாகாணங்களை மாற்றி அமைப்பது நிர்வாக எளிமைக்கு உகந்தது என்று கருதப்பட்டது. ஒவ்வொரு மாநிலமும் மாநில மொழியை அரசாங்க அலுவல்களுக்கு உப யோகப்படுத்துவது உகந்தது என்று கருதப்பட்டது. இதனால் பாமர மனிதனின் அரசாங்கம் என்ற பெருமை மாநிலங்களுக்குக் கிடைக்கும் என்று கருதப்பட்டது. மேலும், பெரும்பாலான மக்களுக்குப் பயனுள்ள வகையில் கல்வி மாநில மொழிகள் மூலம் தான் கிட்டும் என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

எனவே, இந்திய அரசாங்கமும் மாநில அரசுகளும் எல்லா மொழிகளும் ஏற்றம்பெற தக்க நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டுள்ளன.

பிரதேச மொழி அல்லது தாய் மொழியின் முக்கியத் துவத்தை அறிந்துகொண்ட அதேவேளையில் மொழிவெறி குறுகிய பிரதேசபக்தி இவை ஏற்படாமலும் காக்க வேண்டிய நிலையும் உண்டு. ஒரு மாநிலத்தில் குடிமக்களின் முழு ஆளுமை வளர்ச்சி தாய் மொழி வழிக் கல்வியால்தான் இயலும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. மொழிவாரி மாகாண அமைப்புக்கு வித்திட்டவர் ஆந்திர மாகாணத்தைச் சேர்ந்த பொட்டி ஸ்ரீராமுலு ஆவார். இவர் 1953ஆம் ஆண்டு மொழிவாரி மாகாண அமைப்பிற்காக உண்ணாவிரதம் இருந்து உயிர் விட்டார். எனவே, கொள்கையளவில் மொழிவாரி மாகாண அமைப்பு ஒப்புக்கொள்ளப்பட்டது. அவ்வாறு முதன் முதலாக ஏற்பட்ட மொழிவாரி மாகாணம் ஆந்திர மாகாணம் ஆகும். இது 1953ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஏற்பட்டது. ஆந்திரா பெற்ற வெற்றி பிற மாகாணங்களிலும் மொழிவாரி மாகாணக்கிளர்ச்சிகள் தொடங்கக் காரணமாயிற்று. எனவே, இதைப்பற்றி ஆராய அப்போதைய பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு 'பசல் அலி' என்பவரின் தலைமையின்கீழ் ஒரு கமிஷனை அமைத்தார். இந்தக் கமிஷன் மொழி அடிப்படையில் மாகாணங்களை மாற்றியமைக்க பரிந்துரை செய்தது. 1956ஆம் ஆண்டு இதை அமுல்படுத்தும் முறையில் சட்டம் இயற்றப் பட்டது. எல்லா மாகாணங்களும் மொழி அடிப்படையில் மாற்றி அமைக்கப்பட்டன. பஞ்சாப், பம்பாய் இவ்விரு மாகாணங்களில் மாத்திரம் இரு மொழிகள் அமைந்திருந்தன.

பின்பு மகாராஷ்டிரத்தில் ஏற்பட்ட கிளர்ச்சியின் காரணமாக மகாராஷ்டிரமும், குஜராத்தும் மொழிவாரி அடிப்படையில் பிரிந்தன. 1966ஆம் ஆண்டு மொழி அடிப்படையில் பஞ்சாப் மாநிலம் பஞ்சாபி மொழிபேசும் மக்கள்கொண்ட பஞ்சாப் மாநிலம், ஹிந்தி பேசும் மக்கள் கொண்ட ஹரியானா மாநிலம் என இரு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது.

**பிராந்திய எல்லைகளைச் சரி செய்தல்:** மத்திய பாரத், போபால், விந்தியப் பிரதேஷ் இவைகள் மத்தியப்பிரதேசத்தோடு சேர்க்கப்பட்டன. பாடியாலா, கிழக்குப் பஞ்சாப் ஆகியவை பஞ்சாப் மாநிலத்தோடு சேர்க்கப்பட்டன. திருவாங்கூர், கொச்சின், மலபார் இராஜ்யங்கள் இணைந்து கேரள இராஜ்யம் ஆயின. இம்மொழிவாரி மாநிலங்களுக்கு இடையே ஏற்படும்

பிரச்சினைகளைத் தீர்க்க பிராந்தியக் கௌன்சில்கள் அமைக்கப் பட்டன. தற்போது இந்தியாவில் 22 மாநிலங்களும் நடுவண் அரசின் நேர் ஆட்சியின் கீழ் உள்ள 9 பிரதேசங்களும் உள்ளன.

### அயல்நாட்டு இயல்முறை

இந்தியாவின் அயல்நாட்டு இயல்முறையின் சிற்பி பண்டித ஜவஹர்லால் நேரு ஆவார். இவர் இந்தியாவின் முதல் பிரதம மந்திரி ஆவார். 'கௌரவத்தோடு சமாதானம்' என்பதே அவர்தம் அயல்நாட்டு இயல்முறை ஆகும். இதன் முக்கியத் தன்மைகளில் ஒன்று 'பஞ்ச சீலம்' ஆகும். நாடுகள் நடந்து கொள்ள வேண்டிய ஐந்து ஒழுக்கங்களை இது கூறுகிறது. இதன் மூலம் போரைத் தவிர்த்து அமைதியாகவும் கௌரவத்தோடும், முன்னேற்றத்தோடும், வளமோடும் அனைத்து நாடுகளும் வாழ முடியும். பஞ்சசீலத்தின் ஐந்து முக்கியக் கொள்கைகளாவன:



படம் 37.
ஜவஹர்லால் நேரு

(1) எல்லா நாடுகளும் சமாதான சகவாழ்வு வாழவேண்டும். (2) வலிமைமிக்க நாடுகள் வலிமை குறைந்த நாடுகளைத் துன்புறுத்தாமை வேண்டும். (3) நாடுகள் மற்ற நாடுகளின் உள்விவகாரங்களில் தலையிடாமை வேண்டும். (4) தேவையுள்ள அனைத்து நாடுகளுக்கும் ஆக்கமும் உதவியும் அளித்தல் வேண்டும். (5) எல்லா நாடுகளின் பிரதேசப் பாதுகாப்பிற்கு மரியாதை அளிக்க வேண்டும். இக்கொள்கைகள் 1955ஆம் ஆண்டு ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் 'பாண்டுங்' மாநாட்டில் (Bandung Conference) உருவாக்கப்பட்டன.

### கூட்டுச்சேராக் கொள்கை

இந்தியாவின் அயல்நாட்டியல் முறையின் மற்றொரு முக்கிய அம்சம் கூட்டுச்சேராக்கொள்கை ஆகும். இதன் பொருள் இந்தியா இப்பொழுது, உலகில் இருக்கிற ஒருபுறம் அமெரிக்கா ஐக்கிய நாட்டாலும், மற்றொருபுறம் ரஷ்யாவாலும் தலைமை தாங்கி நடத்துகிற எந்த ஆதிக்கக்குழுவிலும் சேராது.

### அகில உலக இயல்முறை

சமாதான சகவாழ்வை இந்தியா கடைபிடித்தபோதிலும் 1962ஆம் ஆண்டு சீனாவோடு அது போர்செய்ய நேரிட்டது. பஞ்சசீலக் கொள்கைகளை மறந்து சீனா நம் நாட்டின் ஹிமாலயப் பிரதேசங்களில் பல பகுதிகளை ஆக்ரமித்துக் கொண்டது. 1965ஆம் ஆண்டு பாகிஸ்தானின் காஷ்மீர் படையெடுப்பின் மூலம் இந்தோ-பாகிஸ்தான் சண்டை ஏற்பட்டது. இதில் இந்தியா வெற்றி அடைந்த போதிலும் ரஷ்யப் பிரதமர் 'கோஸிஜின்' அவர்கள் நடத்திய தாஷ்கண்ட் மாநாட்டில் கலந்து கொண்டு இந்தியா சமாதானத்திற்கு உதவியது. தாஷ்கண்ட் ஒப்பந்தப்படி இந்தியாவும் பாகிஸ்தானும் தங்களிடையே ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்க்கவும், சண்டையைத் தவிர்க்கவும் உரையாடல் முறையைப் பின்பற்ற ஒப்புக்கொண்டன. அண்மையில் 1971ஆம் ஆண்டு பாகிஸ்தான்—இந்தியா போரில் வெற்றி பெற்ற போதிலும் இந்தியா பாகிஸ்தானுடன் சமாதானப்பேச்சு வார்த்தை நடத்தவும் வேற்றுமைகளைப் பேசித்தீர்க்கவும் உடன்பட்டது. அதன் சமாதான நோக்கத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு, சிம்லா மாநாட்டில் இந்தியா—பாகிஸ்தான் பிரதமர்கள் தங்கள் நாட்டிற்கிடையே உள்ள தீர்க்கப்படாத பிரச்சினைகளைச் சமாதான முறையில் பேசித்தீர்த்துக்கொள்ள ஒப்புக்கொண்டுள்ளார்கள். பாகிஸ்தானுடன் நம் உறவு இன்னும் நட்பின் அடிப்படையில் அமைந்துள்ளது. நம் கௌரவம் பாதிக்கப்படாமல் நேசக்கரம்நீட்டும் பாகிஸ்தானுக்கு எப்பொழுதும் கைகொடுக்க நாம் ஆயத்தமாய் இருக்கிறோம்.

உலகின் பல நாடுகளுக்கு நல்லெண்ண தூதுகோஷ்டிகள் நம் நாட்டிலிருந்து அனுப்பப்படுகின்றன. பிறநாடுகளுடன் கலைக்குழு பரிமாற்றங்கள் நடைபெறுகின்றன. நம் நாட்டு கலைக்குழுக்கள் பிறநாட்டிற்கு அனுப்பப்படுகின்றன. வியாபார ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்படுகின்றன. பல்கலைக்கழகங்களின் பேராசிரியர்களும், விஞ்ஞானிகளும், அறிவாளிகளும் ஊக்குவிக்கப்படுகிறார்கள். இவையெல்லாம் தேசங்களிடையே நல்லுறவு ஏற்பட வழிவகை செய்கின்றன. தொழில், விஞ்ஞான நுட்ப அறிவும், பிறநாடுகளோடு பெற்றுக்கொள்ளும்-கொடுக்கும் உறவுக்ளும் வளர்கின்றன.

### காமன்வெல்த் நாடுகள் சபையில் உறுப்பினர்

இந்தியா பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து சுதந்தரம் அடைந்து விட்டபோதிலும் பிரிட்டிஷ் அரசினைத் தலைவராகக் கொண்ட காமன்வெல்த் நாடுகளில் உறுப்பினராக இருந்து வருகிறது.

### ஐக்கிய நாடுகள் சபையில் உறுப்பினர்

ஐக்கிய நாடுகள் சபை ஆரம்பிக்கப்பட்ட நாளிலிருந்தே அதன் பொதுப் பேரவையில் இந்தியா ஓர் உறுப்பினராக இருந்து வருகிறது. இரண்டு ஆண்டுகள் அதன் நிர்வாகச் சபையான பாதுகாப்புக் கௌன்சிலிலும் உறுப்பினராக இருந்திருக்கிறது. நம் நாட்டைச் சேர்ந்த திருமதி விஜயலக்ஷ்மி பண்டிட் ஐக்கிய நாடுகள் சபையின் பொதுப் பேரவையின் தலைவராக இருந்தார் என்பதும் நாம் பெருமை படுவதற்குரிய செய்தியாகும். சைப்ரஸ், மத்திய கிழக்கு நாடுகளில் அமைதியை நிலைநாட்ட ஐக்கிய நாடுகளின் சபை சார்பாக அனுப்பி வைக்கப்பட்ட அகில உலக அமைதிப்படையில் நம் நாட்டின் வீரர்களும் சிறப்புறப் பணிபுரிந்திருக்கின்றனர். 1956ஆம் ஆண்டு இங்கிலாந்தும், பிரான்சும் சூயஸ் கால்வாய் பிரதேசத்தைத் தாக்கியபொழுது நம் நாடு ஐக்கிய நாடுகள் சபையின் சார்பில்நின்று அச்செயலைக் கண்டித்தது. வட தென் கொரியாக்கள் போரில் இறங்கிய பொழுது அப்போரினை முடிவுக்குக் கொண்டுவர ஐக்கிய நாடுகளின் முயற்சிக்கு முழுமனதுடன் ஒத்துழைத்தது. ஐக்கிய நாடுகளுக்கு ஆதரவாக, நம் நாடு எப்போதும் இனவெறிக் கொள்கையையும், வல்லரசுகளின் அணு ஆயுதத்தயாரிப்புப் போட்டியினையும் கண்டித்து வந்திருக்கிறது. கருத்து வேற்றுமைகள் கொண்டபோதிலும், சீனா, ஐ.நா. சபையில் அங்கம் வகிக்க இந்தியா ஆதரவளித்து, இன்று அந்நாடு ஐ. நா. சபையில் உறுப்பினராக இருப்பதற்குக் காரணமாயிருந்தது. ஐ. நா. சபையின் பொருளாதார, சமூக, உடல்நல, கலாசார நடவடிக்கை எல்லவாற்றிலும் இந்தியா சிறந்த பங்குகொண்டுள்ளது. நமது பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி கிழக்கு, மேற்கு நாடுகளிடையேயுள்ள நல்லுறவுக்காகப் பாடுபட்டமைக்கு 1982ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் ஹதாண்ட் நினைவுப் பரிசு வழங்கப்பட்டது.



படம் 38.
திருமதி இந்திராகாந்தி

### ஐந்தாண்டுத் திட்டங்கள்

எல்லாத்துறையிலும் சீரான முன்னேற்றம் பெற ஒவ்வொரு நாட்டிற்கும் திட்டமிட்ட பொருளாதாரம் இன்றியமையாதது.

எனவே, நம் இந்திய நாடும் 1948ஆம் ஆண்டு ஒரு திட்டக் கமிஷனை அமைத்தது. நம் நாட்டின் பொருளாதார மூலாதாரங் களைச் சிறப்பாக உபயோகித்து முன்னேற, 'மாதிரி அமைப்புத் திட்டங்கள்' தீட்டியது.

## முதலாம் ஐந்தாண்டுத் திட்டம் (1951-56)

மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல், வளமான பல திறப்பட்ட வாழ்க்கைவாழ வாய்ப்புகள் ஏற்படுத்துதல் போன்ற நோக்கத்துடன் இத்திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. ஒரு தலை முறைக்குள் நாட்டு மக்களின் தனி நபர் வருவாயை இரட்டிப் பாக்க இத்திட்டம் நினைத்தது. ஒவ்வொரு திட்டமும் ஐந்தாண்டு காலவரையரையில் இயங்கவும், பின்னர் அதன் முன் னேற்றத்தை மதிப்பீடு செய்வதற்கும் வழிவகை செய்யப்பட்டது.

1951-56ஆம் ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்ட முதல் ஐந்தாண்டுத் திட்டம்—விவசாயம், சிறுபாசன வசதிகளைப் பெருக்குதல், போக்குவரத்து வசதிகள், மின்சக்தித்திட்டங்களை உருவாக்கல் போன்ற அன்றைய அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்தது. இத்திட்டத்தின் மொத்த செலவான 3750 கோர்டி ரூபாயில் 30% விவசாயத்திற்கும், 27% நீர்ப்பாசன வசதி பெருக்கத்திற்கும், மின்சக்திப் பெருக்கத்திற்கும், 27% போக்குவரவு செய்தி விரிவுக்கும் செலவிடப்பட்டது. இதன் விளைவாக உணவுப் பொருள்கள் உற்பத்தி 20% பெருகிற்று. பருத்திச் சாகுபடி 25% உயர்ந்தது. எண்ணெய் வித்துக்கள் உற்பத்தி 8% உயர்ந்தது. ஆறு மில்லியன் ஏக்கர்களுக்கு மேற்பட்ட நிலங்கள் நீர்ப்பாசன வசதிகளைப் பெற்றன. மேலும் 10 மில்லியன் ஏக்கர் நிலங்கள் சிறிய நீர்ப்பாசன வசதிகளால் நன்மை பெற்றன. விவசாயப்பொருள்களின் உற்பத்திப் பெருக்கத்தின் காரணமாகத் தேசிய வருவாய் குறிப்பிட்ட 12% விகிதத்திற்கு மேலாக 18% ஆக உயர்ந்தது.

## இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் (1956-61)

1954ஆம் ஆண்டு பாராளுமன்றம் தீர்மானித்த சோஷலிச சமுதாயத்தை அமைப்பதை இத்திட்டம் குறிக்கோளாகக் கொண்டது. விவசாயத்திலிருந்து கனரகத் தொழில்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. முதலாவது திட்டத்தில் 4% தான் கனரகத் தொழில்களுக்குச் செலவிடப்பட்டது. இத் திட்டத் ன் மூலம் மொத்த பணம் 7,772 கோடியில் 20% இவற்றி காகச் செலவிடப்பட்டது. இவ்வாறு தொழில் துறைப்

பகுதியில் அதிக முதலீடு செய்ததால், எஃகு, நிலக்கரி எடுத்தல், இரசாயனப்பொருள்கள் முதலியவற்றின் உற்பத்தி இருமடங்கு அதிகரித்தது. இதனால் இந்திய குடிமகனுக்கும் நன்மை ஏற்பட்டது. இந்த 10 ஆண்டுகளில் அவனுடைய தனி நபர் வருமானம் ரூ. 284இலிருந்து ரூ. 330 ஆக உயர்ந்தது. கனரக இயந்திரத் தொழில்கள் அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப் பட்டன. நுகர்பொருள் உற்பத்தி தனியார் துறைக்கு ஒதுக்கப் பட்டது. இவ்வாறு நம் பொருளாதாரம் கலப்புப் பொருளாதார மாக மாறியது. அதாவது அரசுத்துறையும் தனியார் துறையும் தொழில் உற்பத்தியில் ஈடுபடுகின்றன.

## மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் (1961-66)

இத்திட்டத்தின் நோக்கங்களாவன : (1) வளரும் மக்கள் தொகைக்கேற்ப போதுமான உணவு உற்பத்தி செய்தல் (2) இந்தியாவின் ஆதாரத்தொழில்களான எஃகு, எரிபொருள், மின்சக்தி, இரசாயனப்பொருள்கள் உற்பத்தி இவற்றை விரிவு படுத்துதல். (3) வேலைவாய்ப்புகளை அதிகரிப்பதன்மூலம் அதிக மனித சக்தி உபயோகப்படுத்தப்பட இது வகை செய்தது. (4) வருமானத்திலும், செல்வத்திலும், சமூகத்தில் மக்களிட மிருக்கும் வித்தியாசங்கள் குறையும் என எதிர்பார்க்கப்பட்டது. (5) இறுதியாகத் தேசிய வருமானம் ஆண்டிற்கு 5% உயரும் என எதிர்பார்க்கப்பட்டது. இத்திட்டத்தின் மொத்தச் செலவு 12,767 கோடி ரூபாய்களாகும்.

இந்தியா-பாகிஸ்தான் போரின் காரணமாக இத்திட்டத்தின் எதிர்பார்ப்புகள் ஏற்படவில்லை. இதோடுகூட நாட்டின் பல்வேறு பாகங்களில் பஞ்ச, வறட்சி நிலையும் ஏற்பட்டது. எனவே ஒவ்வோர் ஆண்டின் தேவைக்கேற்ப ஆண்டுதோறும் திட்டமிட அரசு தீர்மானித்தது. இவை ஓராண்டுத் திட்டங்கள் என அழைக்கப்பட்டன. முதல் ஓராண்டுத் திட்டம் 1966-67இல் தொடங்கியது. இதனால் நம் பொருளாதாரம் சீரடையவில்லை. எனவே, 1967-68ஆம் ஆண்டுத் திட்டத்தில் இயல்முறைமாற்றம் ஏற்பட்டது. திட்டம் உடனடித் தேவைகளையும், குறுகிய காலத் திட்டங்களையும் அடிப்படையாக அமைத்துச் செயல் பட்டது. 1968-69ஆம் ஆண்டும் இதே கொள்கை பின்பற்றப் பட்டது. இது அதிக அளவில் இரசாயன உற்பத்திப் பொருள்களைப் பெருக்கவும், பூச்சிகொல்லிகளை உற்பத்தி செய்யவும், டிராக்டர்கள் உற்பத்தி செய்தலையும் முக்கியமாகக் கொண்டது. இதன்மூலம் நாடு தன்னிறைவு பெறும் எனக் கருதப்பட்டது.

**நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் (1969-74)**

நமது பொருளாதாரத்தில் வளர்ச்சி ஏற்பட்டதால், இத் திட்டத்தில் மொத்தச் செலவு 24,298 கோடிகளாக நிர்ணயிக்கப் பட்டது. இத்திட்டத்தின் நோக்கங்களும் முன் திட்டங்களின் படியே மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல், சமூகத்தின் தாழ்த்தப்பட்ட பின்தங்கின மக்களின் நிலையை உயர்த்துதல், செல்வ நிலையில் ஏற்பட்டுள்ள வித்தியாசங்களைக் குறைத்தல் முதலியனவாம். இதன் மிக முக்கியத் திட்டங்களாவன: (1) கிராமப்புற வளர்ச்சியும், அவைகளில் வேலைவாய்ப்பு அதிகரிப்பும், (2) கிராமப்புற குடிநீர்வசதிப் பெருக்கம், (3) சிறப்பான கிராம வேலைவாய்ப்புத் திட்டம், (4) ஆரம்பக் கல்வி, (5) சத்துணவுத் திட்டங்கள் (6) நகரப் புறவளர்ச்சி, (7) வீட்டுவசதிப் பெருக்கமும், சேரிகள் மேன்மையும் மக்களின் நன்மைக்கான இவ்வடிப்படை தேவைகளோடு, வெள்ளக்கட்டுப் பாடு நடவடிக்கைகளும், மின்சக்தி அதிகரிப்பும் இத்திட்டத்தில் முக்கிய இடம்பெற்றன. கிராமங்களில் சிறு தொழில்களும், பிறதொழில்களும், செய்திப்போக்குவரவும், கல்வி, விஞ்ஞான ஆராய்ச்சியும், உடல் நலம், குடும்ப நலம், சுகாதார வசதிகள், தொழிலாளர் நலன், கைவினைப்பயிற்சி முதலியனவும் இத் திட்டத்தில் முக்கிய இடம்பெற்றன.

இத்திட்டத்திற்கான மூலதனத்தைப்பெற நடுவண் அரசு மிக முக்கிய நடவடிக்கை ஒன்றை எடுத்தது. 50 கோடி ரூபாய் வைப்பு நிதியுள்ள 14 ஷெட்யூல்டு வங்கிகள் தேசியவுடைமை யாக்கப்பட்டன. இது 1969ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் நடந்தது. இவைகளிலிருந்து கிடைத்த மூலதனம் பொருளாதார செயல்பாடுகளை விரிவாக்கவும், பின்தங்கிய கிராமப்புறங்களில் வேலைவாய்ப்பை அதிகரிக்கவும் பயன்படுத்தப்பட்டன.

**ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் (1974-79)**

இத்திட்டத்தின் முக்கிய நோக்கங்களாவன: (1) நேரடியாக வறுமையை ஒழிக்கத் தாக்குதல் நடத்தல், (2) கிராமப்புறங்களில் அதிக வேலைவாய்ப்புகள்மூலம் வருவாயை அதிகரித்தல், நில மற்றோர்க்கு நிலம் வழங்கல் போன்ற நிலச்சீர்திருத்தங்களை மேற்கொள்ளுதல் முதலியனவாம்.

பின்வரும் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்திசெய்ய இத்திட்டம் எண்ணியது. (1) 14 வயதுவரையுள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் ஆரம்பக்கல்வி அளித்தல், (2) குடும்ப நலம்-குழந்தைகளுக்குச் சத்துணவு இணைந்த குறைந்தபட்ச சுகாதார வசதிகளை அளித்தல், (3) கிராமப்புறங்களுக்குக் குடிநீர்வசதி

அளித்தல், (4) நிலமற்ற தொழிலாளர்களுக்கு வீட்டுமனை வழங்குதல், (5) கிராமப்புற சாலைகள் அமைத்தல், (6) கிராமப் புற மின்சார வசதி செய்தல், (7) பெரிய் நகரங்களில் சேரிகளைச் செம்மையாக்குதல் முதலியன.

வறுமையைக் குறைக்க நகர்ப்புறச் சொத்திற்கு உச்சவரம்பு விதித்தலும் நிலச்சீர்திருத்தத்தில் மேற்கொள்ளப்பட்டது.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மிக முக்கிய இலட்சியம் பின் தங்கிய பிரதேசங்களை, குறிப்பிட்ட குறைந்தளவு தேசிய மட்ட நிலைக்குக் கொண்டு வருதல். மாவட்ட, கோட்ட நிலை களில் திட்டச்செயல்பாடுகளில் அம்மக்களின் பங்கை இத்திட்டம் வற்புறுத்தியது. விரிவடையும் பொருளாதாரத்திற்கு உதவும் முறையில் இத்திட்டம் எஃகு, சிமென்டு, உரங்கள், மின்சக்தி இவற்றின் அதிக உற்பத்திக்கு முக்கியத்துவம் அளித்தது. 1975ஆம் ஆண்டு பிர்கடனப்படுத்தப்பட்ட நெருக்கடி நிலை பாரதப் பிரதமர் திருமதி இந்திராகாந்தியின் இருபது அம்ச திட்டத்தின்மூலம் வறுமை நிலைமீது வலுவான போர் தொடுத்தது. இதன் காரணாக வீட்டுமனைகளோடு, நிலமற்ற தொழிலாளர்களுக்கு, உணவு உற்பத்தி நிலமும் அளிக்கப் படுகின்றன. விவசாயிகள், விவசாயக் கருவிகள் விதைகள் வாங்க சிறுதொகை கடன் பெறுகின்றனர். கிராமப்புற விவசாயிகள் கடன்பட்ட நிலை நீக்கப்படுகிறது. கடத்தல் பேர்வழிகள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டார்கள். கருப்புச் சந்தைக் காரர்களும் கண்டுபிடிக்கப்பட்டுத் தண்டனைக்குள்ளாக்கப் பட்டனர். திறமையற்ற அரசு அதிகாரிகள் ஓய்வுபெறும் காலம் அடைவதற்கு முன்னமேயே கட்டாய ஓய்வில் அனுப்பப் பட்டார்கள். உற்பத்தி திட்டங்களிலும், அவற்றின் நிர்வாகத்தில் பல நிலைகளிலும் தொழிலாளர்களுக்கு பிரதிநிதித்துவம் தரப்பட்டது. சுருங்கச் சொன்னால் ஒழுங்கும், கட்டுப்பாடு நிலையும் எங்கும் காணப்பட்டன. அன்றாடப் பொருள்களின் விலை சரிய, விலைக் கட்டுப்பாடு கொணரப்பட்டது. பணவீக்க நிலை கட்டுப்படுத்தப்பட்டது. இத்திட்டத்தில் இறுதிப் படிவம் 1976இல் தேசியக் குழுவிற்குமுன் வைக்கப்பட்டது. வளர்ச்சி விகிதம் அதிகரிக்க கவனத்தோடு உரிய மாற்றங்களும் செய்யப் பட்டன. நடைமுறை சாத்தியமான அணுகுமுறை இத்திட்டத் த்தைச் சிறந்ததாகச் செய்திருக்கிறது.

## ஆறாவது ஐந்தாண்டுத் திட்டம் (1978-79, 1979-80, 1980-85)

இந்திரா காங்கிரஸ் மந்திரிசபை அமைத்தபோது ஜனதா அரசின் 1978-79, 79-80 ஆண்டிற்கான ரோலிங் ஆண்டுத்

திட்டத்தை கைவிட்டு ஆறாவது புதிய ஐந்தாண்டுத் திட்டத்தை உருவாக்கியது.

**திட்டத்தின் மொத்த நிதி ஒதுக்கீடும் பகிர்வும்:** ஆறாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 1,16,240 கோடி ரூபாய் செலவு செய்ய மொத்தமாகத் திட்டமிடப் பட்டிருக்கின்றது. இதில் 69,380 கோடி அல்லது மொத்தத்தில் 59.7% பொதுத்துறையில் செலவழிக்கப்படும். இச் செலவிலும் ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தைக் காட்டிலும் 76% அதிகம். தனியார்த் துறைக்கு 46,860 கோடி நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. பொதுத்துறை நிதி ஒதுக்கீட்டில் 69,300 கோடி நடுவண் அரசாலும், 43,380 கோடி மாநில அரசுகளாலும் செலவழிக்கப்படும்.

**வளர்ச்சி விகிதம்:** இத்திட்டத்தின்படி வளர்ச்சி விகிதம் ஆண்டுதோறும் 4.7%ம், திட்ட முடிவு ஆண்டுக்குள் 5.5% ஆகவும் இருக்கும்.

**நோக்கங்கள்:** புதிய ஆறாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய நோக்கங்களாகப் பின்வரும் மூன்றும் குறிக்கப் பட்டுள்ளன. (1) அனைவருக்கும் வேலைவாய்ப்பு நிலையில் கணிசமான முன்னேற்றம். (2) ஏழ்மையை அகற்றுவதில் திட்டமான முன்னேற்றம். (3) செல்வச் சமநிலைப் பகிர்வுள்ள சமுதாயத்தை உருவாக்குதல். இந்நோக்கங்களை நிறைவேற்ற பின்வரும் செயல் முறைகள் கடைப்பிடிக்கப்படும்.

1. வேலையின்மையையும் தேவையைவிட குறைந்த அளவில் வேலையில் அமர்த்துவதையும் நீக்குதல்.

2. மக்களில் ஏழைப்பிரிவினர்களின் வாழ்க்கைத் தரத்தைக் கணிசமாக உயர்த்துதல்.

3. மக்களின் அடிப்படைத் தேவைகளான பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதி, முதியோர் கல்வி, ஆரம்பக்கல்வி, சுகாதார மேம்பாடு, கிராமப்புற சாலைகள், நிலமற்றோருக்கு வீட்டு மனைகளும் வீடுகளும், நகரப்புற சேரிவாழ் மக்களின் அடிப்படை வசதிப் பெருக்கம் முதலியவற்றில் மாநிலங்கள் அதிகம் செலவிட வகை செய்தல்.

4. இந்நோக்கங்களை அடைந்துகொண்டிருக்கும்போதே நாட்டின் பொருளாதார வளர்ச்சியை முன்பு இருந்ததைவிட அதிக விகிதத்தில் வளர வகை செய்தல்.

5. வருவாய், செல்வம் இவற்றில் மக்களிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் கணிசமாகக் குறைக்க முற்படுதல்.

**6. பிற நாட்டு சார்பற்ற தன்சார்புமிக்க சுயதேவைப் பூர்த்தியைப் பெறுதல்.**

இந்நோக்கங்களை அமுல்படுத்தும் அல்லது அடையும் முக்கியத் துறைகளையும் இத்திட்டம் குறிப்பிட்டிருக்கிறது. அவை முறையே விவசாயம், கிராம சிறு அளவைத் தொழில்கள் (குடிசைத் தொழில்கள்) பிராந்தியவாராகத் திட்டம் அமைத்தல், அடிப்படைத் தேவைகளைப் பூர்த்திசெய்தல் முதலியனவாகும்.

**திட்டத்திற்கு நிதிதிரட்டும் வழி:** இத்திட்டத்திற்காக நிதியினைத் திரட்ட வரிவிதிப்பின் அடிப்படையை அகலப்படுத்த ஆலோசனைகள் அளிக்கப்பட்டுள்ளன. மறைமுக வரிகளை அதிகரித்தல் மூலம் வருவாயைப் பெருக்கிடுதல், பல்வேறான சமூக பொருளாதார நோக்கங்களைக் கருத்தில் இருத்திப் படிப்படியாக நேர்முக வரியை அதிகரித்தல் முதலிய வழிவகைகள் கூறப்பட்டுள்ளன. உதவிப்பணத்தொகையைக் குறைத்தல், பொதுத்துறை வேலைகளில் விலை நிர்ணய முறையை மாற்றியமைத்தல், அரசு ஊழியர்களின் சேமநல நிதி விகிதத்தை 6%லிருந்து 8.3%க்கு உயர்த்துதல், கட்டாய சேமிப்புத் திட்டத்தைத் தொடர்ந்து அமுல்படுத்துதல், கட்டாய முழு இன்சூரன்ஸ் திட்டத்தை எல்லாத் துறைகளிலும் புகுத்துதல் முதலியன அவ்வழிமுறைகளாகும்.

மாநிலங்கள் தங்கள் ஆறாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கான நிதியினைப்பெற பின்வரும் வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன. விவசாய வரி விதிப்பு அல்லது படிப்படியாக வரியினை ஏற்றுதல், உபரி நில வருவாய்மீதும் பணப்பயிர் நிலத்தின்மீதும் வரிகளை உயர்த்துதல், மார்க்கட் வரிகள், நீர்ப்பாசன, மின்சாரக் கட்டணங்களை உயர்த்துதல் இவற்றுள் அடங்கும். இவற்றைத் தவிர நிலம், சொத்து இவற்றின்மீது கிடைக்கும் லாபத்தில் ஒரு பகுதியைப்பெறல், கிராமப்புற கடன்பத்திரங்கள் அளித்தல் முதலியவையும் பரிந்துறை செய்யப்பட்டுள்ளன.

## திட்ட இலக்குகள்

**கிராமப்புற விவசாய வளர்ச்சி:** இப்பகுதி மிக முக்கியமான கவனத்தைப்பெறும். இதற்கு முன்னுரிமை வழங்கப்படும். தானிய உற்பத்தியைப் பெருக்கவும், நீர்பாசன வசதி பெறும் நிலத்தின் அளவைப் பெருக்கவும், தானிய உற்பத்தி நிலத்தின் அளவை அதிகரிக்கவும் வழிவகை செய்தல் வேண்டும். மேலும் உற்பத்தியை அதிகரிக்க விதைகளைத் தரமானதாக்கி உபயோகித்தல், முழுமையான விரிவாக்கத்திட்டம், விவசாயிகள் கடன்

வசதிகளைப் பெருக்கிடுதல், தானியங்களை விற்கும் சந்தை வசதிகளைப் பெருக்குதல் இதில் அடங்கும். சேமிப்பு வசதியை யும், முறையையும் செம்மைப்படுத்துதல்மூலமாக உணவு த்தானிய உற்பத்தி 121 மில்லியன் டன்னிலிருந்து 141 மில்லியன் டன்னாக உயர எதிர்பார்க்கப்படுகிறது. பருத்தி உற்பத்தி 64.50 லட்சம் பேல்களிலிருந்து 81.50 லட்சம் பேல்களாக அதிகரிக்கும். விவசாயத்தின் ஆண்டு வளர்ச்சி 3.98% ஆக நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது.

**நீர்ப்பாசனம்:** சிறிய நீர்ப்பாசன வசதித் திட்டங்களின் மூலமாக நீர்ப்பாசன வசதிபெரும் 8.6 மில்லியன் ஹெக்டேர் நிலங்களின் அளவு 17 மில்லியன் ஹெக்டேர் அளவுக்கு அதிகரிக் கப்படும்.

**சக்தி:** திட்டக் காலத்தில் மற்றோர் அணுமின்சக்தி நிலை யத்தை உருவாக்கவும், சென்னை அணுசக்தி நிலைய அமைப்பை முடிவாக நிறைவேற்றவும், நரோரா என்ற இடத்தில் முதல் யூனிட்டை ஆரம்பிக்கவும் வழிவகை செய்யப்பட்டிருக்கிறது.

**பெட்ரோலியம்:** எண்ணெய் வளங்காணும் முயற்சியைத் தீவிரப்படுத்த திட்டங்கள் மேற்கொள்ளப்படும்.

**தொழில்கள்:** தொழில் பெருக்க அணுகுமுறைத் திட்டம் விரிவாக்கப்படவும் தீவிரமாக்கப்படவும் அதற்காகப் பின்வரும் வழிமுறைகள் கையாளப்பெறும்:

(அ) தற்போதைய வசதி நிலையைப் பூரணமாக உபயோ கித்தல்.

(ஆ) குறைந்த மூலதனத்தில் நிறைந்த பொருள்களை ஆக்க ஊக்குவித்தல். உற்பத்திச் செலவு நஷ்டமில்லாமல் இருக்க ஆவன செய்வது.

**கிராம சிற்றளவைத் தொழில்கள்:** வேலைவாய்ப்பைத் திட்டமிட்ட அளவுக்கு அதிகரிக்க உதவும் இத்துறைக்கு அதிகக் கவனம் செலுத்தப்பெறும்.

**பேரளவை, நடுவளவைத் தொழில்கள்:** பேரளவைத் தொழில் களும், நடுவளவைத் தொழில்களும் அமைக்க, ஊக்க பொதுத் துறையில் செலவினம் அதிகரிக்கப்படும். இது 6,852 கோடி யிலிருந்து 8,940 கோடியாக உயரும்.

கைத்தறித் துணிகளின் உற்பத்தியைப் பெருக்குவதன்மூலம் நாட்டில் அதிகப்படித் துணித் தேவையைச் சமாளிக்க வகை செய்யப்படும். துணி உற்பத்தி கணிசமாக உயர்த்தப்படும்.

**சமுக சேவைகள்**

**கல்வி:** ஆறாவது திட்டத்தில் அறியாமையை அகற்றவும், ஆரம்பக் கல்வியை அனைவருக்கும் அளிக்கவும், கல்வியைச் சமூகத்திற்கு உபயோகமுள்ள வேலைவாய்ப்பு அடிப்படையில் அமைக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படும். பள்ளிக் கல்வி, பல்கலைக்கழகக் கல்வி முதலியவற்றில் பொதுக் கல்வி வகையினைக் குறைத்துத் தரத்தை உயர்த்துவதற்கும், கல்வியைத் தொழிற்கல்வியாக ஆக்குவதற்கும் முக்கியத்துவம் அளிக்கப்படும்.

தமிழக முதல்வர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் தமிழக அரசின் சார்பாக, கிராம-நகர்புற அபிவிருத்திக்காக ஆரம்பப் பள்ளிக் குழந்தைகள் 38 லட்சம் பேருக்குச் சுமார் நூறு கோடி ரூபாய் செலவில் 1982ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், முதல் தேதி முதல் அன்றாடம் சத்துள்ள இலவச மதிய உணவு வழங்கும் திட்டத்தைத் தொடங்கி வைத்தார்.



படம் 39.
திரு. எம். ஜி. இராமச்சந்திரன்

**உடல் நலம்:** கிராமப்புற மக்களுக்கும், நகர்ப்புற ஏழைகட்கும் உடல்நலனைப் பேணிவளர்க்க, மருத்துவ சேவை வசதிகள் அளிப்பதும் திட்டத்தின் முக்கியமான நோக்கமாகும்.

**குடும்ப நலம்:** குடும்ப நலத்திட்டங்களுக்கு முன்னுரிமையும் அதிக முக்கியத்துவமும் கொடுக்கப்படும்.

**வேலைவாய்ப்பு:** ஆறாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் 49 மில்லியன் மக்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்க வகை செய்யப்பட்டுள்ளது. இதனை அடைய,

(1) பிராந்திய அடிப்படையில் திட்டங்கள் அமைத்து வேலைவாய்ப்பினை அதிகரித்தல்.

(2) தொழில் நுணுக்க முறையினை மாற்றியமைத்து வேலைவாய்ப்பையும், தொழிலாளர் நலத்தையும் காக்க திட்டம் இடப்பட்டுள்ளது.

(3) அனைவருக்கும் வேலைவாய்ப்பளிக்க பிராந்தியத் திட்டம் அமைக்க ஏற்பாடு செய்தல்.

முடிவு: நம் ஐந்தாண்டுத் திட்டங்களின் முக்கிய நோக்கம் மனித செயல்பாடுகளின் எல்லாத் துறைகளிலும் நம் நாடு முழு வளர்ச்சி பெற்று, தன்னிறைவோடு பிறநாட்டுச் சார்பின்றி சிறந்து விளங்குவதேயாகும்.

இந்தியாவைத் தொழில் மயமாக்குதலும் வாழ்க்கை முறையில் அதன் விளைவுகளும்: 1956இல் இந்தியா தன் தேசியக் குறிக்கோளாகச் சோஷலிச சமுதாயத்தை நிர்மாணிப்பதைக் கொண்டது. எனவே, தொழில்கள் விரைவாக வளர்ச்சியுற திட்டங்கள் தீட்டும் அவசியம் ஏற்பட்டது. அடிப்படையான இன்றியமையாத தொழில்கள் அரசாங்கத்துறைக்கு ஒதுக்கப் பட்டன. புதிய தொழில் இயல்முறைமூலம் தொழில்கள் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவையாவன: (1) அரசுக்குச் சொந்தமான தொழில்கள், (2) படிப்படியாக அரசு இயக்கப்பட விருக்கும் தொழில்கள், (3) தனியார் துறைக்கு விடப்பட்டுள்ள தொழில்கள்.

இருப்பினும் நாட்டு மக்களின் நலம்கருதி எந்தத் தொழிலையும் அரசுடைமையாக்க அரசாங்கத்திடம் அதிகாரம் வைத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

சுதந்தரம் பெற்ற நாளிலிருந்து அரசுத் துறையிலும் தனியார் துறையிலும் பல தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டு இன்று இந்தியா முழுவதும் ஒரு தொழில்பெருக்க நாடாகக் காட்சியளிக்கிறது. குறைந்த பொருளாதார வளர்ச்சியுள்ள நாடு என்ற நிலை இனிமேல் நம் நாட்டிற்கு இல்லை. உலகில் வளர்ந்துவரும் நாடுகளில் ஒன்றாக நம் நாடு ஆகிவிட்டது.

இவ்விரைவான தொழில்மயமாக்குதல் நம் நாட்டில் பல மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கிறது. புதிய தோற்றம் நம் நாட்டிற்கு ஏற்பட்டிருக்கிறது. எங்கும் ஆலை நகர்கள் தோன்றியுள்ளன. சென்னை நகரின் எல்லைகள்வரை சென்று பார்த்தால் ஆவடி, அம்பத்தூர், வேளச்சேரி, பாடி, எண்ணூர் முதலிய புறநகர்களில் ஆலைகள் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். இத்தகைய வளர்ச்சிகள் இந்தியா முழுவதும் காணக்கிடக்கின்றன. பிலாய், பொக்காரோ, நெய்வேலி, ராமகுண்டம், கலமாசேரி போன்ற தொழிற்சிறு நகரங்களும் பெருநகரங்களும் டஜன் கணக்கில் தோன்றியுள்ளன. கருங்கச்

சொல்லுமிடத்து இந்தியா ஒரு தொழிற்புரட்சியின் நடுவண் உள்ளது.

**தொழில்மயமாக்குதலின் பயன்கள்**

பெருகிவரும் தொழில் மயமாகும் நிலைமையால் மக்கள் கிராமபுறத்திலிருந்து தொழில் பிரதேசங்களுக்குப் பேரளவில் குடியேறுகிறார்கள். அரசுத்துறை திட்டங்கள் நடைபெறும் இடங்களில் மாநில அரசு குடியிருப்பு வசதிகளைச் செய்துவருகிறது. தனியார் துறையில் இத்தகைய வசதிகள் செய்யப்படாத காரணத்தால் சேரிகள் பெருகிவருகின்றன.

விரைவான தொழில்பெருக்கத்தினால் இந்திய சமுதாயம் எல்லாத் துறைகளிலும் முன்னேறியிருக்கிறது. புதிய சாலைகளும் இருப்புப்பாதைகளும் போடப்பட்டிருக்கின்றன. புதிய துறைமுகங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. நமது உள்நாட்டு வெளிநாட்டு வாணிபம் பலமடங்கு அதிகரித்திருக்கிறது. மக்கள் எளிதில் இடம்விட்டு இடம்பெயர வசதி ஏற்பட்டிருக்கிறது. மக்களுக்கு அறிவுபெறும் வாய்ப்பும், அறிவும் அதிகமாகியிருக்கின்றன. ஒதுங்கி நில்லாமல் பலரோடுபழகி கூடிவாழும் தன்மை ஏற்பட்டிருக்கிறது. மாநிலம், பிரதேசம் ஆகிய பழைய குறுகிய மனப்பான்மைபோய், பரந்த மனப்பான்மை ஏற்பட்டிருக்கிறது. மக்களில் பெரும்பான்மையினர் வறுமைக் கோட்டிற்குகீழ் இருந்தபோதிலும், வசதியான வாழ்வுக்கான வழிவகைகள் அதிகமாகி இருக்கின்றன என்பதை மறுக்கமுடியாது. மின்விளக்குகள், பேருந்து போக்குவரவு வசதிகள், மருத்துவமனைகள், குடிநீர்வசதி, வானொலி, தொலைக்காட்சிக் கருவிகள், தொலைபேசிகள் முதலியன பல மடங்கு அதிகரித்து மக்கள் வாழ்க்கையை வசதியாகவும் வளமாகவும் ஆக்கியிருக்கின்றன. பல்லாயிரம் பள்ளிகளும், நூற்றுக்கணக்கான கல்லூரிகளும், தொழிற்பள்ளிகளும், உயர்மட்ட பொறியியல் மருத்துவ கல்லூரிகளும் நாடு முழுவதும் தோன்றியிருக்கின்றன. வானவழி போக்குவரவு, தொலைக்காட்சி, விண்வெளிக்கூடு 'இன்ஸாட்' முதலியன பல வகைகளில் மக்களுக்கு உதவுகின்றன. இன்று இந்தியா தொழிலில் சிறந்த உலக நாடுகளில் ஒன்றாய்த் திகழ்கிறது என்பதில் ஐயமில்லை.

'அரும்பும் வியர்வை புவிமேல் உதிர்த்தே ஆயிரம் தொழில்கள் மாண்புறச் செய்வோம்' என்ற பாரதியின் கனவு நனவாகி வருகிறது.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஐந்து அல்லது ஆறு வரிகளில் விடையளிக்க :

1. சுதேச சமஸ்தான இணைப்புக்கு வல்லபபாய் பட்டேல் ஆற்றிய தொண்டினை விளக்குக.
2. இந்தியா சுதந்தரம் அடைந்தபிறகு நடுவண் அரசின் நேரடி ஆட்சியின்கீழ்வந்த சில மாநிலங்களைக் கூறு.
3. சுதேச சமஸ்தான இணைப்புகளுக்கு ஒரு பெரும் பிரச்சினையாய் இருந்த மூன்று பெரிய சமஸ்தானங்கள் யாவை? ஏன் அவை அவ்வாறிருந்தன?
4. மொழிவாரி மாகாணங்கள் என்றால் என்ன? ஓர் உதாரணம் கொடு.
5. பஞ்சசீலம் என்றால் என்ன? அதன் ஐந்து கொள்கைகள் யாவை?
6. தாஷ்கண்ட் ஒப்பந்தம் என்றால் என்ன?
7. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் குறிக்கோள்கள் யாவை?
8. ஐந்தாவது, ஆறாவது ஐந்தாண்டுத் திட்டங்களின் குறிக்கோள்கள் யாவை?
9. தொழில்மயமாக்குதல் என்றால் என்ன?

II. பின்வரும் வாக்கியங்களிலுள்ள கோடிட்ட இடங்களைத் தகுந்த விடைகொண்டு நிரப்புக :

1. 'ஆரியபட்டா', இந்திய' நாடு ———— துறையில் அடைந்திருக்கின்ற முன்னேற்றத்தைக் காட்டுகிறது.
2. சுதேச சமஸ்தானங்களின் இணைப்பு ———— என்பவரால் ஏற்படுத்தப்பட்டது.
3. 'பி' பிரிவு இராச்சியங்களின் தலைவர் ———— என்று அழைக்கப்பட்டார்.
4. ———— என்ற சுதேச சமஸ்தானத்திற்கு எதிராக இணைப்பின்பொருட்டுப் போலீஸ் நடவடிக்கை எடுக்கப் பட்டது.
5. ஜுனாகாத் சமஸ்தானம் ———— மாநிலத்துடன் ———— ஆண்டு இணைக்கப்பட்டது.

III. பின்வரும் வினாக்களுக்கு 15 வரிகளில் விடையளிக்கவும்:

1. சர்தார் வல்லபபாய் பட்டேல் எவ்வாறு ஹைதராபாத் சமஸ்தானத்தை இந்தியாவுடன் இணைத்தார்?

2. சுதேச சமஸ்தான இணைப்பில் காஷ்மீர் பிரச்சினை எவ்வாறு தீர்க்கப்பட்டது?

3. போர்த்துகீசிய குடியேற்றங்கள் இந்திய அரசின்கீழ் வந்த வரலாற்றினைக் கூறு.

4. பாரதப் பிரதமர் ஜவஹர்லால் நேரு காலத்தில் இருந்த இந்திய அயல் நாட்டியல் முறையின் முக்கிய அம்சங்களைக் கூறுக.

5. ஆறாவது ஐந்தாண்டுத் திட்டம் எவ்வாறு நாட்டின் பல்துறை வளர்ச்சிக்கு ஏற்ப அமைந்துள்ளது என்பதை எடுத்துக்காட்டுக.

6. தொழில்மயமாக்குதல் எவ்வாறு நம் நாட்டின் பொருளாதாரத்தைப் பாதித்துள்ளது?

IV. நான்கு மாற்று விடைகளுள் சரியானவற்றைத் தேர்ந்தெடு:

1. சமஸ்தான இணைப்புகளுக்குப் பின்னர் நடுவண் அரசின் ஆட்சியிலிருந்த மாநிலங்கள் ( )
   (அ) 'எ' பிரிவு இராஜ்யங்கள்
   (ஆ) 'பி' பிரிவு இராஜ்யங்கள்
   (இ) 'சி' பிரிவு இராஜ்யங்கள்
   (ஈ) 'டி' பிரிவு இராஜ்யங்கள்

2. ஹைதராபாத் சமஸ்தானம் இந்திய அரசியலமைப்பை ஒப்புக்கொண்ட ஆண்டு ( )
   (அ) 1947
   (ஆ) 1948
   (இ) 1949
   (ஈ) 1950

3. பஞ்சசீலக் கொள்கையை அளித்த மாநாடு ( )
   (அ) பாண்டுங் மாநாடு
   (ஆ) லாகூர் மாநாடு
   (இ) சூரத் மாநாடு
   (ஈ) சிம்லா மாநாடு

4. ஓராண்டுத் திட்டம் முதன் முதல் அமலுக்கு வந்த ஆண்டு ( )
   (அ) 1957-58
   (ஆ) 1966-67
   (இ) 1969-70
   (ஈ) 1977-78

# 18. இந்தியாவின் பிரச்சினைகள்

## அறிமுகம்

அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலைப் பெற்ற ஒவ்வொரு நாடும் பல பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டி இருக்கிறது. இதற்கு இந்தியாவும் விலக்கல்ல. விடுதலைப் பெற்றுவிட்ட நேரத்தில் இந்நாடும் பல பிரச்சினைகளை எதிர்நோக்கவேண்டி வந்தது. இதோடு மட்டுமல்லாமல் உலகத்தின் எந்த பாகத்திலும் ஏற்படுகின்ற மாறுதலும், உலகத்திலுள்ள எல்லா நாடுகளையும் ஏதாவது ஒருவிதத்தில் பாதிக்கிறது. எனவே, நம்முடைய பிரச்சினைகளும் உலகின் மற்ற நாடுகளின் பிரச்சினையோடு பங்கு கொண்டு தீர்க்கப்படவேண்டி இருக்கின்றன. மேலும் எல்லா நாடுகளிலும் ஏழை பணக்காரர்கள் இருக்கிறார்கள். உபகண்டம் என்ற நிலையில் பெரும் பரப்புக் கொண்ட இந்தியாவிற்கு இயற்கையாகவே தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினைகள் நிறைய இருக்கின்றன. அவைகளில் ஒருசில மிகப்பெரியதாகவும் தீர்ப்பதற்குக் கடினமாகவும் இருக்கின்றன. இருப்பினும் மன உறுதியோடும், தொலை நோக்கோடும், ஒன்றுபட்டும் நாம் இவைகளைத் தீர்க்கவேண்டியிருக்கிறது. இந்தியா தீர்க்க வேண்டிய பிரச்சினைகளாக இருப்பவை: (1) பெருகிவரும் மக்கள் தொகை, (2) அனைவருக்கும் கல்வி அளித்தல், (3) அனைவருக்கும் உணவளித்தல், (4) அனைவருக்கும் உறைவிடம் காணல், (5) நாட்டைப் பாதுகாத்தல், (6) அண்டை நாடுகளுடன் நல்லுறவு கொண்டிருத்தல், (7) தேசிய ஒருமைப்பாடு.

## மக்கள்தொகைப் பிரச்சினை

உலக நாடுகளின் மக்கள்தொகையில் சீனா முதலிடம் பெறுகிறது. இந்தியா இரண்டாம் இடத்தை வகிக்கிறது. 1981ஆம் ஆண்டு மக்கள்தொகை கணக்கெடுப்புப்படி இந்தியாவின் மொத்த மக்கள்தொகை சுமார் 684 மில்லியன்கள். அதாவது உலக மக்கள்தொகையில் 1/7 அல்லது 15% இந்தியாவின் மக்கள்தொகையாக அமைந்தது. எனவே, பெருகிவரும் மக்கள்தொகையைக் கட்டுப்படுத்த வேண்டியது நமது கடமையாகும். இன்றேல் அது நம் நாட்டின் முன்னேற்றத்திற்கு முட்டுக்

கட்டையாகும். மருத்துவத் துறையில் ஏற்பட்டிருக்கிற முன்னேற்றங்களும், வாழ்க்கைத் தரத்தில் ஏற்பட்டிருக்கிற முன்னேற்றமும் மரண விகிதத்தைச் சற்றுக் குறைத்திருக்கின்றன. இருப்பினும் அதற்கு ஏற்ப பிறப்பு விகிதம் இறங்கவில்லை. எனவே, பெருகி வரும் மக்கள்தொகையைத் தடுத்து நிறுத்தவும், பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்தவும் பல வழிகளைக் காணவேண்டி இருக்கிறது. இதற்காக இந்திய அரசாங்கம் பல நடவடிக்கைகளை எடுத்து இருக்கிறது. 1952இல் குடும்ப நலத் திட்டத்தை ஆரம்பித்தது. கட்டுப்படுத்தப்பட்ட சிறிய குடும்பத்தின் நன்மையை மக்கள் அறியும் பொருட்டுக் கோஷங்களும் சுவரொட்டிகளும் எழுப்பப்பட்டும், எழுதப்பட்டும் வருகின்றன. நாடக மேடைகளிலும் அகில இந்திய வானொலியிலும் சிறு குடும்ப அவசியத்தைப்பற்றியும் குடும்பக் கட்டுபாட்டைப் பற்றியும் பாடல்களும் நாடகங்களும் நடைபெறுகின்றன. 'நாம் இருவர் நமக்கு இருவர்', 'சிறிய குடும்பம் சிரித்துக் களிக்கும் வாழ்வு' போன்ற கவர்ச்சிகரமான வாசகங்கள் எங்கும் காணப்படுகின்றன. சிவப்பு முக்கோணம் அளவான குடும்பத்தின் வளமான வாழ்வின் சின்னத்தைக் குறிக்கிறது. இவற்றைத் தவிர வேறு பல வழிகளும் மக்கள்தொகை பெருக்கத்தைக் கட்டுப்படுத்த கையாளப்படுகின்றன. காளையர், கன்னியர் திருமண வயது உயர்த்தப்பட்டிருக்கிறது. இரண்டோடு நிறுத்திக் கொண்டு குடும்பக் கட்டுப்பாடு செய்யும் தம்பதிகளுக்கு ஊக்க பணமும் பிற வசதிகளும் கொடுக்கப்படுகின்றன. தற்போது மக்கள்தொகை, கல்வியின் மூலமாகக் குழந்தைகளுக்குச் சிறு குடும்பத்தின் நன்மைகளைப் பற்றியும் அது எவ்வாறு அவர்களுக்கு வேண்டிய எல்லாத் தேவைகளையும் முழுமையாக அனுபவிக்க உதவுகிறது என்பதுவும் அறிவுறுத்தப்படுகிறது. இதற்காகத் தேசியக் கல்வி ஆராய்ச்சி பயிற்சி நிறுவனமும் மாநில கல்வி ஆராய்ச்சி பயிற்சி நிறுவனமும் ஆசிரியர்களுக்குக் கருத்தரங்குகள், பணிப்பட்டறைகள் முதலியவற்றின்மூலம் மக்கள் தொகைக் கல்விபற்றி பயிற்சி அளிக்கின்றன.

மக்கள் பெருக்க வெடிப்பால் உணவுப்பற்றாக் குறையும், குடிநீர் விநியோகக் குறைவும், ஆடை அணிகலன் வசதிகள் குறைவும் ஏற்படுகின்றன. குடிசைப் பகுதிகளில் வாழும் மக்கள் சுற்றுப்புறத்தை அசுத்தப்படுத்துவதால் சுற்றுப்புறத் தூய்மை கெடுதலும் ஏற்படுகிறது. அளவுக்குமீறிய மக்கள் பெருக்கம் வேலையில்லாத் திண்டாட்டத்தையும், போதிய அளவு வேலை வாய்ப்பு இல்லாத நிலையையும் உண்டாக்குகிறது. மேலும்,

அறிவின்மையை ஒழிப்பதும் தரமான கல்வியை அளிப்பதும் மக்கள்தொகை பெருக்கால் பாதிக்கப்படுகின்றன.

தற்போது இரண்டு விணாடிக்கொரு குழந்தை பிறந்து மக்கள் தொகை பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் பிரச்சினையை மேலும் சிக்கலாக்கி வருகிறது. ஒரு காலத்தில் குழந்தைகள் ஒரு குடும்பத்தின் செல்வம் என்று கருதப்பட்டது. ஆனால், தற்போது மக்கள்தொகை பெருக்கத்தால் ஏற்படும் இன்னல்களை உணர்ந்து, நடுவண் அரசும், மாநில அரசும் தீவிர முயற்சிகளை மேற்கொண்டு இப்பிரச்சினையைத் தீர்க்க அரும்பாடுபட்டு வருகின்றன.

**பிறப்பு இறப்பைப் பதிவுச்செய்தல்**

பிறப்பு விகிதத்தைக் குறைக்கின்ற முயற்சிக்குப் பிற திட்டங்களோடு மக்கள்தொகைப் பெருக்க கட்டுப்பாடும் ஒரு முக்கிய இடம் வகிக்கிறது என்பதைக் கண்டோம். தமிழக அரசு 1977ஆம் ஆண்டு ஒவ்வொரு குடும்பமும், அதில் ஏற்படும் பிறப்பு, இறப்பு நிகழ்ச்சிகளைக் கட்டாயமாகப் பதிப்பிக்க வேண்டுமென்று ஆணைகளும், உத்தரவுகளும், நெறிமுறைகளும் ஏற்படுத்தி உள்ளது. அதேபோல் மருத்துவமனைகளும் அங்கே ஏற்படுகிற பிறப்பு இறப்பு நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகளைப் பதிவுசெய்யக் கடமைப்பட்டுள்ளன. பிறந்து 14 நாட்களுக்குள் இப்பிறப்பு உரிய அலுவலகத்தில் பதிவு செய்யப்படவேண்டும். அவ்வாறே மரணங்களும், நிகழ்ந்த ஏழு நாட்களுக்குள் பதிவு செய்யப்படவேண்டும். பிறப்பு இறப்பு சான்றிதழ்கள் பெற விரும்புவோர் உரிய கட்டணத்தைச் செலுத்தி அதனை பிறப்பு இறப்பு பதிவாளர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

இவ்வாறு பெறப்படும், பிறப்புச் சான்றிதழ்கள் புல நன்மைகளைச் செய்கின்றன: (1) அவை குடும்பத்தில் உள்ள சொத்தில் ஒருவருக்கு வரவேண்டிய பங்கைப்பெற உதவுகின்றன. (2) ஒரு நாட்டில் மக்கள் குடி உரிமை பெற உதவுகின்றன. (3) பள்ளிகளில் சேர உதவுகின்றன. (4) வேலை வாய்ப்புக் கிடைப்பதற்கு வசதிகள் தருகின்றன. (5) வாக்காளர் பட்டியலில் சேர்ந்து வாக்குப் பதிவுசெய்ய உரிமையைத் தருகின்றன.

மரணப் பதிவு சான்றிதழ்கள் சரியான மரணநாளை தெரிந்து கொள்ளவும், குடும்ப உறுப்பினரிடையே குடும்பச் சொத்தைப் பங்கிடவும், மத்திய மாநில அரசுகளின் திட்டங்கள் மூலம் கிடைக்க

வேண்டிய இன்சூரன்ஸ் தொகையைப் பெறவும் உதவுகின்றன. பிறப்பினை பதிவுசெய்தல் குடும்பக்கட்டுபாட்டுத் திட்டங் களைத் தீட்டவும், தாய்சேய் நலத் திட்டங்களை உருவாக்கவும் உதவுகின்றன.

பிறப்பினை பதிவுசெய்தல் உடல் நலங்களைப் பற்றிய திட்டங்கள் உருவாக்கவும், மரண விகிதத்தின் அதிகரிப்புக்குக் காரணம் காட்டவும், அதனைக் குறைப்பதற்குத் திட்டமிடவும் தொற்று நோய்கள் பரவாமல் தடுக்கவும், இன்சூரன்ஸ் விகிதத்தை நிர்ணயிக்கவும் உதவி புரியும்.

எனவே, பிறப்பு இறப்பு பதிவு ஆவணங்கள் மக்கள்தொகை பெருக்கத்தின் போக்குபற்றி அறியவும் அதற்கு ஏற்ப நமது திட்ட இயல் முறைகளை அமைக்கவும் சட்டசபை பாராளுமன்ற தேர்தல்களுக்கு வாக்குத் தொகுதிகள் பிரிக்கவும் அவைகளுக்கு ஏற்ப பிரதிநிதிகளின் எண்ணிக்கையை நிர்ணயிக்கவும் உதவு கின்றன.

**உணவு:** மக்களுக்குப் போதுமான அளவில் உணவுத் துறையில் நிறைவைத் தருவது அரசாங்கத்தின் முக்கியக் கடமை யும் பொறுப்புமாகும். எனவே, உணவு உற்பத்தியைப் பசுமைப் புரட்சியின் மூலம் அதிகரிக்கச் செய்ய நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன. இதன் விளைவாக, உழுவதற்கான நவீன இயந்திரங் களின் உதவியால் விவசாயப் பொருள்களின் உற்பத்தி அதிகரிக்கப் படுகிறது. விஞ்ஞான முறைப்படி உரமிட்டு நீர்ப்பாசன வசதி களைப் பெருக்குவதும் அதனுள் அடங்கும். இரசாயன உரத் தொழிற்சாலைகள் அமைப்பதோடு, விவசாயிகளுக்குக் கடன் வசதிகள் செய்துதருவதும் இதன்பாற்படும். பல மாநிலங்களில் விவசாய ஆராய்ச்சி மையங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின்மூலமாக உயர்தர தானியங்கள் தரமான விதைகளின் மூலம் கிடைக்க வழி ஏற்பட்டுள்ளது. மேலும், அதிகமான நிலங்கள் விவசாயத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டுள்ளன. அரிசி, கோதுமையைத் தவிரப் பிற உபயோகமான தானியப் பயிர்களும் அதிக அளவில் பயிர் செய்யப்படுகின்றன.

உணவுப் பிரச்சினையைத் தீர்க்க மத்திய மாநில அரசுகள் எடுத்துள்ள மற்றொரு வழி நாடு முழுவதும் நீலப்புரட்சியை உண்டாக்கியிருப்பதாம். மீன் இலாகா மீனவர்களுக்கு நல்ல கருவிகளையும், விசைப்படகுகளையும், நைலான் வலைகளையும் கொடுத்துதவி பெரிய மீன்களைப் பிடிக்க விரைவான ஏற்பாடு

களைச் செய்திருக்கிறது. மீன்கள் நிறைந்த அளவில் கிடைப்பதும் உணவுப் பிரச்சினையை ஓரளவு குறைக்கும். நிறைந்த அளவில் மீன்களை வளர்ப்பதற்கும் புதிய விஞ்ஞான முறைப்படி மீன் பக்குவப்படுத்துவதற்கும் ஏற்பாடுகள் செய்யப் பட்டுள்ளன.

இவ்விரண்டு புரட்சிகளைத் தவிரப் பாலையும், பால்படு பொருளையும் அதிகமாக உற்பத்தி செய்ய ஒரு வெண்மைப் புரட்சியும் தோன்றியுள்ளது. கால்நடை இலாகா இதனை கவனிக்கிறது. அதிகமான அளவில் பால் தரும் புதிய தரமான பசு இனங்கள் ஆக்கப்பட்டிருக்கின்றன. தேவையான இடங்களி லெல்லாம் பால்பண்ணைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இதோடு கோழி வளர்த்தலும் ஊக்குவிக்கப்படுகிறது. இது ஒரு முக்கியக் குடிசைத் தொழிலாகவே ஆகிவிட்டது.

பாதுகாப்பு: புதிதாகச் சுதந்தரம் பெற்ற எந்த நாடும் வேற்று நாடுகளின் தாக்குதலிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளவும் அந்நிய ஆதிக்கம் மீண்டும் தங்கள்மீது ஏற்படாது இருக்கவும் நாட்டின் பாதுகாப்பில் நல்ல கவனம் செலுத்தியாக வேண்டியுள்ளது. எனவே, நம் இந்திய நாடு தகுந்த பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருப்பதில் வியப்பில்லை. சுதந்தரத்தின் விலை நிரந்தர விழிப்புணர்ச்சியே. நம் நாடு வடக்கு, வடமேற்கு, வடகிழக்கு எல்லைகளிலிருந்து பகைவர் களால் தாக்கப்படலாம். மேலும், நீண்ட நமது கடற்கரையும் காக்கப்படவேண்டி இருக்கிறது. சமாதான சகவாழ்வு இயல் முறையை நாம் கடைபிடித்தபோதிலும் சீனாவும் பாகிஸ்தானும் நம் நாட்டைத் தாக்கிய அனுபவங்களைப் பெற்றிருக்கிறோம்.

நம் நாட்டின் பாதுகாப்பு நம் நாட்டு இராணுவப் படை களிடம் இருக்கிறது. எனவே, அவைகளுக்கு மிகச் சிறந்த தற்கால போர்க்கருவிகளும் பயிற்சியும் அளித்து எப்போதும் தயார் நிலை யில் வைத்துக்கொள்ளவேண்டி இருக்கிறது. நம் பாதுகாப்பு இராணுவம் தரைப்படை, கப்பற்படை, ஆகாயப்படை என மூன்று பிரிவாக உள்ளது. நமது இராணுவப் படைகளின் மேலான தலைவர், நம் நாட்டின் ஜனாதிபதியே ஆவார். நமது இராணுவப்படையினரின் தலைமையகம் டில்லியில் அமைந் திருக்கிறது. மேலும் இராணுவ நடவடிக்கை இயக்கங்கள் இராணுவ இரகசியச் செய்தி, சேமிப்புத்துறை, இராணுவப் போர்ப்பயிற்சி, வளர்ச்சி ஆயுதங்களும் பிற கருவிகளும், டாங்குகள் படை, பீரங்கிகள் படை, சைகையாளர் படை,

தரைப்போர் வீரர்படை, பிராந்தியர் இராணுவம் முதலியனவும் நம் நாட்டு பாதுகாப்பு ஏற்பாடுகளில் அடங்கும். கல்லூரி களிலும் பள்ளிகளிலும் இயங்கிவருகின்ற தேசிய மாணவ மாணாக்கியர் படை அவசர காலத்தில் முப்படையினருக்கும் கட்டுப்பாடும் ஒழுங்கும் அமைந்த நல்ல அதிகாரிகளைத் தருகின்ற பயிற்சி அடித்தளமாக அமைந்துள்ளது.

கப்பற்படை: நமது கப்பற்படை மிகச்சிறந்த முறையில் வளர்ந்திருக்கிறது. இதன் முக்கியத் தளங்கள் பம்பாய், விசாகப் பட்டினம், அந்தமான் தீவுகள் முதலிய இடங்களில் உள்ளன. நமது கப்பற்படை பாகிஸ்தானோடு நடந்த போர்களில் தன் தனித் திறமையைக் காட்டி புகழ் பெற்றிருக்கிறது. தேசிய மாணவர் இராணுவப் படையிலும் கப்பற்படை பிரிவு அமைக்கப் பட்டிருக்கிறது. இளவயதிலேயே மாணவர்களுக்குக் கடற் போரிலும் கடற் பயிற்சிகளிலும் ஈடுபாடுகொள்ள அஃது உதவுகிறது.

விமானப்படை: சிறந்த பாதுகாப்பிற்கு ஒவ்வொரு நாட்டிற் கும் நல்லதொரு விமானப்படை மிக அவசியம். எனவே, இந்திய அரசாங்கம் நமது பாதுகாப்புப் படையின் இப்பிரிவுக்கு அதிக கவனம் செலுத்துவதில் வியப்பு இல்லை. போர் ஆயத்த நிலையில் தரைப்படை கப்பற்படையைவிட நல்ல முறையில் பல சாதனங்களைப் பெற்றிருக்கிறது நமது விமானப்படை. பலவித போர் விமானங்கள், குண்டெறியும் விமானங்கள், போக்கு வரத்து விமானங்கள் முதலியன நம் விமானப் படையில் உள்ளன. ஏவுகணைகள் பொருத்தப்பட்ட விமானங்களும், ஜாகுவர் விமானங்களும் நம்மிடம் உள்ளன. தற்கால நவீன 'சூபர்சானிக்' விமானமும் நம் விமானப் படையில் உள்ளது. அவற்றைத் தவிர எம்.ஐ.ஜி. 21, நாட் எச்.எப். 24, ஹெலிகாப் டர்கள் முதலியனவும் நம்மிடம் உள்ளன.

அண்டை நாடுகளுடன் உறவு: ஒரு நாடு சுதந்தரம் பெற்றால் மட்டும் போதாது அஃது அண்டை நாடுகளுடன் நல்ல நட்புற வுடன் இருக்கவேண்டும். எனவே, நமது முன்னாள் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் அளித்த பஞ்சசீலப் பாதை யில் இந்தியா இன்னும் அயல் நாட்டியல் முறையில் பீடு நடை போடுகிறது. அண்டை நாடுகளுடன் ஏற்படும் பிரச்சினைகளை நட்புடனும் ஒத்துழைப்புக் கொடுக்கும் மனப்பான்மையுடனும் அவைகளுடன் உரையாடி தீர்த்துக்கொள்ளும் இயல் முறையை நம் நாடு பின்பற்றி வருகிறது. நம் நாட்டின் அயல் நாட்டு இயல் முறை கௌரவத்தோடு கூடிய சமாதானமாகும்.

**சீனா:** சிலவேளைகளில் போர் நம்மீது திணிக்கப்படுகிறது. உதாரணமாக 1962ஆம் ஆண்டு சீனா நேபா பிரதேசத்தின் மீதும் 'லடாக்' பிரதேசத்தின் மீதும் படையெடுத்தபோது நாம் அதனோடு போர்செய்ய நேரிட்டது. நாம் நம்மைப் பாது காத்துக்கொள்ளும் நிலையிலிருந்து பகைவனை அமைதியை நாடிவருகின்ற நிலையில் வைத்துள்ளோம். எனவே, சீனா தானாகவே போர் நிறுத்தம் செய்தது. இப்பொழுது சீனாவின் வசம் லடாக்கில் 36,260 ச. கி. மீ. பரப்புள்ள இடமும் நேபா'வில் (வடகிழக்கு எல்லைப்புற பிரதேசம்) 1550 ச.கி.மீ இடமும் அதன் வசம் இருக்கிறது. இருப்பினும் நம் உறவு சீனாவோடு நட்புமுறையில் இருந்து வருகிறது. இழந்த பகுதியை மீட்டுக்கொள்ளவும், இரு நாடுகளுக்கிடையேயுள்ள எல்லையை முன்போல் அமைக்கவும் முயற்சிகள் எடுக்கப் பட்டுள்ளன. சீனாவிற்கு ஐக்கிய நாடுகள் சபையில் இடத்தைப் பெறுவதற்காக இந்தியா ஓயாமல் வற்புறுத்தி வந்ததும் இன்று சீனா ஐ.நா. சபையில் அங்கம் வகிப்பதும் உலகம் அறிந்ததே.

**பாகிஸ்தான்:** பாகிஸ்தான் நம்மோடு சுதந்தரம் பெற்ற ஓர் அண்டை நாடு. சிறிது காலம் இவ்விரு நாடுகளுக்கிடையே நல்லுறவும் நட்பும் நிலவி வந்தன. இருப்பினும் கி.பி. 1965ஆம் ஆண்டு காஷ்மீரில் பாகிஸ்தான் துருப்புகள் நுழைந்தபோது நாம் இந்நாட்டோடு போரிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நமது படைகள் பாகிஸ்தான் படைகளின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தின. 'லாகூர், சியால்கோட்' முதலிய நகரங்கள் வரை பகைவர் நாட்டில் நம் படைகள் முன்னேறின. ஐ. நா. பாதுகாப்புச் சபையினுடைய தீர்மானங்களுக்கு மதிப்புக் கொடுத்து இந்தியா தன் போர் நடவடிக்கைகளை நிறுத்தி அப்பொழுது சோவியத் யூனியனின் பிரதம மந்திரியாய் இருந்த கோசிஜின் அவர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட தாஷ்கண்ட் சமாதான மாநாட்டில் கலந்துகொண்டது. அன்றைய பாரதப் பிரதமரான திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்களும், பாகிஸ்தான் ஜனாதிபதி ஜெனரல் அயூப்கான் அவர்களும் 1966ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 10ஆம் தேதி 'தாஷ்கண்ட்' உடன்படிக்கையில் கையெழுத்திட்டனர். இதன்படி இரு நாடு களுக்கு இடையே அமைதியும் நட்புறவும் நிலவ ஒப்புக்கொள்ளப் பட்டது.

முஜிபுர் ரஹ்மான் தலைமையில் கிழக்கு வங்காளம் பாகிஸ் தானிடமிருந்து சுதந்தரம் பெற்று 'பங்களாதேஷ்' என்ற பெயரில் விளங்க விரும்பியது. எனவே, பாகிஸ்தான் கிழக்கு

வங்காளத்தின்மீது படையெடுத்தது. பல்லாயிரக்கணக்கான அகதிகள் கிழக்குப் பாகிஸ்தான் எல்லையைக் கடந்து இந்தியாவிற்குள் வந்தனர். எனவே, பங்களாதேஷுக்கு அதன் சுதந்தரப் போரில் உதவி அளிக்கவும் இந்திய எல்லைகளில் அப்போதைக்கப்போது பாகிஸ்தான் படைகள் செய்யும் ஆக்கிரமிப்புகளைத் தடுக்கவும் இந்தியா பாகிஸ்தானோடு போர் புரியவேண்டி வந்தது. வரலாற்றுச் சிறப்பு மிக்க 14 நாள் போருக்குப்பின்பு பாகிஸ்தான் முறியடிக்கப்பட்டது. அதன் படைகள் நம் படைகளிடம் சரணடைந்தன. இந்த நிலையிலும்கூட இந்தியா போரினை நிறுத்தி அமைதியை நிலைநாட்ட கி. பி. 1972ஆம் ஆண்டு சிம்லாவில் நேரடிப் பேச்சுவார்த்தைகளுக்கு ஒப்புக்கொண்டது. எனவே, எந்த அந்நிய நாட்டின் தலையீடுமில்லாமல் இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஷ் இந்த மூன்று தேசத்தின் பிரதிநிதிகளும் சிம்லா மாநாட்டில் கலந்து கொண்டனர். இதன் மூலம் உலக அமைதிக்கும் நல்லுறவுக்கும் இந்தியா ஒரு நல்ல முன்மாதிரியான நடைமுறையை ஏற்படுத்தியது.

**பர்மாவும் சிலோனும் :** பிரிட்டிஷ் ஆதிபத்தியத்திலிருந்து சுதந்தரம் பெற்ற இவ்விரு நாடுகளும் நம் நாட்டின் நட்பான அண்டை நாடுகளாகும். இருப்பினும் இடம் பெயர வேண்டியிருந்த அகதிகளின் பிரச்சினைகள் தீர்க்கப்பட வேண்டிய ஒன்றாயிற்று. இந்தியா மிகப் பெருந்தன்மையுடனும் சகிப்புத் தன்மையுடனும் அகதிகளை வரவேற்று அவர்களுக்குப் புனர் வாழ்வு அளித்தது. மேலும் நெடுங்காலத்துக்கு முன்பே ஸ்ரீலங்காவில் குடியேறிவிட்ட இந்தியர்களின் நலனையும் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இந்தியாவிற்கு உள்ளது. அப்போதைக்கப்போது இரு நா்டுகளும் பேச்சுவார்த்தையின் மூலம் இப்பணியைச் செய்து வருகின்றன. 'கச்சத்தீவு' பிரச்சினை மோதல்கள் தவிர்க்கப்பட்டுச் சமாதான முறையில் தீர்க்கப்பட்டது.

**நேபாளமும் பூடானும் :** இந்தியா இமயமலையை ஒட்டியுள்ள நேபாளம், பூடான் என்ற இரு அண்டை நாட்டுடனும் நல்லுறவு பூண்டுள்ளது. அப்போதைக்கப்போது வியாபார ஒப்பந்தங்களும் நல்லெண்ண தூது கோஷ்டிகளும் பரிமாற்றம் செய்து கொள்ளப்படுகின்றன.

**சிக்கிம் :** கி.பி. 1974ஆம் ஆண்டு வரை அண்டை நாடாய் இருந்த சிக்கிம் அந்நாட்டு மக்களின் விருப்பப்படி இந்திய

யூனியனில் 22வது மாநிலமாகச் சேர்ந்து விட்டது. இதிலிருந்து இந்தியா அண்டை நாடுகளுக்கு நட்புக்கரம் நீட்டி அமைதிப் பாதையிலிருந்து சிறிதளவும் விலகாமல் இயங்கி வருவதைக் காண்கிறோம்.

## தேசிய ஒருமைப்பாடு

தேசிய ஒருமைப்பாடு என்பதன் பொருள் ஒவ்வோர் இந்தியனும் தான் முதலில் இந்தியன் என்ற உணர்வோடு தன் நாட்டிற்கு விசுவாசம் உள்ளவனாக இருப்பதேயாம். நாட்டின் நலனுக்கு எதிரான ஒன்றையும் அவன் செய்யக்கூடாது. அவ்வாறே இந்திய நாட்டில் உள்ள ஒவ்வொரு மாநிலமும் தான் அனைத்து இந்தியாவின் ஓர் உறுப்பு என்ற உணர்வோடு தேசிய நலனுக்கும், தேசியச் சுதந்தரத்திற்கும் குறைவு ஏற்படும் வகையில் நடந்துகொள்ளக் கூடாது. நம்நாட்டில் உள்ள ஒவ்வொரு குடிமகனும் தேசிய ஒருமைப்பாட்டை தாரக மந்திர மாகக் கொள்ளவேண்டும்:

இருப்பினும் அறிந்தோ அறியாமலோ தேசிய ஒருமைப் பாட்டின் ஆணிவேரையே அழிக்கும்படியான சில சக்திகள், இந்திய ஐக்கியம், அமைதி, பொறையுடைமை என்பவற்றை மறந்து கிளம்பியிருக்கின்றன. அத்தகைய சக்திகளில் ஒன்று பிராந்திய மனப்பான்மையாகும். இம் மனப்பான்மையின்படி ஒவ்வொரு மாநிலமும் தன்னுடைய முன்னேற்றத்தையும் தன்னகத்துள்ள மக்களின் முன்னேற்றத்தையும் பிற மாநிலங்கள், நாட்டின் பொது நன்மை, இவற்றைக் கவனிக்காமல் பெரிது படுத்திச் சிந்திக்கின்றன. மண்ணின் மைந்தன் என்ற இந்தக் கொள்கை இந்தியாவில் உள்ள மாநிலங்களிடையே நிலவிவரும் நல்லுறவை கெடுத்துக்கொண்டிருக்கிறது. இக்கொள்கைப்படி அந்தந்த மாநிலத்தில் பிறந்தவர்களுக்கு வேலைகளிலும் மற்ற விஷயங்களிலும் முன்னுரிமைகள் அளிக்கப்படுகின்றன. இது இந்திய அரசியலமைப்பில் கண்டுள்ள, 'ஒவ்வொருவருக்கும் இந்தியாவின் எந்தப் பாகத்திலும் வசிக்கவும், வேலை செய்யவும் உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது' என்ற ஷரத்துக்கு விரோத மானதாகும். அடுத்துத் தேசிய ஒருமைப்பாட்டைக் குலைப்பது பிரதேச மொழி வெறியாம். (ஒவ்வொரு மாநிலமும் தன் பிரதேச மொழியையே மிக முக்கியமானதாகக் கருதி அதனுடைய வாழ்வு, வளர்ச்சி, வளம் இவற்றுக்காக எல்லா நடவடிக்கைகளும் எடுக்கின்றன. இது நியாயமானபோதிலும் மற்ற மொழிகளுக்கு அவை எந்தவிதமான ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதில்லை.) ஒவ்வொரு மாநிலத்திலும் அந்த மாநில

மொழியைத் தவிர, பிற மாநிலமொழியைப் பேசுகிற மக்களும் அங்கே தொழில் துறையிலும், கல்வித்துறையிலும், நடுவண் அரசு அதிகாரிகளாகவும், ஊழியர்களாகவும் இருக்கிறார்கள் என்பதை மறந்துவிடுகின்றன. தன் தாய்மொழியின் அல்லது பிரதேச மொழியின்பால் செலுத்துகின்ற அன்புக்கும், பிற மொழிகளை வெறுத்தல் என்கிற பண்புக்கும் இருக்கின்ற வித்தியாசத்தை அறிந்து கொள்வது நல்லது. பிராந்திய மொழி வெறி தேசிய ஒருமைப்பாட்டின் ஆணிவேரையே அசைப்பதால் இப்பிராந்திய மொழி வெறியினை ஊக்குவிக்கக் கூடாது. சில சமயங்களில் ஒவ்வொரு மாநிலமும் பிற மாநிலங்களின் பிரச்சினை களை மறந்து தன் பிரச்சினைகளையே பெரிதாகக் கருதி செயல்படும்போது நாட்டின் ஒருமைப்பாட்டின் சின்னமாக விளங்குகிற 'பாரதமாதா' என்ற இந்தியத்தாயின் ஒற்றுமை பங்கப்படுத்தப்படுகிறது.

ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள தலைவர்கள் தங்கள் மாநிலத்தின் வளர்ச்சியை மட்டும் கருதாது, இந்தியாவில் உள்ள மற்ற பிரதேசங்களின் வளர்ச்சியையும் கருத்தில் கொண்டு மக்களுக்கு தேசிய ஒருமைப்பாட்டின் உயர்வையும் தரவேண்டும். தமக்கு இப்போதைய தேவை அதிக ஒத்துழைப்புத்தானே தவிரப் போட்டி போடும் மனப்பான்மை அல்ல. எல்லோர் நலனிலும் அக்கறைகொண்டு நாடு முழுவதையும் ஒரே குடும்பமாக நாம் நினைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் எந்த ஒரு மாநிலத்தின் நலனும் காக்கப்படும்.

தற்போது தேசிய ஒருமைப்பாட்டை நடைமுறையில் உண்மையாக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. தேசியக் கல்வி ஆராய்ச்சி பயிற்சி நிறுவனம் மாணவர்கள் பரிமாற்றம், ஆசிரியர்கள் பரிமாற்றம்மூலம் பல கூட்டுப் பயிற்சி ஏற்பாடுகள் செய்து வருகிறது. அதைத்தவிர மாநிலங் களுக்கிடையே கலாசாரக் குழுக்கள் பறிமாறிக்கொள்ளப் படுகின்றன. இதைச் செய்கின்ற டில்லியில் உள்ள சாகித்ய அகடாமி ஒவ்வொரு மொழியிலும் உள்ள மிகச் சிறந்த புத்த கங்கள், நாடகங்கள், திரைப்படங்கள் இவைகளுக்குப் பரிசு வழங்கி கௌரவிப்பதோடு இசை, நாட்டியம், நாடகம் முதலிய துறைகளிலும் சிறந்தவர்க்குப் பரிசளித்துக் கௌரவிக்கிறது.

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு நம்மில் ஒற்றுமை நீங்கிடின் அனைவர்க்கும் தாழ்வு' என்பதை நாம் மறக்கக் கூடாது. நம் நாட்டுத் தந்தை மகாத்மா காந்திஜி அவர்கள் கொடுத்த மணியோசையான 'இந்தியா ஒன்று' என்பதையும் நாம் மறக்கக்

கூடாது. மாநில மக்கள், தங்களது மொழி, தங்களது முன்னேற்றம் என்பவற்றைப்பற்றி மட்டும் சிந்தியாமல் இந்தியாவின் வளத்திற்கும், செல்வச் செழிப்பிற்கும் உதவிக்கரம் நீட்ட வேண்டும். நடுவண் அரசு வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மொழி, சமயம் முதலிய வேறுபாடுகளைக் கருதாமல் நாட்டில் உள்ள பின்தங்கிய பிரதேசங்களுக்கு நியாயமாகப் பல நிதி உதவிகளைச் செய்கிறது. தேசிய ஒருமைப்பாடு என்கிற சுவரை இடிக்கும் நம்மைப் பிரிக்கும் குறுகிய பிராந்தியநலன்கள் மறைந்து நாம் அனைவரும் ஒரு குலம், ஓரினம், எல்லோரும் பாரதத் தாயின் மக்கள் என்ற எண்ணம் ஏற்படவேண்டும். இதுவே தேசிய ஒருமைப்பாட்டிற்குச் சிறந்த வழியாம்.

## பயிற்சி

I. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் ஐந்து அல்லது ஆறு வரிகளில் விடையளி:

1. சுதந்தரத்திற்குப் பின் இந்தியாவை எதிர்நோக்கி இருந்த பிரச்சினைகள் யாவை ?
2. மக்கள்தொகை வெடிப்பு எவ்வாறு மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பாதிக்கிறது ?
3. பசுமைப் புரட்சி என்றால் என்ன ?
4. நம் இராணுவப் படையின் வகைகளைக் கூறுக.
5. சீனாவோடு நம் உறவினை விளக்குக.
6. தாஷ்கன்ட் ஒப்பந்தத்தில் முக்கிய ஷரத்து யாது ?
7. பங்களாதேஷ் உருவாவதற்கு இந்தியா எவ்வாறு உதவியது ?
8. தேசிய ஒருமைப்பாட்டின் முக்கியத் தன்மைகள் யாவை?

II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைத் தகுந்த வார்த்தை கொண்டு பூர்த்தி செய்க:

1. 1981ஆம் ஆண்டு மக்கள்தொகை கணக்குப்படி இந்தியாவின் மக்கள்தொகை சுமார் ———— மில்லியன்கள்.

2. தாஷ்கன்ட் ஒப்பந்தம் கையெழுத்தானபோது இந்தியாவின் பிரதம மந்திரி ———.

3. தற்சமயம் இந்தியாவின் பிரதம மந்திரி ———.

4. 'கச்சத்தீவு' பிரச்சினை என்பது ———, ——— நாடுகளுக்கிடையே ஏற்பட்ட பிரச்சினையாகும்.

III. பின்வரும் வினாக்களுக்கு நான்கு மாற்றுவிடைகளில் சரியான விடையை எடுத்து எழுது:

1. சிவப்பு முக்கோணம் குறிப்பிடுவது.

(அ) அளவான குடும்பம் ( )

(ஆ) தொழில் முன்னேற்றம்

(இ) உடை முன்னேற்றம்

(ஈ) விவசாய முன்னேற்றம்.

2. வெண்மைப் புரட்சி குறிப்பிடுவது.

(அ) தூய்மை இயக்கம் ( )

(ஆ) அதிகக் குடிநீர் வசதிகள்

(இ) பால், பால் பொருள் அதிக உற்பத்தி

(ஈ) கோழி வளர்த்தல்.

3. நம் தரைப்படையின் தலைமையகம்.

(அ) பெங்களூர் ( )

(ஆ) ஹைதராபாத்

(இ) புது டில்லி

(ஈ) கல்கத்தா.

4. பஞ்சசீலக் கொள்கைகளை இந்தியாவிற்கு அளித்த பிரதமர்.

(அ) லால்பகதூர் சாஸ்திரி ( )

(ஆ) இந்திராகாந்தி

(இ) ஜவஹர்லால்நேரு

(ஈ) மொரார்ஜி தேசாய்.

IV. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் பதினைந்து வரி களுக்கு மிகாமல் விடையளி:

1. இந்தியாவின் மக்கள்தொகைப் பிரச்சினை என்றால் என்ன? அதனை தீர்க்க எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கை கள் யாவை?

2. இந்தியா உணவுப் பிரச்சினையை எவ்வாறு தீர்க்க முயலுகிறது?

3. தேசிய ஒருமைப்பாட்டினை நாம் எவ்வாறு ஏற்படுத்தலாம்?

4. இந்தியா கௌரவத்தோடு கூடிய சமாதானம் என்கிற அயல்நாட்டு இயல் முறையைக் கடைபிடித்து வருகிறது என்பதனை விளக்கிக் காட்டு.

# 19. இந்தியப் பண்பாடு

## புவியியல்-பண்பாட்டு ஒருமை நாடாக இந்தியா

### அறிமுகம்

இந்தியாவின் இயற்கை அமைப்புகளும், பிற புவியியல் அம்சங்களும் பல வேற்றுமைகளோடு காணப்பட்டாலும், இந்திய உபகண்டம் ஒரு தனித்த புவியியல் அலகாகும். இந்தியாவை சூழ்ந்து வடக்கேயும் வடமேற்கேயும் வடகிழக்கேயும் மாமலைச் சுவர்களும், பிறபக்கங்களில் பெருங்கடல்களும் அமைந்துள்ளன. இப்பழம்பெரு நாடு மிகப்பண்டைக் காலத்திலிருந்தே இங்குவந்து தங்கிய பலவகைப்பட்ட இனங்களின், மக்களின் தாயகமாக விளங்கி வந்திருக்கிறது. எனவே, விரிந்து பரந்த இவ்வுபகண்டத்தில் ஒன்றாக வாழ்ந்ததன் காரணமாக அவர்கள் 'இந்தியப் பண்பு' என்கிற ஒரு பொதுவான கலாசார அமைப்பை உண்டாக்கியிருக்கிறார்கள். மேலும், இந்தியாவை தங்கள் எல்லோருடைய பொதுத் தாயகமாகவும் எண்ண ஆரம்பித்தார்கள். இவ்வுணர்ச்சி பூர்வமாக எழுந்த எண்ணம், இந்தியா-பாகிஸ்தான் எனப் பிரிந்துவிட்ட பின்னரும், நின்று நிலவி பல்லாயிரக்கணக்கான மக்களின் மனப்போக்கில் செல்வாக்குப்பெற்றுத் திகழ்கின்றன.

மேற்குறிப்பிட்ட இந்திய கலாசாரத்தில் (பண்பாட்டில்) அதன் வளைந்து கொடுக்கும் தன்மை மிக முக்கியமானது என்பது தெரியவருகிறது. நீண்ட நெடு நாட்களுக்கு முன்னமேயே, இந்நாட்டில் இருந்த பல்வேறு சமயங்கள் தங்களுக்குள் கருத்துப் பரிமாற்றமும், ஒன்றன்கருத்தை மற்றது ஏற்பதுமான தன்மையுடையதாய் இருந்தன. பல்வேறு மொழிகளைப் பேசுகின்ற மக்கள் அமைதியுடனும், அன்புடனும், ஒருவரையொருவர் புரிந்துகொண்டும் ஒன்றாக வாழ்ந்திருக்கிறார்கள். ஆரிய, திராவிட, கிரேக்க, பாரசீக இஸ்லாமிய, ஐரோப்பிய பண்பாடுகளின் இணைப்பு இந்திய பண்பாட்டில் ஏற்பட்டிருக்கிறது. அந்நியர்களாயிருந்த போதிலும் குஷானர்களும், சாகர்களும், ஹூணர்களும் இந்திய சமுதாயத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்று நம் பண்பாட்டின் செழிப்பிற்கு உதவியிருக்கின்றனர். ஆங்கில ஆட்சியின் காரணமாக இந்திய சமுதாயத்தில் ஆங்கிலோ-இந்தியர்களும், இந்தோ-போர்ச்சுக்கீசியர்களும் அங்கங்களாக நம் கலாசாரத்தோடு இணைந்தனர்.

அறிவுத்துறையில், தன் சூழ்நிலைக்கேற்ப, இந்திய பண்பாடு பல அந்நிய கோட்பாடுகளையும் ஏற்றுக்கொண்டுள்ளது. வான சாத்திரம், சோதிட சாத்திரம், கணிதம் முதலியவற்றில் ஏற்கெனவே நம் நாடு கிரேக்கர்களிடமிருந்தும், அராபியர் களிடமிருந்தும் பெற்ற அறிவினைக் குறிப்பிட்டிருக்கிறோம். அராபியர்களிடமிருந்து 'அல்ஜீப்ராவை' அறிந்து கொண்டோம். 'காந்தாரக் கலை' இந்திய கிரேக்கக் கலைகளின் கலவை என்பதை நாம் அறிவோம். முஸ்லிம் அரசர்கள் ஆட்சி காலத்தில் இந்திய கட்டடக்கலை பல மாற்றங்கள்பெற்று, இந்திய அடிப்படையில் பாரசீகக் கட்டடக்கலைத் தன்மையைப் பெற்றது. மேனாட்டுக் கலாசாரத்தின் பல நல்ல அம்சங்களையும் இந்திய பண்பாட்டில் நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம்.

இந்திய பண்பாட்டில் மற்றொரு முக்கியச் சிறப்பியல்பு, அதன் சகிப்புத் தன்மை உணர்வாகும். பல்வேறு சமயங்களும், பிறநாட்டுக் கலாசநரங்களும், நம் நாட்டுக் கலாச்சாரமும் ஒன்றி உருவாகியதே நம் இந்திய பண்பாடாகும்.

நம் கலாசாரத்தின் மற்றொரு முக்கியத்தன்மை நம் ஆன்மீக அறிவும், விவேகமும் ஆகும். இந்தியா முழுக்க முழுக்க உலகப் பொருளின்பம் நாடும் நாடல்ல. பண்டைக் காலத்து முனிவர் களிலிருந்து மகாத்மா காந்திவரை, அனைவரும் 'இறுதி உண்மைப் பொருள் யாது?' என்பதனைக் காண முயன்றிருக் கிறார்கள். தாம் கண்ட உண்மைகளைச் சோதனை செய்து பார்த்து, அனைவரும் அவைகளைப் பின்பற்றிநடக்க வகை செய்திருக்கிறார்கள்.

நம் இந்திய நாட்டுப் பண்பாட்டின் மற்றொரு முக்கியத் தன்மை, அதன் 'வேற்றுமையில் ஒற்றுமையாம்.' நம் இந்திய நாட்டில், மிக உஷ்ணமான பாலைவனப் பிரதேசத்திலிருந்து மிகக் குளிர்ச்சியான தட்ப வெப்ப நிலையுள்ள இடங்கள் வரையிலும், வளமிகுந்த ஆற்றுச் சமவெளிகளிலிருந்து வறண்ட தார்பாலைவனம் போன்ற பல்வேறு பிரதேசங்கள் காணப் படுகின்றன. இடத்துக்கு இடம் மக்கள் நிலை, வாழும் முறை, பழக்க வழக்கங்கள், பேசும் மொழியிற்கூட வேறுபடுகிறார்கள். இவ்வாறு மக்களிடையே சாதி, இனம், சமயம், வாழ்க்கைமுறை ஆகியவற்றில் வேற்றுமைகள் காணப்பட்டாலும் புவியியல் முறைப்படியும், அரசியல் முறைப்படியும் இந்தியா நம் ஒரே நாடாகிய 'பாரதம்' ஆகும்.

இலக்கியம், கலை, சமூகசேவை, சமயம், அரசியல் போன்ற பல துறைகளில் சிறப்புப்பெற்ற பலர் இந்தியா முழுவதற்கும்

சொந்தமாக, பிரதேச வேறுபாடின்றி போற்றப்படுகிறார்கள். திருவள்ளுவர், காளிதாசர், கம்பர், துளசிதாசர், இரவீந்திரநாத் தாகூர், பாரதியார் ஆகியோர் இந்தியாவின் பேரறிஞர்கள், கவிகள் ஆவர். இந்துஸ்தானி சங்கீதம், கர்நாடக சங்கீதம், தமிழ் இசை, பரத நாட்டியம், கதகளி, மணிபுரி, குச்சுப்புடி முதலிய நாட்டியங்களும் இந்தியாவின் பொதுக் கலைச் செல்வ மாகும். வட இந்தியாவிலும், தென் இந்தியாவிலுமுள்ள பத்ரிநாத், கேதார்நாத், காசி, கயை, பூரி, இராமேஸ்வரம், மதுரை, திருவரங்கம் போன்ற புனிதத் தலங்கள் இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவானவை. இந்தியாவின் பல்வேறு பாகங்களிலிருந்து மக்கள் இவற்றைக்காணச் செல்லுகிறார்கள். ஆக்ராவின் தாஜ்மகால், டெல்லியின் செங்கோட்டை, பிஜப்பூரில் கோல் கும்பாஸ், தஞ்சை, மதுரை கோயில்கள், மாமல்லபுரத்தின் இரதங்கள் சிற்பங்கள் முதலியன இந்திய வரலாற்றில் புகழிடம் பெற்றுள்ளன.

ஒரே சீரான பொருளாதார வளர்ச்சி நம் நாட்டின் ஒற்றுமைக்கு வலுவூட்டும். நாம் நவீன யுகத்தில் வாழ்கிறோம். நமது அரசியல், பொருளாதார, சமூகச் சிந்தனைகளும் கருத்துகளும் ஜனநாயக வாழ்க்கை முறைக்கேற்ப அமைத்துக் கொண்டுள்ளன. நமக்கு மாநில சுயாட்சியில் நம்பிக்கை உண்டு. ஆனால், அவை அகில இந்தியாவின் ஒற்றுமையையும், நடுவண் அரசின் வலிமையையும் உறுதி செய்யக்கூடிய அகில இந்திய அரசு இய்ல் முறைக்குள் அடங்கி இருத்தல் வேண்டும். நம் பொருளாதார இயல் முறைகள் இந்தியாவில் எந்தப் பகுதியும் 'பின்னடைந்த நிலையிலேயே இருப்பதைத் தவிர்க்கும்' நோக்கத்தோடு உருவாக்கப்படுகிறது. நமது சமூக பொருளாதார இயல் முறைகளின் முக்கிய நோக்கம் 'எந்தப் பகுதியும், எந்த இனமும் எக்காரணத்தைக் கொண்டும் நிரந்தரமாகப் பின்னடைந்த நிலையில் இருக்கக்கூடாது என்பதேயாம்'. இந்த இலட்சியங்களை நோக்கி நடைபோடும் அதே வேளையில், இந்நாட்டின் பழம்பெரும் பாரம்பரியமான 'வேற்றுமையில் ஒற்றுமை' என்ற தன்மையை நிலையாக வைத்துக்கொள்வோம். இருக்கின்ற வேற்றுமைகளைக் களைவது நம் இந்திய அரசின் நோக்கமல்ல. அது 'ஒருங்கிசைந்த' வாழ்வில் அசையா நம்பிக்கை வைத்துள்ளது. அரசியல் நிர்வாக வசதிக்காக நாட்டைப் பல்வேறு மாநிலங்களாகப் பிரித்தபோதிலும் பண்பாடும் புவியியலும் நாட்டை ஒன்றாக இணைத்துக் காட்டுகின்றன. இந்து கலாசாரத்தையும், முஸ்லிம் கலாசாரத்தையும், கிறித்துவ கலாசாரத்தையும் தனிப்படுத்தி பெரிதாக்காமல்,

இவை அனைத்தும் சேர்ந்த இந்திய கலாசாரத்தையே நாம் முக்கியமாகப் பெருமையாகக் கருதுகிறோம். இந்நாட்டின் மிக உயர்ந்த பதவிகளில் இந்துக்களும், முஸ்லிம்களும், கிறித்துவர்களும், சீக்கியர்களும் இருந்திருக்கிறார்கள். இன்றைய இந்நாட்டு ஜனாதிபதி திரு. ஜெயில்சிங் ஒரு சீக்கியரே.

நாம் நாட்டின் எப்பகுதியில் வசித்தாலும், எம்மொழி பேசினாலும், எச்சமயத்தைப் பின்பற்றினாலும் முதலிலிருந்து கடைசிவரை இந்தியர்களே. நம்மை இணைத்து ஒன்றுபடுத்தும் சக்தி இந்திய நாட்டிற்கு விசுவாசமாய் இருத்தலே. பண்பாட்டால் ஒன்றாக்கப்பட்ட இந்தியாவிற்கு விசுவாசமாக இருந்த தன்மையே அனைத்து மக்களையும் ஒன்றுபடுத்தி, போராட்டம் நடத்தி, சுதந்தரத்தைப் பெற்றுத்தந்தது. இந்த நிலையில் எந்தவித மாற்றமும் இல்லை. இதனால், இந்தியாவின் ஐக்கியம் எவ்வகையிலும் பாழாக்கப்படக்கூடாது. நம் தேசத் தந்தை மகாத்மா காந்தியின் தலைமையில் உயர்வு தாழ்வு வேற்றுமையின்றி அனைத்து மக்களும் ஒன்று சேர்ந்து நடத்திய விடுதலைப் போராட்டத்தின் நினைவு எப்போதும் நம்மை ஒன்றுபடுத்தும் சக்தியாக விளங்கும். தங்கள் சுதந்தரத்தைக் காக்க மக்கள் எப்பொழுதும் விழிப்புடன் இருந்தால், இந்தியா எப்போதும் தலைநிமிர்ந்து உலக அரங்கில் பீடுநடைபோடும். இதற்கான முக்கிய நிபந்தனை தாங்கள் இந்தியர்கள் என்றும், இந்தியா தங்கள் தாய்நாடு என்றும் மக்கள் உறுதியாகப் பலமாக உணர வேண்டும். இந்நிலையில் வேற்றுமைக்கூறுகள் இருந்தபோதிலும், எல்லா மக்களும் ஒருங்கிணைந்தால்தான் சமாதான சகவாழ்வு பெற்று வளமாக வாழமுடியும்.

பாரத நாடு—நம்
தாய்த்திரு நாடு
நீரதன் புதல்வர்—என்றும்
இந்நினை வகற்றாதீர்

—பாரதியார்

## பயிற்சி

I. பின்வரும் வினாக்களுக்கு ஐந்து அல்லது ஆறு வரிகளில் விடை அளிக்கவும்:

1. இந்தியப் பண்பாட்டின் தன்மையைச் சுருக்கமாகக் குறிப்பிடுக.

2. சகிப்புத் தன்மை இந்தியப் பண்பாட்டில் இரண்டறக் கலந்திருக்கிறது என்பதற்கு இரண்டு உதாரணங்கள் கொடு.

3. நாம் எவ்வாறு இந்தியாவின் ஒற்றுமையைக் கட்டிக் காக்க முடியும் ?

II. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களைப் பொருத்தமாக நிரப்புக :

1. நம் தேசிய ஒருமைப்பாட்டிற்கு ——— உணர்ச்சி மிகவும் முக்கியமானது.

2. அல்ஜீப்ராவை நாம் ———ரிடமிருந்து பெற்றோம்.

III. பின்வரும் வினாக்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நான்கு மாற்று விடைகளில் சரியானதைத் தேர்ந்தெடுத்து வலப்புற பிறையடைகளில் இடுக :

1. நம் நாட்டின் ஒருமைப்பாட்டைக் கட்டிக்காக்க உதவுவது

(அ) தாய்மொழிப்பற்று ( )
(ஆ) பிரதேச பொருளாதார முன்னேற்றம்
(இ) தாய்நாட்டு அன்பும் விசுவாசமும்
(ஈ) இறையன்பு

2. இந்தியா இமயமுதல் குமரிவரை ஒன்று என்ற கோஷத்தைக் கொடுத்தவர்

(அ) லாலா லஜபதிராய் ( )
(ஆ) இராஜேந்திர பிரசாத்
(இ) மகாத்மா காந்தி
(ஈ) பண்டித் ஜவஹர்லால் நேரு

IV. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் 15 வரிகளில் விடையளி :

1. இந்தியா 'வேற்றுமையில் ஒற்றுமையுள்ள' நாடு என்பதனை விளக்குக.

2. தேசிய ஒருமைப்பாடு என்றால் என்ன ? இதனை ஏற்படுத்த நடுவண் அரசும், மாநில அரசுகளும் எவ்வாறு செயல்படுகின்றன ?

## இந்திய வரலாற்று முக்கிய நிகழ்ச்சிகளும் காலமும்

| | | |
|---|---|---|
| கி.மு. | 3250-2750 | சிந்து சமவெளி நாகரிகம் |
| ,, | 2000 | ஆரியர்களின் இந்திய வருகை |
| கி.பி | 78-120 | குஷாண அரசர் கனிஷ்கர் ஆட்சி |
| ,, | 300-600 | குப்தப் பேரரசு |
| ,, | 606-647 | ஹர்ஷரது ஆட்சி |
| ,, | 630-643 | யுவான் சுவாங் இந்திய வருகை |
| ,, | 630-668 | முதலாம் நரசிம்ம பல்லவராட்சி |
| ,, | 712 | அராபியர் சிந்துவை வெல்லல் |
| ,, | 985-1014 | சோழப் பேரரசர் இராஜராஜன் ஆட்சி |
| ,, | 1288-1295 | மார்கோ போலோவின் பாண்டிய நாட்டு வருகை |
| ,, | 1336-1565 | விஜயநகரப் பேரரசு |
| ,, | 1347-1526 | பாமினிப் பேரரசு |
| ,, | 1526-1707 | மொகலாயப் பேரரசு |
| ,, | 1526 | முதலாம் பானிபட் போர் |
| ,, | 1556 | இரண்டாம் பானிபட் போர் |
| ,, | 1565 | தலைக்கோட்டைப் போர் |
| ,, | 1828 | பிரம்ம சமாஜ் அமைப்பு |
| ,, | 1857 | முதல் சுதந்தரப் போர் |
| ,, | 1875 | ஆரிய சமாஜம் அமைப்பு |
| ,, | 1885 | இந்திய தேசியக் காங்கிரசு தோற்றம் |
| ,, | 1905 | வங்கப் பிரிவினை |
| ,, | 1906 | முஸ்லிம் லீக் அமைத்தல் |

| | | |
|---|---|---|
| கி.பி. | 1907 | சூரத் காங்கிரசு |
| ,, | 1909 | மிண்டோ-மார்லி சீர்திருத்தங்கள் |
| ,, | 1919 | மாண்ட் போர்டு சீர்திருத்தங்கள் |
| ,, | 1920 | ஒத்துழையாமை இயக்கம் |
| ,, | 1927 | சைமன் கமிஷன் |
| ,, | 1929 | லாகூர் காங்கிரசு |
| ,, | 1930 | சட்டமறுப்பு இயக்கம் |
| ,, | 1931 | காந்தி-இர்வின் ஒப்பந்தம் |
| ,, | 1942 | வெள்ளையனே வெளியேறு இயக்கம் |
| ,, | 1942 | கிரிப்ஸ் மிஷன் |
| ,, | 1946 | காபினெட் தூதுக் குழு |
| ,, | 1947 ஜூன் 3, | மௌண்ட்பேட்டன் திட்டம் |
| ,, | 1947 ஆகஸ்டு 15, | இந்தியா சுதந்தரம் அடைதல் |
| ,, | 1950 ஜனவரி 26, | இந்தியா குடியரசு ஆதல் |
| ,, | 1951-56 | முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1956 | மாகாணச் சீரமைப்புச் சட்டம் |
| ,, | 1956-61 | இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1962 | சீனாவின் ஆக்கிரமிப்பு |
| ,, | 1961-66 | மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1965 | இந்தியா பாகிஸ்தான் போர் |
| ,, | 1966 ஜனவரி 10, | தாஷ்கன்ட் உடன்படிக்கை |
| ,, | 1966-67 | முதல் ஓராண்டு திட்டம் |
| ,, | 1967-68 | இரண்டாம் ஓராண்டு திட்டம் |
| ,, | 1968-69 | மூன்றாம் ஓராண்டு திட்டம் |

| | | |
|---|---|---|
| கி.பி. | 1969 ஜூலை | வங்கிகள் தேசிய உடைமையாக்கப் படல் |
| ,, | 1969–74 | நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1974–79 | ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் |
| ,, | 1975 | அவசரநிலைப் பிரகடனமும் 20 அம்சத் திட்டம் அமுலுக்கு வருதலும் |
| ,, | 1982 ஜூலை | தமிழக அரசின் குழந்தைகளுக்கான 100 கோடி சத்துணவுத் திட்டம். |
| ,, | 1982 ஜூலை 24, | ஏழாவது ஜனாதிபதியாக திரு. ஜெயில்சிங் பதவி ஏற்றல். |

